வேறு.

அவ்வனஞ் செய்ப தாக வருந்தவ வுழவர் யாரு
மெய்வரும் விதியேர் பூட்டிச் சமிதைவித் தெறிந்து வேழக்
கைவரு பருமை நெய்யாம் புனல்சொரிந் தநேக காலஞ்
சைவவை திகவே ளாண்மைச் சத்திர மகங்கள் செய்தார். (கூ)

பண்ணிய தவங்க டானம் பரிவினாற் புரிவார்க் கன்றிக்
கண்ணினாற் கண்டு ளார்க்குங் கதியெனும் விதியை யோர்ந்து
நண்ணிய கலைகள் யாவு நவின்றருள் சூத னன்னோர்
புண்ணிய வேள்விச் சாலை புகுந்தனன் முனிவர் சூழ. (க0)

பொருந்தவச் சூதர் சூழாப் புலன்மகத் தேர்ந டாவி
யிருந்தவச் சூதர் போலு மிருடியர் வருடி யேத்தி
வருந்தவச் சூதன் றன்னை மாதவ வியாத னென்னும்
பெருந்தவச் சூதஞ் சேர்ந்த பேரிசைக் குயிலைச் சூழ்ந்தார். (கக)

ஆசனத் திருத்தி வாழ்த்தி யருக்கிய முதல நல்கிப்
பூசனை புரிந்தி யாங்கள் புரிமகந் தொடுத்த காலை
வாசனை முகூர்த்த மன்றோ வந்தனை பெரியோ யென்று
நேசனை வினவிக் கேட்பார் நிறைதரு புராண மெல்லாம். (கஉ)

பண்ணியல் பலபு ராணம் பகர்ந்தபின் பதிநா லென்ன
வெண்ணியல் சிவபு ராண மீரைந்தி லிலக்க மாக
நண்ணிய காந்தந் தன்னி னன்னகர்த் திருக்குற் றாலப்
புண்ணிய புராண மெங்கள் புந்தியி லுவட்டா தென்றும். (கந)

அன்னதைச் சுருக்க மாக வறைந்தனை யடுநோய் தீர்ப்பான்
முன்னுமந் திரத்தை யோதி மூலம்வித் தறியார் போலப்
பன்னரும் பலநூல் கேட்டுந் தவிர்ந்திலம் பதிமேற் றாகு
நன்னகர்ப் புராண மின்னு நன்கெமக் கருள்வா யென்றார். (கச)

மோனரீ துரைப்பச் சூதன் மொழிகுவான் மூக்க ணார்க்குத்
தானமே யனந்த மாகு மனைகளிற் றவப்பூ வின்பத்
தேனயர் திருக்குற் றாலஞ் சிவரக சியமா மீது
ஞானபக் குவத்தார்க் கன்றி யாவர்க்கு நவிலொ ணாதால். (கரு)

தன்மகன் முதலோ ராறு தகையர்நூற் குரிய ரேனு
முன்னவர் களிய ராதி மூவைந்து திறத்தார்க் கோதார்
சொன்னநா லிருவ ருள்ளுந் தூயவர் நால்வர் தம்மி
லன்னமே யனைய ரானீர் பால்பிரித் தறிந்த வாற்றால். (கசா)

அதிகராந் தேவ ராலு மறிவதற் கரிதா முண்மை
மதிவலி நலத்தி னாலே வினவுதல் வல்ல ரானீர்
பதிமுத லுரைத்த மூன்றிற் பரமெனும் பொருளைச் சேரும்
விதிவலி யுடையீர் நீரே யென்றுமேல் வியந்து சொல்வான். (கஎ)

வேறு.

சீர்பெருகு காந்தமெனுஞ் சிவபுரா ணச்செழுஞ்சங் கிதைகளாறிற், கார்பெருகு குழலுமையாட் கெம்பிரா னுரைத்தருள்சங்கரசங் கிதை, யேர்பெருகுந் திருமடிமே லிருந்தருளிக் குமரதேசிகனெங் கோமா, னோர்பெருக வுணர்ந்துகும்ப சம்பவனுக் குபதேசநிகழ்த்தி னான். (கஅ)

மாதவரி லுயர்மலய மாமுனிவ னதையுணர்ந்து வகைமைசாலப், பூதலத்தி லுணர்த்தியதா லகத்தியசங் கிதையெனவும் புகல்வர் மேலோர், ரீதலது சனற்குமார சங்கிதையுந் தருபொருளா மெழிற்செவ் வான, மீதிலெழு மதிபோலுங் குற்றமில மகிமையென வியந்து போற்றி. (கக)

விரிகூடக் கம்பகும்பக் களிறுபிளி றிடவுரித்து விரித்து வேங்கை, யுரிகூட வுடுத்தருளி நடித்தருளுஞ் சிவபெருமா னுலக மீன்றாள், புரிகூடுந் திருமணத்தின் பொருட்டாகக் குறுமுனிக்குப் புகன்ற காதை, திரிகூடத் தலமகிமை திரிகூட வரைமுதலாச் செப்புகின்றான். (உ0)

௪-புராண வரலாற்றுச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—கஅ0.

## ஐந்தாவது:—திரிகூடமலைச் சருக்கம்.

சீத யாழிசைக் கின்னரர் கானமுஞ்
காதல் விஞ்சையர் பண்ணிசை கானமுஞ்
சீத மால்வரைத் திங்குரற் கானமும்
வேத கானமு மிக்கது திக்கெலாம். (க)

முழைக டோறு முனிவர் குழாங்களே
யுழைக டோறு முயர்மகச் சாலையே
கழைக ளேவுங் கதிர்மணி முத்தமே
மழைக ளேவு மஞலியை மானுமே. (உ)

பந்தி பாய்முகில் பாய்மத மாவெனத்
தந்தி பாயுமத் தந்தியை வெற்பென
மந்தி பாயுமம் மந்திகள் பாய்தல்போ
லுந்தி பாயு முயர்வரைச் சார்பெலாம். (ங)

கான யாறுங் கடிமலர்ச் சோலைவாய்த்
தேன யாறுந் திசைபொரு கைமலைத்
தான யாறுந் ததைவன சோனையும்
வான யாறும் யமுனையு மானுமே. (ச)

செருவி லார்த்தெழு தேன்பொரத் தேனிரு
லருவி யார்த்திட வார்த்திடு மைவன
மிருவி யார்க்கும் புனத்தினு மெண்ணிலாக்
குருவி யார்ப்பக் குரல்பரந் தார்க்குமே. (ரு)

குமுத மொத்த விதழ்க்குறக் கோதைமார்
கமுக நெற்றிக் கறிபடர் முன்றில்வாய்
விமுதி னைக்கு விலையென நோக்குகே
நமுதி னைச்சுர மாத நளப்பரால். (சா)

வேறு.

சீர்மலி படிகப் பாறை பத்திபாச் செல்வான் மீனை
நீர்தரு கயல்போற் கொத்து நிறைதரு மடப்புள் வீட்ட

சூர்மணிச் சுடிகைப் பாந்த ளூற்கையென் றாதி யூதிக்
கூர்மலி குளிர்க்குத் தீப்போற் காய்வன கிழக்கூன் மந்தி. (எ)

நகிலெழும் புகைபார்க் கென்ன நனிகெழு பொருப்பின் மாத
ரகிலெழும் புகையும் வேட ரடுபுனத் தகருச் சாந்த
மிகிலெழும் புகையும் வேத வேள்வியின் புகையும் விண்மேன்
முகிலெழும் புகைபோன் மொய்ப்ப முகிழ்ப்பர்வா னவரு நாட்டம்.

ஆழ்புன லருவி யாரபு மந்தண ரைந்து நூறு
வேள்வியி னார்ப்பு மேலை விண்ணவ ரார்ப்பு மாதர்
வாழ்புனக் கவண்கல் லார்ப்பு மணிவரை யார்ப்பு மாங்கே
யூழ்வலி கடக்கின் றூர்போ லுருமொலி கடக்கு மாதோ. (கூ)

மழைதரு முத்தும் வான மதிதரு முத்து நீண்ட
புழைதரு பணைக்கை நீலப் பொருப்பின்மா மருப்பின் முத்துங்
கழைதரு முத்து மேனக் களிறுகோ டுகுத்த முத்தும்
விழைதர வொளிருஞ் சாரன் மீனொளிர் வான மேய்க்கும். (க0)

வேறு.

சோலை காட்டுந் துதையிரு ளாலிரு
வேலை காட்ட விலாமையின் மெய்த்தவர்
காலை காட்டுவ வாவிக் கமலங்கள்
மாலை காட்டு மலர்தரு காவியே. (கக)

மாக மேனகை மங்கை யுருப்பசி
மோக நாடகம் பார்ப்பதின் மொய்த்தெழார்
தோகை மாமயி லாடலைச் சோலைவாய்
மேக மேனின்று பார்ப்பர்விண் ணோரெலாம். (கஉ)

மலைக டாவு மருவிகள் வானதித்
தலைக டாவுந் தலைமதி மானின்மேற்
கலைக டாவுங் ககனத்து மேடைமே
னிலைக டாவு நிரைவரை யாடரோ. (கங)

கோல மாங்குயில் காவினிற் கூவுத
லால முண்டவ னிக்குள னாதலாற்

றாலம் வானந் தடவப் பெரீரென
மால யன்றனைக் கூவுதன் மானுமே. (கச)

அருவி யாடிக் கரைபுகு வார்க்கண்டர்
தருவி மானமொப் பாமலர்ச் சண்பக
மருவி மாருதத் தாலுகு மாமலர்
பொருவில் வானவர் பூமழை போலுமால். (கரு)

சால மாநற வம்பணை சாதியே
சால மாநற வம்பணை சாதியே
யேல மார மிலவங்க நாறுமே
யேல மார மிலவங்க நாறுமே. (கசு)

கானத் தும்பி கடாங்கவிப் பாலெழு
கானத் தும்பி கடாங்கவிப் பாலெழத்
தானத் தும்பர் களிற்றொடுந் தாக்குகைத்
தானத் தும்பர் களிற்றொடுந் தாக்குமே. (கஎ)

கனமு ழக்குவ கான மடங்கலும்
கனமு ழக்குவ கான மடங்கலும
வனம டுத்துறை மாகய மொன்றுமே
வனம டுத்துறை மாகய மொன்றுமே. (கஅ)

வண்டி னங்கண் மலர்வன சம்மதில்
வண்டி னங்கண் மலர்வன மாதரார்
கண்டு ளக்கு முகத்தலங் காட்டுமே
கண்டு ளக்கு முகத்தலங் காட்டுமே. (கசு)

மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
நாவி னித்த நவிற்றுவ வாசகம்
நாவி னித்த நவிற்றுவ வாசகம். (உ0)

கோட ரங்குயி லொடுங் குலமரக்
கோட ரங்குயி லொடுங் குலமயி
லாட ரங்க மறையு மருவியே
யாட ரங்க மறையு மருவியே. (உக)

வான ரம்பையின் மாவிற் பலவின்மேல்
வான ரம்பையின் மாவீற் பலவின்மேல்
வான ரம்பையின் மாமயில் யாழ்செய
வான ரம்பையின் மாமயி லாலுமே. (உஉ)

பூண்ட வாது புணர்முலை யார்நகை
பூண்ட வாது புணர்முலை யார்பட
ராண்ட சோக மமரரு நீழல்வா
யாண்ட சோக மமரரு மெய்துவார். (உ௩)

வேறு.

நன்றலயர் பெருவளங்க ளில்லைகையால் வளர்ந்தோங்கி
நின்றலைய சடையார்க்கு முமைக்கும்விய னுடரங்காய்த்
தன்றலைபில் வந்தடுத்தோர் தவம்வளர்த்துச் சிவம்வளர்க்குந்
தென்றலையும் வளர்க்குமந்து செண்பகப்பூந் தடங்காவே. (உச)

மற்றூரும் புகழ்கயிலை வடமலைவிட் டெம்பெருமான்
முற்றூத களபமுலை முதல்வியுட னுறையுமிடங்
குற்றாலத் திருநகருங் குளிர்மலர்ச்செண் பகக்காவுந்
தெற்றூக வுடையமலை திரிகூடத் திருமலையே. (உரு)

பூவருக்க முதலாய புவனமெலாம் படைத்தளிக்கு
மூவருக்கு முளைக்குமிட மாதலான் முதுமறைகண்
மாவருக்கை யாய்முளைத்து மாதவஞ்செய் மகிமையிறைற்
றேவருக்குந் தெரிவரிதாந் திரிகூட வரைமூலம். (உசா)

வேறு.

தெய்வ முத்திரைக் காவென வளிபடாச் செண்பகப் பொழி லென்னுங், கைவ சப்படத் தகைந்துபைந் தாதிறைற் கமழ்திரு நீறு ட்டி, மைவ னத்துறை நாளின்மேற் கோளின்மேல் வானின்மேல் வானோர்மேற், சைவ முத்திரை சாத்துமுத் தலைக்கிரி தண்டமிழ்த் திரிகூடம். (உஎ)

என்று காப்பது மழிப்பது மறைப்பது மிதற்குமேல் விளையாட்டு
மான்ற பல்வகைக் காரண காரிய மவையெலா முறைதோன்றத்

தோன்று காலமுங் கணிதமுங் கடந்ததோர் சுடர்முளைத் திடுநாள்
மூன்று காலமுந் தன்னிடை முளைத்திட முளைத்தது திரிகூடம். ()

தம்மை யேதமக் கறியொணா திருளெனச் சமைந்தமும் மலமோடச்
செம்மை யேமுதன் முச்சுட ரெறிப்பது செனனசஞ் சிதமேய
வும்மையே கொடுத்திம்மையே மறுமையே யுயங்குமுப் பவநோய்க்கு
மும்மை யேய்மணி மந்திர மருந்தென முளைத்தது திரிகூடம். (௨௯)

பின்னு செஞ்சடை யெம்பிரா னெத்தலம் பிரியினும் பிரியாதே
துன்னு கின்றமால் வரையெனத் தமைப்பிரி தொறும்பிரி வாற்றாமே
மின்னு மாடக வரையிர சதகிரி மந்தர மெனமூன்றும்
பொன்னின்மூவகைக்கொடுமுடி யாமெனப் பொலிந்ததுதிரிகூடம். ()

கவன நான்முக நாரணப் பிரளய கற்பகா லந்தோறு
மெவன மாகவித் தலத்திடைச் சிவபிரா னிருந்தலா லழியாமற்
புவனம் யாவையு மொருதலை யந்தர மொருதலை புரையில்லாப்
பவன மோர்தலை யாகநின் றெடுத்தருள் பழமலை திரிகூடம். (௩௧)

ஊற்றி ருந்ததேன் கமலமே லுவரிமே லோங்கன்மே லனம்புள்ளே
றேற்றி ருந்துமுச் செயல்செய்வான் மூவடி வெடுப்பவர்க் கிடமாக
மாற்றி ருந்தபொன் மேகலை மூன்றுடும் வயங்குதெக் கணமேவி
வீற்றி ருந்ததோர் வடநெடுஞ் சயிலமே விரிதமிழ்த் திரிகூடம். ()

பொன்மலைக்குமோர் முதுமலை புதுமையாற் புதுமலை கயிலாய
நன்மலைக்கொரு துணைமலை யுவரிசூழ் ஞாலமேல் வளர்ந்தோங்கும்
பன்மலைக்குமோர் தலைமலை திசைதொறும் பசுந்தமிழ் மணநாறுந்
தென்மலைக்கொரு வடமலை சிவபிரான் றிருமலைத் திரிகூடம். (௩௩)

வேறு.

ஆமையெழுத் தாலுலகை யருள்செய்வார்க் கிடமாகி
மாமையெழுத் தூடாடா மறைநான்கின் முதற்கிடந்த
வோமையெழுத் துருவாகு முயர்சயில மவ்வெழுத்தின்
சேமவெழுத் தொருமூன்றின் வடிவமே திரிகூடம். (௩௪)

ஆடலொரு மூன்றாகி மூவுருவு மமைந்தார்க்குக்
கூடமொரு மூன்றாயுங் கூடமே யிருக்குமறைப்

பீடமொரு மூன்றாயும் பேரெழின்முத் தேவியர்க்கு
மாடமொரு மூன்றாயும் வயங்கியது திரிகூடம். (கரு)

எக்குணமோ வெப்பொருளோ வெச்செயலோ வெனமறையு
மிக்குணரா வகையுணர்த்த யான்மாட்டேன் மெய்யடியா
ரக்குணமே யச்செயலே யப்பொருளே யானபிரான்
முக்குணமோ முச்செயலோ முப்பொருளோ திரிகூடம். (கசு)

வேறு.

பொன்னின்மா மணியருவிப் பூமாலை கரத்தேந்தி
வன்னிசேர் கரத்தார்க்கு மணம்பூட்ட வருமிமையக்
கன்னிபோல் வதுகருணை காசினியா மடமகட்குச்
சென்னிபோல் வதுகனகத் திருமவுலி போல்வதால். (கஎ)

முந்தையார் நதிசூடி முத்தநல்வே லையுமேந்தி
விந்தையார் கோமரமதிவனைந்து விடையேறு
மெந்தைபோல் வதுகுலத்தி லுலகின்ற பெருமாட்டி
தந்தைபோல் வதுகருணைத் தாய்போல்வ துலகினுக்கும். (கஅ)

வேறு.

பூமடந்தை தனமிசைந்து பாரிடந்து வானளந்து பொன்னை மேவு
மாமணியி னிறம்படைத்து வானரம்புள் ளேறியலை வாரி மேவித்
தாமரைமா மலரிலஞ்சி தனிற்பூத்துச் செழுந்திகிரி சங்க மேந்தி
நாமமா யிரம்படைத்த மால்போலுந் திரிகூட ஞானக் குன்றம். ()

உந்திமிசை வந்துதடப் பாணியாற் குவலையாங்களுவப்பி னீன்று
விந்தைசே ரம்புவனம் பலபடைத்துத் திசைமுகங்கண் மேவி வாவி
யிந்திரற்கு மிடர்நீக்கி யெண்கிரியின் வாருமிகுந் திருந்த வாலை
முந்துபது மத்தயனை நிகர்காட்டுந் திரிகூட முருகார் குன்றம். (சo)

எத்தலமு மேகலிங்க மூலமாகும் பஞ்சலிங்க மிசைப்பர் மேலு, முத்தரகா சியிற்பதிட்டை கோடிலிங்கம் வடவருவி யுவரி மேய்ந்து, மைத்துளிபெய் திரிகூடச் சிலையெலாஞ் சிவலிங்க வடிவமாகி, யத்துணையுஞ் சிவமாகி லெத்துணையென் றெடுத்துரைப்போ மதன்சி றப்பை. (சக)

திரிகூடத் திருமலையை வலஞ்செய்தார் தீராத வினைக டீர்ந்தார், திரிகூடத் திருமலையைத் திசைநோக்கிப் பணிந்தவருஞ் சிவத்தைச் சேர்ந்தார், திரிகூடத் திருமலையின் கீர்த்தனங்கள் கேட்டவருந் தேவ ராவார், திரிகூடத் திருமலைசார்ந் திருப்பவர்கண் மகிமை துதி செய்யற் பாற்றே. (௬௨)

வேறு.

என்றிவை பகருங் காலை யிவ்வகை நான்கி னாலு
நன்றிசேர் கதிகள் பெற்றார் நற்கதை நவில்வா யென்ன
வொன்றிய முனிவர் கேட்ப வுளமகிழ் சிறந்து சூதன்
குன்றினை வலஞ்செய் தான்சீர் முதற்கொண்டு கூறலுற்றான். (௬௩)

பொதியமே லிமைய நீங்கிக் குறுமுனி போதுங் காலை
யெதிர்தொழா னறவமால் பூண்ட விந்திரத் துய்ம்ம னென்னு
மதிகுல நிருபன் றன்னை முனிந்துநின் மதத்தி னாலே
யதிர்குரன் மதமா வேழ மாகெனச் சாபஞ் செய்தான். (௬௪)

நின்வர வுணரா வென்னை நெறிகொலோ சபிப்ப தென்ன
மன்னவன் வணங்கிக் கூற மலயமா முனிவன் மூக்கண்
முன்னவ னடியார்க் காணின் முந்துற வெழுந்து தாழ்ந்து
பொன்னடி வணங்கார் யார்க்கும் புகல்வதிச் சாப மென்றான். (௬௫)

முனிவர சரணஞ் சாப மோசனம் புரிவா யென்னத்
தனிதொழு மரசைக் கும்ப சம்பவ னோக்கி யெங்கோ
னனிவரைத் திரிகூ டத்தை நண்ணிநீ வலஞ்செய் காலம்
புனிதமுற் றிடுவை தென்கீழ்ப் புறத்தொரு தடத்தி லென்றான். ()

பாயிர மறைதேர் கும்பப் பண்ணவ னருளாற் பின்ன
ராயிரங் கரிக்கு வேந்தா யடற்கஜேயந் திரப்பேர் பெற்றுப்
போயது குணிப்பில் காலம் புனம்பல சுழன்று வேழ
மேயது தவத்தா லோர்நா ளியன்றிரி கூடச் சாரல். (௬௭)

உலவுதென் றிசையிற் கொண்ட லுவாப்பிடி யெனப்போய் மேல்பாற்
குலவுவெள் ளருவிக் குன்றைக் கோட்டுமா வெனப்போ ராடிச்
சலவியுத் தரபாற் கோநலை முக்கனி சுவைத்தூர் கிழ்பா
லிலவைவெண் கவள மென்று சென்றது பனைக்கை நீட்டி. (௬௮)

வேறு.

சோதி மால்வரை சூழ்ந்துதென் குணதிசைச் சுனையின்
மோது தண்புனல் பருகையி லொருகையை முதலை
காதி வெங்கய மிழுத்திடக் கயங்கரை யிழுப்ப
வாதி னாசலெனத் தாயிரம் யாண்டுபோர் மலைந்த. (சகூ)

தால மீதில்விண் ணுயர்புடார்ச் சுனந்தனைச் சார்ந்து
கூல மேவிநின் றமர்செய்குஞ் சரங்குறை திரையி
னூல மேயெனப் பொருவலி முதலையா லயர்ந்து
மூல மேயென வோலமிட் டதுதனி முதலை. (ருo)

ஓல மென்றலு முயர்பெரும் புடார்ச்சுன புரத்தின்
மூல மொன்றதாய் மூவடி வெடுத்தருண் முதல்வ
னீல விண்டுவா யுறையுநா ணேமியம் படையாற்
கால வெங்கரா மடர்த்துநீள் கடகரி காத்தான். (ருக)

முத்த லைக்கிரி வலம்வரப் பெறுமுது தவத்தான்
மைத்த லைக்கரி வடிவுபோய் வானவ வடிவாய்
மெய்த்த லைப்பெருஞ் சுவர்க்கநா டெய்தினன் வேந்த
னத்த லைக்கிரி மகிமைகேட் டவங்கதி யறைவாம். (ருஉ)

வேறு.

பார்குட ரண்டம் வேர்வாய்ப் பகர்தரு தோற்ற நான்கி
னேரெழு பிறப்பிற் றெய்வ மீரேழு மக்க ளொன்பா
னீரின விலங்கு புள்ளு பப்பத்து நிலைநா லைந்தாங்
கூர்வன பதினொன் றாக யோனியெண் பத்து நான்கே. (ருங)

இன்னவா மிலக்க மியோனி யெய்திய வுயிர்கட் கெல்லாம்
பன்னுபுண் ணியமே பாவம் பாவபுண் ணியமுச் செய்கை
பொன்னகர் நிரையம் பூமி புவனமாப் பொசிக்கும் போக
முன்னது குறைவு மேற்ற முயன்றது பின்னு மாக. (ருச)

தாங்கரும் பாவ மிக்கான் றருமமுஞ் சிறிது செய்தான்
பாங்குசெய் தரும பாவப் பயனுண்டு பாரை நீங்கி
யோங்குசீர்த் தரும போக முண்டனன் சுவர்க்க மேவி
யாங்கது தொலைவின் வானோ ரகற்றவந் தரத்து வீழ்வான். (ருரு)

விஞ்சையர் திரிகூ டச்சீர் விண்ணிடைப் புரியுங் கான
மஞ்செவி குளிர்ப்பக் கேட்டா னகன்றது தொடர்ந்த பாவ
மஞ்சன மறலி தூதர் வருமுனம் வந்து வானோர்
தஞ்சென விமான மேற்றித் தமனிய வுலகஞ் சேர்த்தார். (ருசு)

வரைத்திரு நாமங் கேட்ட மகிமையாற் சுவர்க்க மேவித்
திரைக்கட லமுத மாந்தித் தேவரோ டிருந்தா னின்னம்
பருப்பதச் சாரல் சார்ந்தான் றிசைநோக்கிப் பணிந்தான் செய்கை
சருக்கமே லிக்கு நாதன் சாற்றிய கதையிற் காண்மின். (ருஎ)

ஒன்றெனப் பொருந்தா வேறு பிரிந்திடா வுற்ப வத்தி
னென்றுமுட் புகுதா நீங்கா விறையரு ளான்மா மூன்றுந்
தொன்றுதொட் டமைந்த சுத்த சொரூபமே வடிவென் றோர்ந்து
மன்றலந் திரிகூ டத்தி லுறையுமா மறைகண் மூன்றும். (ருஅ)

வெதிர்தரு தரள ராசி வெண்மைபாற் கயிலை மானுங்
கதிர்மதி வலத்தாற் பொன்னன் மேருவே கடுக்குங் கண்டோர்
மதியெலி யிரும்பைத் தன்பால் வலித்தலாற் காந்த வெற்பாம்
புதியசீர்த் திரிகூ டத்தை நிகர்வதோர் பொருப்பு முண்டோ. (ருகூ)

வம்பரும் பதும ராகம் வளர்வெயில் விரித்த லாலும்
வெம்பரா மணியின் சோதி விரிதரு செக்க ராலு
மும்பரா லுகுத்த வேயி னொளிமணி நிலவி னாலு
மெம்பிரான் றிரிகூ டத்துக் கிராப்பக லில்லை மாதோ. (சுO)

சித்தராய் விஞ்சை யோராய்த் தேவராய்த் திகழ்வோ ரெல்லாம்
பத்தராய்த் தருவாய் மாவாய்ப் பறவையா யுறைவர் மேன்மேன்
முத்தராய்க் கதிகட் கெல்லா முதல்வராய் விடுவ ரானு
லத்தனார் திரிகூ டத்தி னதிசயம் விரிக்கற் பாற்றோ. (சுக)

வேறு.

குவிப்பாக வரைத்தலைத்தனைச் சூதனெடுத் துரைப்பமுனிக் கு
ழாத்தோ ரெல்லாம், புவிப்பாக மறைவேள்வி தருமுன்னே யெங்
களுக்குண் புராண வேள்வி, யவிப்பாக மெனவளித்தாய் திரிகூட
வரைமகிமை யமுத வாரி, செவிப்பாகம் பெறநுகர்ந்து தவிப்பாகுந்
தென்னவிடாய் தீர்ந்தோ மென்றார். (சுஉ)

ஆன்றுண்மை யுயிராகி யுயிர்க்கெல்லா முணர்வாகி யறிவுக்கெல்லாஞ்
சான்றாகி முப்பொருளுந் தானாகி வானாகிச் சகங்கள் யாவு
மீன்றானுக் கிடமாகுங் கயிலாயஞ் சிவலோக மிரண்டென் பார்க்கு
மூன்றாகுங் குற்றாலத் தலமகிமை மொழிகவென மொழிவான் சூதன்.

௫-திரிகூடமலைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—-உசங.

---

## ஆறாவது:-திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம்.

கூறேறு மழுப்படையார் தலங்கண்மகி தலத்தனந்த கோடியேனுஞ்
சீரேறு மூர்த்திதலந் தீர்த்தமெனு மூவகையாற் சிறந்த தான
மீரேழு தலமாகு மெங்கையார்க் கதிகதல மிவற்றி னுள்ளு
மோரேழு தலமதிக மிவையிலொரு தலமதிக முணர்த்தக் கேண்மின்.

வரமேவு திருவாரூர் காளத்தி யருணைதில்லை மதுரை காஞ்சி, புரமாதி பலதலத்தும் போந்துறைந்த லொவ்வொருவர் பொருட்டே யாகும், பரமான தனிமுதல்வ னாழிதொறு முலகமெலாம் படைத் துங் காத்தூற, திரமாக வரசிருக்கும் பரமரக சியத்தானந் திருக்குற் றாலம். (உ)

வேறு.

பூதல விலாசந் தன்னிற் புதுமைசேர் தலங்கள் யாவும்
பேதமாங் கற்பந் தோறும் பிரளயத் தொடுங்கித் தோன்று
மாதனு மழிவு மில்லா வநாதியே திருக்குற் றாலங்
காதலி னறிவு மிக்கீர் காரண முணர்த்தக் கேண்மின். (௩)

பொருந்திரைக் கடல்க ளேழும் புடைபடு தீவுந் தாவிப்
பெரும்புறக் கடலு ணேமிப் பிறங்கல்கால் சாயப் பாய்ந்து
வருந்திரண் மேரு வாதி வரைகளுந் திசையும் பாரு
மொருங்குற வொருக்கி மேல்கீ முலகெலாம் புகுந்து தாக்கி. (௪)

பரந்தெழு புவன மெல்லாம் படர்ந்தபே ருகாந்த வாரி
துரந்தெழு மண்ட மூலத் தங்கியின் சுடரான் மண்ட
வுரங்கெழு சண்ட வாயுக் கனலெலா மொடுக்கி வான
நிரந்தரித் துலோகா லோக நெடுவெளி யாய காலம். (௫)

ஆருநீர் கனல்கா லண்ட மழிக்குநா ளழியா தாகிக்
கூருமால் வரையும் யாறுங் குறிக்கொண்டு திசைக டோறு
நேருறு குரோச மைந்தாய் நின்றது திருக்குற் றால
மேருவி லேந்திக் கங்கை மிலேந்தநம் பரனே போல. (௬)

அப்பெரும் புவன மெல்லா மழியுநா ளழியா தாகி
யிப்புரங் கிரியும் யாறு மிருந்தவா றெவ்வா றென்னின்
முப்புர மொடுங்குங் காலை மூவர்வீ டென்ன மூன்று
மொப்புற நின்ற தென்று மொருவன தருளான் மன்றே. (௭)

விரவணி சடையா னெங்கு மமர்கினு மருந்தேன் கங்கை
கரைபொரு திரிகூ டத்துக் கலையெலா நிரம்பா நிற்பன்
விரவுபே ருலக மெல்லாம் வெயில்விரித் தெழுந்த தேனு
மிரவிதன் கிரணங் காந்தத் திசைதரு பொலிவு போல. (௮)

தருமமே கருதித் தானந் தவம்பல புரிந்தா ரேனுந்
திருவளர் திருக்குற் றாலச் சிவபிரான் சன்னி தானந்
அருவினர் பணிவார்க் கன்றித் தொலைந்திட லரிது பாவம்
பரிதிசன் னிதியி லன்றிப் பஞ்சிலைச் சுடுமோ காந்தம். (௯)

வேறு.

ஆல வாய்திருக் காளத்தி காசியண் ணமலை திருவாரூர்
மேல மன்றகந் திருவிரா மீச்சுரம் விடபணைக் கவராகச்
சூல பாணியார் மற்றுள தலமெலாந் துணர்த்தபைஞ் சினையாக
மூல மாகவே யுலகெலாந் தழைத்திட முளைத்தது குற்றாலம். (௧௦)

உடைய நாயகி திருமணக் குழுவின்மூ வுலகமு மொருங்கேறி
வடதனிப்புலந் தாழ்ந்துதெற் குயர்ந்தநாள் வானவர் தொகைக்கெ
கடமு னிப்பிரா னொருவனே நிலைபெறக் காசினிப் பெரும்பாரெல்லாங்
மெடைத வக்கொரு தட்டெதிர் நின்றதா லிறைதிருக் குற்றாலம்.

சங்க வீதிபொற் கந்தரந் திருமுகந் தமணியப் பெருங்கோயி
றுங்க வார்குழல் சண்பகா டவிபெருஞ் சொர்க்கமே திரிகூடம்
பொங்கு மாகட லுந்திபொன் மேகலை பொருந்துசித் திரகங்கை
நங்க ணாயகன் மருவுகுற் றாலமா னாலநா யகியார்க்கே. (௧௨)

மேவ ராவகி லாண்டமு மொடுக்கிமேல் விதித்தரு ளொருதேவன்
மூவ ராகவித் தலத்திடை முளைத்திட மூலமா நகராகி
யாவ ராகினு முணர்தர வரியதா லிந்நகர்ப் பெரும்பான்மை
தேவ ராசிய மென்பனோ பரமரா சியமென வுரைக்கேனோ. (௧௩)

வேத மர்கிய குறும்பலா நீழலின் விரிஞ்சன்மால் வடிவாகிப்
பூத நாயக னெனவரு சிருப்பவன் புவனநா யகிகாண
நாத மாகிய விண்முரா சதிர்தர ஞானசித் திரமன்றிற்
காத லாய்த்திரு நடம்புரி வதுதல மகிமையாற் களித்தன்றோ.(௧௪)

இந்து வானிடை யிழிந்துகீழ் வழிந்தென வெழில்வரைத் திரிகூடம்
வந்து பாய்தரு திரையரு வித்துறை வரதன்மஞ் சனசாலை
நந்து வீதிசூழ் சினகரந் திருவுரு நண்ணுபா தலமாதி
யைந்து வாய்தனு மைம்பொறி வடிவமா மாடலம் பரனூர்க்கே.(௧௫)

ஆர்த்த மூலமு மீறுமில் லாதவ னண்டமூ லமுந்தேருக்
கீர்த்தி மூலமே கிளர்ந்தென நன்னகர்க் கிரித்தலை யலைமோதுந்
தீர்த்த மூலமுந் தலத்தின்மூ லமுமுயர் சிவலிங்க வடிவான
மூர்த்தி மூலமு முணர்வரோ வுலகொரு மூன்றையு முணர்ந்தாரும்.

மனித ரோபெருந் தேவரோ வளர்மது கங்கையோ வானோரு
புனிதர் சண்பகச் சோலையோ கற்பகப் பொதும்பரோ புவிபோற்று
மினிய குன்றமோ சிவலிங்க வடிவமோ வென்றுபே தாபேதந்
தனையுணர்த்துவதெம்மனோர்க்கெளியதோ சதுர்மறைக்கரிதாமேல்.

வேறு.

புந்தியுற நினைந்தார்க்கே யருணகிரி தரிசனைக்கே புலியூர் பேறு
நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு நல்குங் காசி
யெந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு மிறந்தாக்கு மெதிர்கண்
டார்க்குஞ், சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந் திருக்
குற் றாலம். (௧௮)

பிறந்தவர்க்கு முத்திதருஞ் சிவமுரசஞ் செவிகேட்கப் பெறலா
ற் காட்சி, சிறந்தவர்க்கு முத்திதரு மெய்வடிவுந் தெய்வவடி வாத
லாலே, யிறந்தவர்க்கு முத்திதரு மிறைதிருமந் திரஞ்செவியி லிசை
க்கு மாற்று, லறந்தழைக்குங் குற்றால மறிந்துநினைப் பவர்க்குமுத்தி
யரிதோ வம்மா. (௧௯)

எத்தலத்தி லெவர்புரிந்த பாதகமு மித்தலத்தி லெய்தத் தீருங்
கைத்தலத்தின் மழுவுடையார் குற்றாலர் தனிற்புரிந்த கடிய பாவ
மத்தலைநால் வகையிலறு மித்தலம்விட் டகன்றாரே லவனி யாதி
முத்தலத்திற் சென்றாலு முடியாது முடியாது முடியா தன்றே. ()

வன்னிதா னம்புகுமுன் மானததா னந்தோய மாட்டா ரேனுஞ்
சென்னிதா னந்தொடுத்துத் திகழுமிரு வகைத்தானந் தேவ தேவன்
சன்னிதா னமுனிரண்டு சதுட்டையத்தா லகன்றேறுஞ் சகல பாவ
மென்னிதா னமுநிதியும் பெற்றாலுங் குற்றால மிகவார் மேலோர். ()

உம்மையுறு பாதகங்கள் பஞ்சுபோற் பறக்குமந்த வூதை யாலே
யம்மைதரு மலச்சேறு கழுநீராக் கழுவும்வட வருவித் தீர்த்த
மிம்மைவினை யிருளோட்டுந்திரிகூடப்பரஞ்சுடரையிறைஞ்சுவார்க்கு.
மும்மையுந்தீர்ந்தந்தியத்திலருடருஞ்சன்னிதியழியாமுத்திநல்கும்.

மந்தமரு ருதமீர வாளோச்சி வீசுநெடு வரைத்தண் சாரல்
சிந்துநீர் வடவருவி சிலைபூட்டி யம்பிறைக்குஞ் செழுநதேன் பில்கும்
பைபூர்தளிர்ச்சண் பகச்சோலை பாரதண்டங் கொடுபுடைக்கும் படர்
திக்கெல்லா, மிந்தநக ருறைவார்மேல் வந்தவினை தரித்துநிற்ப
தெந்த வாறே. (உ௩)

வேதாளம் பாடவொரு வெளியிலா டியபெருமான் வேதம் பாடப்
பாதாள வாய்தலுறை பணியரசுங் குறுமுனியும் பணிசெய் தேத்த
மாதாள மூமைபயிற்ற வரிபிரமர் முடிதாழ்ப்ப வானோர் பேரி
யாதாளி யுறநடிக்குஞ் சிற்பொதுவுஞ் சிற்பரையு மதன்பா லன்றோ.

இந்திரனூர்க் காதாரங் கருவூர்க்கு நமனூர்க்கு மெட்டாத் தூரஞ்
சந்திரர்சூ ரியர்முதலோர் பதங்களுக்குத்துருவபதந் தணிவேற்கந்தர்
கந்தமா தனமாதிக் கணபதிக்குக் கயிலாயங் கயிலை யார்க்குச்
சிந்தைசேர் சிவலோகந் தெளிந்தார்க்குப் பரமபதந் திருக்குற் றாலம்.

புவலோகத் திருப்பவர்கள் சுவலோகம் விரும்புவர்மேற் போ
கம் வேட்டுச், சுவலோகத் திருப்பவர்சத் தியலோகம் விழைந்திருப்
பர் தொலையா வேதன், றவலோகத் திருப்பவர்கண் மாலுலகம் விரு
ம்புவரித் தனைக்கு மேலாஞ், சிவலோகத் திருப்பவருந் திரிகூடத்
திருக்கும்வரஞ் சிந்திப் பாரே. (உ௪)

கயிலாயத் தினிலுறையுஞ் சிகண்ட பரமனுயர் கயிலை நீங்கி
மயிலாய சாயன்மட மங்கைகுழல் வாய்மொழியை மணந்து மேருச்
சயிலாதி பொதியில்வரைத் தலங்களழி யினுமழியாச் சங்கக் கோயி
லெயிலாக விருப்பதனாற் பூலோக கயிலாய மிதுவே யன்றோ. (௨௭)

சிவமதுகங் கையுங்கடவுட் செண்பகத்த டாகமுமேற் சித்தர்
வானோர், தவமுனிவ ருவந்தாடும் வடவருவித் திரிகூடச் சயிலச்
சார்பு, நவநிதியுந் திரைகொழித்துக் கதிகொடுக்குஞ் சித்திரமா நதி
யுங் காண்பான், புவனமிசை பிறக்கவின்னந் தவம்புரிவர் பிரான்
னுலகிற் புகுந்துளோரும். (௨அ)

பொங்குமா கடலருவிப் புண்ணியதீர்த் தமுங்கடவுட் பூட்டா
வில்லுஞ், சங்கவீ தியுந்தானு மாலயத்தொட் டிலுமாதி சத்தி
யான, நங்கைபீ டமும்வேதக் குறும்பலவு நன்னகரு நயப்பா லன்
றோ, வெங்கணு யகர்பிரமா வாகிநெடு மாலாகி யிருந்தா ரென்
றும். (௨௯)

பிதுர்கண்டந் தீர்த்தபுரஞ் சிவத்துரோ கந்தீர்த்த பெருமை மூதூர்
மதுவுண்டா னுயிர்மீட்ட புரம்பவர்க்க மீட்டபுரம் வசந்தப் பேரூர்
முதுகங்கை வந்தபுரஞ் செண்பகா ரணியபுர முத்தி வேலி
நதிமுன்றின் மாநகரந் திருநகர நன்னகர ஞானப் பாக்கம். (௩0)

வேடன்வலஞ் செய்தபுரம் வேழம்பூ சித்தபுரம் வேத சத்தி
பீடபுரஞ் சிவமுகுந்த பிரமபுர முனிக்குருகும் பேரூர் தேவ
கூடபுரந் திரிகூட புரம்புடார்ச் சுனபுரம்பொற் குறும்ப லாவி
சேடபுர மெனவிருபத் தொருநாமம் பெற்றபதி திருக்குற்றாலம் (௩௧)

வற்றாத வடவருவி படிந்துசங்க வீதிதனில் வலங்கொண் டேகிப்
பற்றாத பிறைமவுலிப் பரமனையுந் தேவியையும் பணிந்து போற்றிக்
கற்றார்க ளுடன்கூடிக் கண்ணுதல்சீர் பாடியொரு கடிகைப் போது
குற்றாலத் திருந்தவர்கள் கயிலாயத் திருப்பர்கற்ப கோடி காலம். ()

பாவரா கிலுங்கொலைசெய் பழையரா கிலும்வேதப் பலவி னீழன்
மூவராய் முளைத்தபிரான் குற்றால மென்றொருகான் மொழிவ ராகி
லேவரா கிலும்புவன வேந்தரா யுலகாள்வ ரிருகாற் சொல்வார்
தேவராய் வீற்றிருப்பர் முக்காலு மெடுத்துரைக்கிற் சிவமே யாவர்.

குற்றால மென்றொருக்கா னினைப்பவர்க்குப் பாவமொரு கோடி தீரும், குற்றால மென்றொருக்கா லுரைப்பவர்க்குப் புண்ணியங்கள் கோடி சேரும், குற்றாலந் தனிலிருந்து செய்யுமொரு தவமனந்த கோடி யாகும், குற்றாலங் கண்டுதொழக் கூடினர்க்கே பரமபதங் கூடுமாதோ. (கூசு)

வேறு.

முத்தராய் விடுத லாலே முக்கணர் திருக்குற் றாலம்
பத்தராய் மேவு வார்க்குப் பரிசன வேதி யாகு
மித்தரா தலத்திற் காண்போ ரியாவரு முயர்சங் கற்ப
சித்தராய் விடுத லாலே தெரிசன வேதி யாமால். (கூரு)

ஓரிடைப் பன்னி ராண்டு றக்கமற் றிருந்தான் பேறு
சீருடைத் திரிகூ டத்திற் சிவநிசி யொன்றே நல்கும்
வாரிசூழ் நிலத்திற் கோடி வளர்சிவ நிசியா லெய்தும்
பேரியற் பேறு மீங்கோர் பின்னுவாத் திங்க ணல்கும். (கூசு)

ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண் ணடி
யோதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர் மடந்த டாகங்
கோதிலா விரிஞ்சி கண்ணங் கொலையுயிர் விடுத்த லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணோய் மருந்துநன் மகப்பால் சோறு (கூஎ)

அறுசமை யத்தோர்க் குண்டி யழிந்தோரை நிறுத்த லட்டோன்
பிறரறங் காத்த லையம் பெண்போக மகப்பே றய்த்த
னறியதீன் விலங்கூண் வண்ண ணுவிதன் சிறைச்சோ றுதி
மறுதலத் தறமெண் ணன்கு மனையறத் திவ்வூர் நல்கும். (கூஅ)

சிலபல தலத்தின் மாதப் பட்டினி விரதஞ் செய்வோர்
பலனெல்லாந் திரிகூ டத்திற் பகலுண வொழித்தார்க் கெய்துஞ்
சலமறப் பிறவூர் மேவிச் சாந்திரா யணஞ்செய் தோர்க
ணலமொரு நிசியூண் விட்டு நன்னக ருறைந்தார்க் கெய்தும். (கூகூ)

ஒருபொழு தருந்தி யோராண் டொருங்குநோற் றிருந்தார் பேறு
மிருபொழு தருந்தி யோர்நா ளித்தலத் திருந்தார்க் கெய்தும்
பருவமொன் றயலூர் நோற்கும் பலபல விரதப் பேறு
தருமொரு சோம வாரந் தன்னிலித் தலத்தின் மாதோ. (சுo)

காமர்பூங் கொடியார் போகங் கடந்துடை காவி சாத்தி
மாமனத் துறவு பூண்டு மறுதலத் திருந்தார் பேறு
தேமலர்ச் சயன மேவித் தெரிவைய ருடனே யிவ்வூர்ப்
பூமனை வாழ்க்கை யெய்தும் புண்ணியர்க் கெய்து மாதோ. (௪௧)

ஐவகைக் கனலி நாப்ப ணைம்புல னடக்கி யோராண்
டுய்வகைத் தவங்க ளாற்றி யொருதலத் திருந்தார் பேறு
கைவரை மழுவ லாளன் கருணையஞ் செழுத்தை யுன்னித்
தெய்வமாப் பலவி னீழற் சிறுபொழு திருந்தார்க் கெய்தும். (௪௨)

அடைதர வரிய கானு மருவரைப் புறமு நாப்ப
புடைபடப் பல்யாண் டோடிப் பூவலம் வருவார் பேறு
சடைமிசை மதியஞ் சூடுஞ் சண்பக வனத்தி லெம்மை
யுடையவன் சங்க வீதி யொருவலம் வருவார்க் கெய்தும். (௪௩)

பூதானம் பரிதேர் யானை பொன்வெள்ளி விளைவு கன்னி
காதானந் தயில மெள்ளுங் கலைபணி படிமை யில்லங்
கோதான மன்ன தானங் கூறுமெண் ணிருதா னத்தி
னேதான பலனு மன்ன மிட்டுண்பார்க் கருளு மிவ்வூர். (௪௪)

சொரிதழ லங்கிட் டோமஞ் சோதிசேர் ரோதிட் டோமம்
புரிதரு மிராச சூயம் பொங்கழற் சோம யாகம்
பரிமக முதல வேள்வி பலதலத் தியற்றும் பேறு
பெருகுமித் தலத்து மாதுர் பிதுர்யாகஞ் செய்வோர்க் கெய்தும். ()

சண்பக வனங்க டோறு மிலைதின்றுங் கனிகாய் தின்று
முண்பன வொழித்துந் தீமே லூசிமே லொருகான் மேலா
வண்பல கால மெல்லாம் வருந்தினர் தவஞ்செய் பேறு
சண்பக வனத்தி லோர்நாட் செயுந்தல வாச நல்கும். (௪௬)

பத்தராய்ப் பணிவார்க் கேனும் பலதவம் புரிவார்க் கேனு
முத்தர வயன மெல்லா மொருதலந் தருமே யிவ்வூர்ச்
சித்திரை விழவே நல்குந் தெக்கிணை யனப்பே றெல்லை
மத்தர்தந் திருக்குற் றாலத் தைப்பசி விழவே நல்கும். (௪௭)

அத்தனங் கிருந்து நீங்கா தகிலமு மியற்ற லாலே
யெத்தலம் வதிந்தார் பேறு மெத்தவம் புரிந்தார் பேறு
முத்தர கங்கை யாதி யுயர்நதி படிந்தார் பேறுஞ்
சித்திர நதிசூழ் சைவத் தெய்வமாத் தலமே நல்கும். (௪௮)

திருவளர் திருக்குற் றாலந் திரிகூட மென்னு நாம
மருவியங் கிரிக்குண் டாகி யருட்பெருந் தலத்துக் காகி
மருவ்வே றுலக மீன்ற வல்லியா மெம்மை யாளு
மொருவனுக் குரிய தென்று முணர்த்துதற் கெளிய தாமே. (௪௯)

வேறு.

என்னனு மிந்நகர்க் கிசையு நாமங்கண்
முன்னர்மூ வேழென முறையிற் கூறினை
யன்னவை விரித்துரைத் தருளு வாயெனச்
சொன்னமா முனிவர்க்குச் சூதன் சொல்லுவான். (௫0)

தொன்மையாந் தீவினைத் தொடர்ச்சி சூழ்வதாந்
தன்மையாற் போழ்ந்தெரி தருதலைத் தலமா
நன்மையா ரியங்கமிழ் நாமமே பெற்றது
சென்மநோ யறுப்பது திருக்குற் றாலமே. (௫௧)

கடாக்கயம் பூசைசெய் கடவுள் வாழ்பதி
கடாக்குழி நற்பதி யெவர்க்கு நல்கலால்
விடாப்பெருந் தன்னகர் நாம மேவுபாற்
படர்ச்சுவை பரத்தியல் பகைமே கண்மினே (௫௨)

வேறு.

பராசரனருளாற் கந்தி பரிமள கந்தி யாகத்
தராதலம் புரந்த நீதிச் சந்தனு ராசன் வேட்பத்
தராதிப னரசுக் கேற்ப நன்மக வீன்று ளன்றே
னராகமுற் றிருந்து வேட்டா னம்பியம் பாவி தம்மை. (௫௩)

கோட்டன நடையார் மக்கட் பெறுதன்முன் றலைவன் வீந்தான்
வீட்டும னரசு வேண்டான் வியாதனை வரித்தாள் கந்தி
கோட்டமின் முனிபா லன்னோர் துணைமுறைப் புணர்ச்சி யாலே
நாட்டமி லரசைப் பாண்டு வேந்தனை நல்கி னாளே. (௫௪)

நோக்கிலான் மனைவி தாருத் தழுவினாற் றவரைத் தந்தா
ளாக்கமாம் பாண்டு பாரி யைவருக் கைவ ரீன்றாண்
மாக்குலத் துணைவ ராயு மகிதலம் புரக்கு மாசை
தாக்கினாற் றவரோ டைவர் தங்களிற் பகைவ ரானார். (௫௫)

வைமக னாகி நந்தன் மனைபுகூஉப் புள்ளுஞ் சோகும்
விசைபெறு சகடு மாய்த்து வெறிமரு திடந்து வேழ
மசைவுற மல்லர் வீழக் கஞ்சனை யடர்த்த கண்ணா
னிசைவினாற் பாண்டு மைந்த ரிகலினு மினியா ரென்றா. (௫௬)

ஆற்றவர் சூதால் வென்று நவலருள காணி மீலா
சாற்றுடன் னீரான் டைவர் தனைநதுபின் னளநா டெய்தப்
போற்றலன் புயங்க கேது பொருந்தில னாத லாலே
யாற்றுதல் சமரென் றெண்ணி யன்னல்பா சுபதம் முன்னி. (௫௭)

செய்வளர் திசைநா லங்கி சேறனைழ கூடரோன் றாக
வைவகைக் கனலி னாப்ப ணடியொன்றின் விரலொன் றூலே
குவ்விடை யூன்றி யோர்தாள் குறங்கிடைச் சேர்த்திப் பார்த்த
னவ்விழி துண்டந் தாக்கி யதிலெழு தீப நோக்கி. (௫௮)

பூதமைம் பொறிபி லாகப் பொறிபுலன் கரணத் தாகச
சேதனத் தவையாய் மாரன் சேவர்கோ னிடரு மாற்றி
யாதவம் பனிகார் நீருசி சிதலரித் தாகம் புற்றாய்ப்
பாதவ முனைப்ப முக்கட் பரமனைப் பரவி நின்றான். (௫௯)

பிங்கலன் றவஞ்சோ ராதிப்பான் வேட்டுவக் கோல மாகித்
திங்கலா மன்னங் கோலந் தொடருமோர் தேவ தேவர்
மைக்குழ லன்னம் பின்னே தொடரமற் றொருகோ லத்தைப்
புக்குறத் தொடர்வார் போலப் புகுந்தனர் பொருவில் லேந்தி. (௬௰)

வரிசிலைப் பாரெ வேடன் வலியஞ்சிப் புகல்போற் பன்றி
குரிசிலை யடுங்கா லெம்மான் கொலைசெய்த தனைரான் பார்த்த
னொருசிலை யுயிர்செப் பென்ன வருத்தன னிருவர் தாமும்
பொருசிலை குனித்தாக் கார்போற் பொழிந்தன ரம்பு மாரி. (௬௧)

அல்வினார் களத்து வேட னருந்தவ வேடன் வின்னாண்
கல்வினன் மல்வி னூற்கை கலந்தனர் வீழ்ந்தார் மேல்கீழ்
புல்வினு ரணங்கு பார்த்தன் புறங்கண்டு நகைத்தா ளன்னோன்
வில்வினாற் புடைப்ப நாதன் விண்ணிடை மறைந்தா னன்றே. (௬௨)

தேவியுந் தானு மாகச் சேணிடை மறைந்த தேவைப்
பாவியே னுணர்ந்தே னல்லேன் பழுதுகொல் விளைத்தே னென்னக்
கூவியே தொழுதான் முக்கட் குழகனே மழுவ லானே
யாவியே யுமையோர் பாகா வபயமென் றழைத்துங் காணான். (௬௩)

தீர்த்தனை யருச்சித் தேத்தித் திருவடி காண்பே னென்ன
வார்த்தரமாந் தேவு மேவு மவ்வுளிச் சென்றான் கொன்றை
சார்த்திய மவுலி யானைச் சம்புடத் துடனுங் காணான்
வேர்த்துடல் சோர்ந்தா னாவி விடுப்பனென் றெடுக்கு மெல்லை. ( )

சேனுயிர் விடைமேல் வந்து சம்புடந் திரிகூடத்திய
கோனுக கடவுட் பந்த தெரிசனத் தென்று காட்டித்
தானுநா யகர்தாம் பாச பதங்கொடுத் தருளிப் போந்தார்
கோணிலா மனத்தன் போற்றிக் குறும்பலாப் பரவல் சேர்ந்தான்.

கோதிலாத் திருக்குற் றாலந் துறுகினன் பணிந்தான் பங்க
வீதிவாய்ச் சென்றான் முன்செய் வியன்குருத் துரோகந் தீரச்
சோதிவெண் கதிர்பு சித்த சோமசே கரனைக் கண்டா
னேதுயங் குனியாத் திங்க ளுக்கிரத் தருச்சித் தானே. (௬௬)

பேற்றினைப் புகழ்மா மீரன் விநாயகன் சிகரங் குன்றந்
தேற்றமே தன்றே றடைந்து தெரிசனப் பரிவாற் பெற்றுத்
தோற்றிய வைந்தொ டாறுர் சோதிசப் புடமுங் கண்டா
னாற்றுற வெடுத்தா னைமா விகண் டெடுத்த பல்லின்ன. (௬௭)

ஆதிநாட் சப்பு டங்கள் டருச்சனை யெடுத்த வாற்றாற்
பூதிரா தனத்தோர் போற்றும் புடார்ச்சனை பரமா மிவ்வூர்
மீதுள நாமச் செய்கை விளம்புது மருக்கத தோறுங்
கதைகள் விரிக்குந் தெய்வக் காரணை வகையிற் காண்பின். (௬௮)

பொருவருந் திரிகூ டத்துப் புடார்ச்சுன புரம்போ லெங்கு
மொருதலம் புவனத் தில்லை யும்பர்வா னகத்து மாங்கே
பெருகுமித் தலத்தை நீங்கிப் பிறதலம் புகுவா ரில்லின்
றிருவிளக் கிருக்க வூரிற் சென்றுதீக் குழல்வார் மன்னே. (சகூ)

பாயிர மிறை க.ளாலும் பகரரி தான சங்கக்
கோயிலுந் தலமுந் தெய்வக் குழாங்களின் பெருக்கு நானோர்
வாயினா லுரைக்கற் பாற்றோ மகிதலந் தாங்குஞ் சேட
னாயிர நாவி னாலு மசைக்கினு மசையா தென்றான். (எ0)

வேறு.

தில்லையிலுஞ் சேதுவிலுங் காசியிலும் வாசிபெறுந் திருக்குற்றாலஞ், சொல்லையிலு நாவூறுங் கேட்கையிலுஞ் செவிதிறக்குந் துறக்கம் போலு, மெல்லையினில் வளர்தீர்த்த மகிமைகூ றெனமுனிவ ரிளம்பூங் கன்னற், கொல்லையினின் மேய்ந்தசெழுங் கன்றுகள்போற் சிந்தையவர் கொண்டார் மன்னோ. (எக)

கனிமூல சாகமெனு மமுதநுகர் மாதவத்தோர் கருதிக் கேட்ப
முனிமூல நதிமூல முரைப்பதரி துரைத்தாலு முக்கண் ஞானத்
தனிமூலப் பொருளிருக்குஞ் சாரல்சூழ் திரிகூடச் சயிலக் கங்கை
நனிமூல முரைப்பதரி தவனருளா லுரைப்பனென நவில்வான் சூதன்.

6-திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—நகஹ.

---

## ஏழாவது:—வடவருவிச் சருக்கம்.

பரையிடத்தி லிருந்துபுடார்ச் சுனபுரத்தி லுலகமெலாம் படைக்குங் கால, முரையிடத்து முனிவிடத்துங் கடந்தானை யுருத்திரமா கணத்தோ ரெல்லாந், தரையிடத்தி லுவந்தாட்டப் புனல்வேண்டிப் பரவுதலுந் தனிமுக் கோட்டு, வரையிடத்தி லவனருளால் வருமூல தீர்த்தம்வட வருவித் தீர்த்தம். (க)

கடலேழு நதியேழுந் தோன்றுமுன் வரையிலெழு கடலாய்த் தோன்றத், தடமேவு நதிமகிமை பாடியுருத் திரகணத்துத் தலைவ

ராடி, யுடன்மேவு நந்திகணத் தவராடிச் சிவகணத்தா ருவப்பி னடி
யடலேறுந் திரிகூடப் பெருமானை யுவந்தாட்டி யருள்பெற் றூரால்.

குடிலைதா மேவிவரு மாயைகா ரணமாகக் குளிர்வா னாதி
நெடியபே ருலகனைத்தும் படைப்பதற்குக் கமண்டலநீர் நிகராய் முக்க
ணடிகளா டலுக்குரிமை யாதலாற் றிரிகூட வசலக் கங்கை
சடிலமேற் கங்கையினு நூறுமடங் கதிகமெனத் தக்க தாமால். (௩)

'பவமதுகங் கையகலாச் சகரருய்யப் பகிரதனாற் பண்டு தோன்
றுந், தவமதுகங் கையுஞ்சுருதி விரிகூடத் திரிகூடச் சயில மேவி
நவமதுகங் கையிற்சொரிந்து நாதனைப்பூ சனைபுரிந்து நவைக டீர்ந்த
சிவமதுகங் கையுந்தனக்கோர் துறையாக வுடையதுசித் திரப்பூங் க
ங்கை. (௪)

மவுனநெறித் தாபதர்கண் மாறாது தவம்வேள்வி வளர்ப்ப தாலே
கவனவெறித் தானவராற் பிரளயத்தா லழியாமற் கற்பந் தோறுஞ்
சிவனயன்மா லானபிரான் றிருவருளால் வரைகாத்துத் தேவி வாலை
பவனதிரி புரையாவா ளினிதுறைசண் பகத்தடமோர் புறத்த தா
மால். (௫)

கங்கைநரு மதையமுனை சிந்துகோ தாவரிகா வேரி யாதி, மங்
கலமா நதிகளெலாம் வற்றியநா லங்களினும் வற்றா தாகிச், சங்க
மறு துடையபிரான் றிருவருளாற் புதுவாரி சயில மீதிற், பொங்
கியெழு மாதலினாற் பொங்குமா கடற்றுறையும் பொருந்து மோர்
பால். (௬)

தடமாகு நதியாகுங் கடலாகும் வரையருவி தானே யாகு
மிடமாகுஞ் சேய்த்தாகு மெத்தலத்தும் வளர்தீர்த்த மிமைய மீன்ற
மடமாதி னிடத்தார்க்கு வலமாகி யணித்தாகி வானோ ராட்டுங்
கடமார்மஞ் சனம்போலுந் திரிகூட வடவருவிக் கடவுட் டீர்த்தம். ()

கூவறட மொருகோடி கொடுத்தபலன் கொடுக்குமொரு குவளை வாவி
வாவிசுனை யொருகோடி வழங்குபல னொருநதியே வழங்கா நிற்குந்
தாவுநதி யொருகோடி தருபலனோர் வரையருவி தானே நல்கு
மேவருவி யொருகோடி யுதவுபலன் வடவருவி விளைக்கு மாதோ. (௮)

கிரிகூடந் தொறும்பாயு நதிக்குயர்ந்த துத்தரவா கினியே யென்று
விரிகூட விரித்துமறைச் சுருதிமிரு திகள்யாவும் விளம்பு மாறு
லரிகூட மயன்கூடஞ் சிவகூட மெனமுனிவ ரமர ரார்க்குந்
திரிகூட வரைபாயும் வடவருவி மகிமைதுதி செய்யற் பாற்றே.(கூ)

பாவமொடு புண்ணியத்தின் வகைபிரிக்க மாட்டாவாம் பலவாந் தீர்த்தம், பூவையுங்கிள் ளையும்பாலின் புனல்பிரிக்க மாட்டாமை போல மேலாந், தூவியனம் பிரிப்பதுபோற் சுகிர்தமெனும் பால்பிரித்துத் துலங்கக் காட்டித், தீவினையைக் கழுநீராப் பிரித்தெறியுந் திரிகூடத் தெய்வக் கங்கை. (௰)

மேலேறிச் சுவர்க்கபதம் புகுவார்க்கும் பிரமபத மேவு வார்க்கு
மாலேறு வைகுந்தம் பரமபதஞ் சேர்வார்க்கும் வரம்பில் காலங்
காலேறிச் செலவரிய பதந்தோறுஞ் செலுத்துதலாற் கதிகட் கெல்லா
நூலேணி நிறுத்தியதாந் திரிகூட வடவருவி நுவலுங் காலே. (கக)

சத்தநர கினுந்தொலையார் புவிமீதிற் பிறந்துபா தகங்க ளெப்ப
ரித்தரணி தனிற்பிறந்தார் பாவமெலாங் கங்கைதனி லெய்தித் தீர்ப்பா
ருத்தரகங் காநதியின் பாதகமு மிதுதீர்க்க வுரிய தாலுற் [றில்
சித்திரகங் காநதியை யொத்தவொரு நதியுளதோ செகங்கண் மூன்().

வேறு.

மொழிபடர் கலைநூல் வல்லீர் முழுத்தபா தகங்க ளெல்லாஞ்
சுழிபடர் கழுநீ ராகத் தொலைத்திடுந் திரிகூ டத்திற்
செழிபடர் நதிக்கு நாமந் தெய்வமாங் கதைகள் கூறி
லொழிபடா வனந்த மாகு மவையிலொன் றுணர்த்தக் கேண்மின். ()

கணத்திலு மோரூர் வைகான் கடிநகர் பதியோன் றில்லான்
பணத்தர வல்கு லாரைப் பாவைபோற் பார்ப்ப தல்லான்
மணப்பதில் விரகில் லர்தான் வறுமையாற் சிறுமை பூண்ட
குணத்தினன் சிகைநூன் முஞ்சிக் குறியினன் மறையோ னேகன்.()

பந்தியாம் பதிதோ றேற்றும் பசிக்குண விலாது தேம்பிக்
கந்தையே துகிலாச் சுற்றிப் புற்கையிற் றரைஞாண் பூண்டு
கிந்தைவேட் டகம்கே மாந்து திரிந்தனன் மெலிவா னந்தோ
முந்தைநீய தவஞ்செய் யாதா ரிம்மையின் முயன்று முண்டோ.(கரு)

கடுங்கதிர் வேனிற் காலங் கையினான் மெய்யைப் போர்த்தான்
குடங்கையுங் குளிர்கா லத்துக் குறங்கினிற் புதைத்தான் வாடை
யடும்பனிச் சிசிர கால மருங்குளிர்க் காற்றா னாகி
நடுங்கின னொடுங்கி யாங்கோர் நம்பரா லயத்துட் சென்றான். (கசு)

தாலமே லடிச்சூ டஞ்சித் தழலிடைக் குதித்தான் போல
வாலும்வெங் குளிரா லஞ்சி யாலயத் திலிங்கஞ் சாத்துஞ்
சேலையைக் கவர்ந்து போர்த்தான் பாதகச் செந்தீ யந்தக்
காலையில் வளைப்ப மேனி கருகிக்கன் மாட னானான். (கஎ)

அற்றைநாள் வரலா றீச னாலயக் களவா மென்று
பிற்றைநா ளுணர்ந்தான் சோரம் பிறரிடைப் புரிந்தார்க் கெல்லாம்
பற்றுவ தொன்றே பாவம் பரனிடைப் புரிந்த வாற்றா
லுற்றதே சிவத்து ரோக மொன்றினுக் கிரண்டா யந்தோ. (கஅ)

திருந்திழை வாம பாகத் தேவினா லன்றி யிந்தப்
பொருந்துபா தகங்க ளியாண்டும் போக்கரி தென்று தேறி
யிருந்தொரு தலத்தே முக்க ணிறைவனைத் தியானித் தேத்தி
யருந்தின னிரங்கு காலை வள்ளலா ரிரங்கி யாங்கு. (ககூ)

வானமே லெழுந்த வாக்கு வடபுலந் தொடுத்துத் தென்பா
லானதீர்த் தங்க ளாடி னகலுநின் பாவ மாங்கோர்
ஞானமார் நதியி லென்று நவிற்றலுங் கவற்சி தீர்ந்து
கானமார் பொழில்சூழ் சிந்து கங்கைகா ளிந்தி யாடி. (உ0)

நன்னரு மதையே கோதா வரிநறுங் கண்ண வேணி
பொன்னியே வையை சேது பொருனைமற் றுளவாந் தீர்த்தங்
கன்னியந் துறையு மூழ்கிக் கனவரை வலங்கொண் டேகிச்
சென்னியின் மதியம் பூண்டார் சிவகிரி கூடஞ் சார்ந்தான். (உக)

கண்ணியங் கொன்றை வேய்ந்தார் கமழ்திரி கூடச் சாரற்
புண்ணிய நதியி லாடும் போதினின் மறையோன் செய்த
திண்ணிய பாவ மெல்லாந் தீர்ந்துடன் மாசு நீங்கி
விண்ணிருள் கிழியத் தோன்றும் விரிசுட ரொளிபோ லானான். (உஉ)

அருவியந் திரிகூ டத்தி லந்நதி படிந்து பாவ
மொருவினன் வறுமை நோயு மொழிந்தனன் மறையோன் வாழ்வும்
பெருகொளி வடிவும் பெற்றுன் பெற்றவாச் சரியத் தாலே
திருநதி தனக்கு நாமஞ் சித்திர நதியா யிற்றுல். (உக)

வேறு.

கங்கைபிர யாகைவட சிந்துகோ தாவரிகா வேரி வாணி
துங்கநரு மதையமுனை கண்ணைகவு தமைசரயு சோணை யாதி [வந்து
யெங்குமுள நதிகளும்புண் ணியநதிசித் திரநதியென் றிதன்பால்
தங்கியுவந் தாடுமொரு பாகமதி மாகமதி தன்னின் மாதோ. (உச)

முற்காட்டும் பலதலத்து மூன்றரைக்கோ டியதீர்த்த மூழ்கும் பேறுங், கற்காட்டி யெறிதிரையின் கவண்காட்டிப் பாவமெலாங் காகம் போலப், பிறகாட்டி யிரிந்தோடப் பிறவியெனும் பகையோடப் பெரிதாந் தெய்வ, விற்காட்டுந் திரிகூட வடவருவி நல்குமென விளம்பும் வேதம். (உரு)

பூநாறுங் கற்பகத்தின் போதாடிச் சண்பகத்தின் பூந்தா தாடி
வானாறு தலைமடுத்து மதிசூடுந் திரிகூட வரையெம் மானைக்
கானாறு மலர்சொரிந்து கங்கைபூ சித்தமது கங்கை யாறுந்
தேனாறு தனிற்படிந்தார் சென்றெருகா லமும்படியார் செனன வாரி.

வேறு.

வாவிகட் கதிகங் கூடல் குடந்தைவண் புலியூர் வாவி
யோவிலா நதியிற் கங்கை யுறுதிரி வேணி சங்கந்
தாவுமுந் நீரிற் சேது தடவரை யருவிக் கெல்லாந்
தீவமாந் திருக்குற் றுலந் திகழ்வட வருவித் தீர்த்தம். (உஎ)

ஓர்நதி யிடத்தி லைந்து மொடுக்கிமூச் சடக்கி யென்றும்
வார்புன லிடையே நின்று மாதவம் புரிவார் பேறு
கூர்பனிச் சிசிர நாளிற் குலவுசித் திரப்பூங் கங்கை
நீர்படிந் தொருநாட் செய்யு நித்திய கரும நல்கும். (உஅ)

வேறு.

மாகமா மதிதோறும் பிரயாகை மாதீர்த்தம்
பாகமா மதியினராய்ப் பல்யாண்டு படிந்தபல

ஞகமா மதிச்சடையார் வடவருவி நயந்தொருநாட்
சோகமா மதிநீங்கத் தோய்ந்தாரைத் தோய்ந்திடுமால். (உகூ)

தாமாக மூழ்கினர்க்குந் தாமொருவர் பொருட்டாலே
யாமாறு மூழ்கினர்க்கு மாசுச முடம்பழுக்குப்
போமாறு மூழ்கினர்க்கும் புனல்வழுக்கி வீழ்ந்தவர்க்குங்
காமாரி சித்திரப்பூங் கங்கைபர கதிதருமால். (௩0)

அனைத்தாரும் பிறநதிக ளாடினார்க் களவளவி
லினைத்தானும் பலனுதவு மெதிர்ந்தார்க்கும் பணிந்தார்க்கு
நினைத்தார்க்கும் புகழ்ந்தார்க்கு நீரிலொரு துளியாக
நனைத்தார்க்குங் கதிகொடுக்கு நன்னகர்ச்சித் திரநதியே. (௩௧)

ஆலைநறுங் கழைதூர்தொட் டபில்வதெனக் காலைமுதல்
வேலைமர பினிற்கதிகள் வியந்துதவும் பலநதிகள்
காலையினு மாலையினுங் கடும்பகலும் வடவருவி
பாலைபடு கட்டிதருஞ் சுவைபோலப் பலன்றருமே. (௩௨)

வான்றொடருந் திரிகூட வரைச்சாரல் வடவருவி
தோன்றியொரு நாண்மூழ்கத் தொல்வினைகள் கழிந்தோடு
மேன்றநா ளிரண்டாடி லிவ்வினையவ் வினைதேயு
மூன்றுநாண் மூழ்கினவர் கருக்குழியின் மூழ்காரே. (௩௩)

அரிதான வடவருவி யாடுவார் வினைக்குழவி
யிருதான தம்மையறிந் தேற்றதலை வனையறிவா
ரொருதான மந்நதியி லுயர்மறையோர்க் குதவுமது
தருதானப் பெருக்கமதாய்ச் சந்தானம் பெருக்கிடுமால். (௩௪)

மித்திரரும் வளநாடு மெய்யுணர்வு மனைவாழ்வும்
புத்திரரும் பேரரசும் பொருள்பலவும் புரிந்தருளுஞ்
சத்துருவின் வலிதொலைக்குஞ் சகலபா வமுந்தீர்க்குஞ்
சித்திரமா நதிப்புனலிற் சிறுகாலை படிந்தார்க்கே. (௩௫)

ஏலவே விரும்பினவர்க் கறம்பொருளின் பமும்வீடுஞ்
சாலவே கொடுத்தருளி யெழுபிறப்புந் தவிர்ப்பதனுன்

ஞாலமே லுவந்தாடுந் தவத்தோர்க்கு நான்குவகைப்
பாலுமாம் வடவருவி மருந்துமாம் பவப்பிணிக்கே. (ஙசு)

வேறு.

அயனநாள் விழுவி ழூாநா ளட்டமி பதினான் கண்ணல்
வியனமா் திருவா ராட்டு மேதகு மாத நாட்கள்
பயனமர் மூப்பான் மாகம் பகர்வட வருவி யாடி
நயனமூன் றுடையார் சேவை நண்ணினா் பிறவி நண்ணார். (ஙஎ)

முன்னுவாப் பின்னுவாநாண் மொழிந்தசங் கிராந்தி திங்கண்
மன்னுறு பின்னு வாநாண் மதிக்கிர் பாந்தள் சேர்நா
ளின்னவை யொன்றி லொன்று சதமடங் கேற்ற மாகு
மந்நதி படிந்தார்க் கேற்ற மாயிர மடங்கு மேன்மேல். (ஙஅ)

பிறந்தநாண் மூழ்கி னார்க்குப் பிறப்பரி தாகும் யாண்டு
சிறந்தநாண் மூழ்கி னார்க்குச் சிறப்பெதி ரெடுப்பர் தேவ
ரிறந்தநா ளறிந்து மூழ்கி லிறந்தவர் மூழ்கார் கும்பி
மறந்தநா ளவரைக் காலன் மறக்குநாண் மறக்கு நாளே. (ஙகூ)

திருவளர் திருக்குற் றாலச் சிவபுரஞ் சேரும் போது
மருவிநீர் படியும் போது மமலனைப் பரவும் போது
மொருவரை யொருவ ருன்னி யிருவருங் கதிபெற் றுய்வார்
கருவரைப் பிறவி காணா ரவர்தமைக் கண்டு ளோரும். (சo)

வேறு.

அந்தவுவாச் சங்கிரமம் விதிபாதம் வைதிருதி யைம்பா னொன்று
பந்தமனுப் பதினான்கு யுகநான்கு மானையநாள் பத்தோ டைந்து
தொந்தமா மட்டகைகள் பன்னிரண்டாப் பருவநாட் டொண்ணூற்
றாறு, முந்துபுனற் றுறைபடிந்து தருப்பிப்பார் பிதுர்க்கடன்கண்
முழுதுந் தீர்ப்பார். (சக)

தாம்பெற்றார் தத்துமகார் தந்துணைவர் பெறும்பாலர் தனைய பால
ராம்பற்றால் வளர்த்தமகா ரவனருளா லிவைபிறர்க் கருளும் பால
ரோம்புற்ற பரிசதனை லுயர்ந்தவரென் றிருநால்வ ரோதுங் காலை
யேம்புற்ற துயர்தீர விறந்தார்க்குத் திலநீரா லிறைக்கு நீரார். (சஉ)

வேறு.

சேணில்வைத்த மதிச்சடையார் சித்திரகங் கையின்மூழ்கிப்
பேணிவைத்த தினத்தொருநாட் பிதுர்ப்பலிவைத் திடுவாரே
லேணிவைத்தார் சுவர்க்கபதத் தெள்ளுடனீ ரிறைப்பார்கள்
காணிவைத்தா ரவர்களுக்கே கயிலாயஞ் சிவலோகம். (௪௩)

அந்நிலையே பிதுர்ப்பலிக ளமைத்திடுதற் கமையாதேற்
கன்னிநீர் வடவருவி கலந்தாடித் தருப்பணஞ்செய்
தின்னியன்மா மறைவாணர்க் கியன்றபொருள் வழங்கினார்
பன்னருந்தென் புலத்தார்க்குப் பரகதியை வழங்கினார். (௪௪)

பிள்ளையுஞ்சுற் றமுநீங்கிப் பிறநாட்டி லிறந்தார்க்கும்
விள்ளுமிரு நால்வர்களி லொருவர்விரைந் தேகியந்தத்
தெள்ளருவித் தடத்தொருநாட் சென்றுதருப் பிக்கிலவ
ரெள்ளினுக்கா யிரம்வருட மிருப்பர்சுவர்க் காதிகளில். (௪௫)

புத்திரரில் லாதிறந்தோர் துன்மரணம் புக்கிறந்தோர்
சத்தநர கிடையழுந்தித் தவிக்குநா ளெவரேனுஞ்
சித்திரமா நதிக்கருணைத் திரைக்கரத்தி லவருடம்பி
னத்தியளித் தாரவர்க்கே யரசளித்தார் வானுலகம். (௪௬)

வேறு.

முத்தனையார் வரம்பழித்தோர் முதுகுரவர்க் கிடர்புரிந்தோர் முக்கண் ஞானை, நத்தனைநான் முகத்தோனை யிகழ்ந்தோர்பல் லுயிர் செகுத்தோர் நன்றி கொன்றோர், கத்தனைவிட் டமர்க்களத்தி லோடினோர் நம்பினர்க்குக் கபடஞ் செய்தோ, ரெத்துணைப்பா தகரேனும் வடவருவி படிந்தவர்வீ டெய்து வாரே. (௪௭)

அந்தணர்கண் முனிவர்கடன் கழிப்பர்பிர மச்சரிய மரிதினாற்றிச் செந்தழலி னவிசொரிந்து மகமியற்றித் தேவர்கடன் கழிப்பர் மேன்மைச், சந்ததியை யினிதீன்று தங்கள்பிதுர்க் கடன்கழிப்பர் தரைமேலிந்தத், தொந்தமாங் கடன்மூன்றும் வடவருவி யாடினவர் தொலைப்பர் மாதோ. (௪௮)

அறியாம லிளமையிற்செய் பாவமென்ன நன்பகலி லாடத் தீருஞ்
சிறுகாலை படிந்திடிற்போங் காளையராய் மனதறியச் செய்த பாவம்

வறிதான புன்மாலை படிந்தார்க்கு முதுமையிற்செய் மாபா வம்போம்
பிறியார்முப்பொழுதாடில்வடவருவியெழுபிறப்பும்பெயர்க்குமாதோ.

கள்ளாடு மைம்பொறிக ளடக்கலொரு நெறிநடத்தல் கர்ணங் காத்த, லெள்ளாமலீகைதிடந் தன்னுயிர்போன் மன்னுயிர்கட் கிரங் கன் ஞானே, முள்ளார்வம் பொறைசமித மின்சொலுடன் வாய்மை யென வுயரீ ராறுந், தள்ளாத மனத்திர்த்த மதுபடியார் புனல்படி யிற் றவளை நேர்வார். (ரு௦)

வளங்கொண்மா னததான மொழிந்துபிற நதியாடு மாந்தர்க் கெல்லாந், துளங்குமவர் புறத்தழுக்குத் தொலைவதன்றிப் பெரும் பாவந் தொலையா தாகுங், களங்கமுறு மலமகற்றிப் பாவமெலாங் கழுநீராக் கழுவு மாற்று, முளம்பெறுதா னப்பலனும் வடவருவிப் புனல்படிந்தார்க் குள்தா மன்னே. (ருக)

இத்தலத்து நதிமகிமை யெங்குமே கண்ணுகி யெங்கு மான் நித்தனறிந் தியமனுக்குங் குறுமுனிக்கும் வாசுகிக்கு நெடிய மாலாஞ் சுத்தனுக்கு நவின்றபடி வியாதனெனக் கொருதொகையாச் சொல்ல யானு, முத்தகமா வுமக்குரைத்தேன் விரித்துரைக்க வயனாலு முடி யா தென்றான். (ருஉ)

தேனாறு சித்திரமா நதிமகிமைத் தேனாறு செவிகா லாகப்
பானாறு மனத்தடத்துப் பாய்ந்துதவப் பயிர்தழைத்த படிவர் பின்
வானாறு திரிகூட வரையாறு தனிற்போந்து மழுவ லானைப் [ன்னும்
பூநாறுமதுச்சொரிந்துபோற்றுமாறுணர்த்துகெனப்புகல்வான்சூதன்.

7- வடவருவிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - நகஅ.

---

## எட்டாவது:—சிவமதுகங்கைச் சருக்கம்.

இரவி தன்குலச் சகரனார் பரிமக மியற்றப்
புரவி யைத்திசை விடுத்தலு மதனைவான் புரப்போன்
கரவி னுய்த்தனன் கபிலன்வாழ் பிலத்தது காணன்
மறையிற் றேடுபு மகன்மக னஞ்சுமான் சலித்தான். (க)

அதனைச் சாகர ரறுபதி னாயிரர் துருவி
விதனத் தாற்புவி சூழ்வரத் தொட்டனர் மிசைந்தார்
பதனத் தோர்புடைக் கண்டனர் முனிவன்மேற் பாய்ந்தா
ரிதனைக் கண்டிலான் விழித்தலுஞ் சாம்பரா யிறந்தார். (உ)

சகரன் சாகரந் தொட்டவ ரிறத்தலுந் தகவான்
மகமு டித்தன னஞ்சுமான் மகன்றரு மகவாம்
பகிர தன்றவ மியற்றினன் விரிஞ்சனைப் பணிந்து
நிகரில் சாபத்தின் மாய்ந்தவர் நரகினை நீப்ப. (௩)

பங்கை யாசனன் மொழிப்படி கங்கையைப் பரவிச்
சங்கை யாத்தவம் புரிந்தனன் கங்கையைத் தரிப்பான்
மங்கை பாகனை வணங்கினோற் றன்னவன் வரத்தாற்
கங்கை பாற்றவம் புரிந்தன னளப்பருங் காலம். (௪)

புரியுங் காலையில் வரநதி யதிர்த்துவான் பொதிர்ந்து
விரியு மெண்டிசை நடுக்குற வண்டமும் வெடிப்பக்
கிரிவி லானையு மதித்திலள் குதித்தனள் கிளர்பார்
தரிப டாதென வமரரு முனிவருஞ் சலிப்ப. (ரு)

மாக மண்டலத் துடுக்குலங் கயலென மறுக
மேக மண்டலம் பாசியா மிதப்பவிண் கதிர்கள்
யோக மண்டலத் திருவகைக் கமலங்க ளூறழ
நாக மண்டலச் சடையில்விண் ணடுக்குறப் பாய்ந்தாள். (சா)

அடைய வாயிரம் பருவமா யிரமுகத் தடினி
யுடைய நாயகன் சடைமிசைப் பாய்தலு முலறிப்
புடையி துங்குறு திரவிமுன் புற்பனி போன்றாள்
விடையி னார்புகழ் பாடினா ராடினார் விண்ணோர். (எ)

வானெ லாமுடைத் தெழுசுர நதிப்புனல் வரதன்
கான மார்சடைக் காட்டிடைச் சுவறலாற் கலங்கி
மீன லோசனை பாகனை யிறைஞ்சினன் வேந்தன்
ஞான நாதர்தாள் வீழ்ந்தனள் கங்கையு நடுங்கி. (அ)

இளிகொள் கங்கையை யமைத்தா னரசனுக் கிரங்கி
யொளிர்ப னிக்கிரி விடுத்ததோர் துளியெழு வகையாய்
விளிகொள் சீதையுஞ் சுசுட்டுவுஞ் சிந்துவு மேல்பா
னளினி பாவனி கலாதினி கீட்டிசை நடப்ப. (௯)

பெருகு கங்கைதென் பாலதாய்ப் பகிரதன் பின்போய்த்
திருகு சன்னுவின் வாய்ப்பெய்து செவிவழி விடுப்ப
மருவு சானுவி சுடலைபாய் தலுமவன் மரபோர்
நரகொ ழிந்துபொன் மானமேற் சுவர்க்கநா டடைந்தார். (௧௦)

வேறு.

கதியின்மேற் சகரர்தமை விடுத்தநதி கண்ணுதலார் கயிலை மேவி
மதிகுலாஞ் சடைபாயென் மாய்ந்தவுருக் காட்டுகென வணங்க நாதர்
சதிசெய்பா தகந்தேய்க்குந் தருமமுரு வளர்க்குமதத் தரும பாவத்
ததிகமாஞ் சிவதருமஞ் சிவத்துரோ கங்களென வருளிப் பின்னும்.

ஒத்திடுமெண் பத்தியினு லெய்துவது சிவதரும முரைக்குங் காலைத், துத்தியம்பத் திமைபூசை புரியாமை புரிந்தவரைத் துதித்திடாமை, பத்திபுரிந் தமைமறத்தல் சிவநிந்தை யெனப்புகலப் படுவதாறும், வித்தெனவும் வேரெனவும் விளைதல்சிவத் துரோகத்தின் விளைவு மாதோ. (௧௨)

அவையாறிற் சிவநிந்தை யதிகமதை யெளிதெனநீ யடைந்தாயீது, தவமாகப் பலகோடி யுகங்கள்புரி யினுமுனக்குத் தவிராதென்று, ரிவைதீர வருள்புரிய வேண்டுமென விறைஞ்சுதலு மிறைவர் நோக்கிச், சிவபூசை யாயிரம்யாண் டியற்றியிருந் தலையாகிற் றீரு மென்றார், (௧௩)

உன்னுடைய சன்னிதியைப் பிரிபிலெனக் கினியொருநா ளுகமா மென்று, பின்னுமவள் வணங்குதலும் பெரியபிரான் சிரித்திரங்கிப் பேதாய் பல்யாண், டிங்கிலத்திற் றீப்பரிய பாவமொரு தினம்வசித்தார்க் கெளிதாத் தீர்க்கு, மன்னுமொரு தலமுளது நமதுரு கியம்பிறர்க்கு வழங்கே மென்றார். (௧௪)

அண்ணலே யருளுகென வணங்கும்வா நதிக்கிரங்கி யமலர் நோக்கித், தண்ணருவித் திரிகூடம் யாமிருக்குஞ் சயிலமந்தச் சயிலை

மீது, நண்ணுமோ ரிலிங்கமதை யருச்சித்தாற் பாவமொரு நாளிற் றீரும், பெண்ணணங்கே மதுவினைற் பூசைசெயி லெமையணுகப் பெறுவா யென்றார். (௧௫)

என்றுதிரு வாய்மலர்ந்து விடைகொடுப்பக் கயிலைகடந் திமைய நீங்கிக், குன்றுதனைச் சிலைவளைத்தார் திரிகூடத் தருவிசொரி குவ ட்டி னேகித், துன்றுசிவ லிங்கமதை மதுச்சொரிந்து பூசைசெய்து துதிக்குங் காலை, யொன்றுநதித் திருமடந்தை விழிகளிப்ப மழவி டைமே லுதித்தா ரண்ணல். (௧௬)

பாதகமா மிருள்விடிய வுதயகிரி மேலுதிக்கும் பானு வேபோல் ரிப்ப வேதநா யகன்விடைமேற் றோன்றுதலு மனங்களிப்ப விழி நீர் போ வாதிநா யகசரண மமலநா யகசரண மருளா னந்தச், சோதிநாயகசரணஞ்சரணமெனக்கங்கைமங்கைதொழுது வீழ்ந்தாள்.

சரணமென விறைஞ்சுதலு மன்பர்தமக் கன்புடைய தம்பி ரானார் விரணமற வினைநீக்கி வரநதிக்கு விதிகாணு வேணி யிந்தார் புரமர்தமைக் கங்கைமங்கை மதுவினைற் பூசைபுரி பரிவி னாலே புரணமா மத்துறையு மாதிசிவ மதுகங்கை யாய தென்றான். (௧௮)

நான்முகத்து முனிவர்கு தனைவாழ்த்தி யெமதுவினைக் கடுங்கோ டைக்கு, வான்முகத்து முகில்போல வந்தருளி மதுகங்கை மகிமை யென்னும், பான்முகத்து மாரிபெய்தாய் நன்னகராங் சருக்கரைப் பூம் பந்தர் மீது, தேன்முகத்து மழைபோலுஞ் சிவபிரான் மகிமை யினைச் செப்பா யென்றார். (௧௯)

ஆர்த்தமால் வரைதவத்தி னார்த்தமால் வரைநதிகட் கதிக மான, தீர்த்தமான் மியம்பிறவி தீர்த்தமான் மியங்கருணைத் திருக் குற்றாலங், கூர்த்தமா கதித்தான மிவைமூன்று முடையானைக் கூறென் பார்க்கு, மூர்த்திமான் மியம்பெருக மொழிகின்றான் புரா ணமெலா மொழிந்த நாவான். (௨0)

சிவமதுகங்கைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௮.

## ஒன்பதாவது:—மூர்த்திவிசேடச் சருக்கம்.

ஒளியாக வெளியாக வுருவாக வருவாக வொன்றி னாலுந், தெளியாத பெருமானைத் தெளிவார்க டெளிவானைத் திரிகூடத்தி, லளியானை யனைத்துலகுக் காரியானென் றுரைத்தமறை யடியார்க் கென்று மெளியானென் றெடுத்தியம்பு மாதலால் யானுமெடுத் தியம்பு வேனால். (க)

கைத்தலத்து மழுவேந்திக் கயிலைமுதற் றலத்துறையுங் கடவுளோரின், முத்தலைவெற் பினிலுறையு மூர்த்தியே யுயர்கருணை மூலமூர்த்தி, யெத்தலத்தும் பரமனுள னிவனதிக னெனவுரைப்ப தேவனென் பிரே, லத்தலத்தி னிறைந்திருப்ப னெத்தலத்து மோரோர்கூறமையா நிற்பன். (உ)

கடலேழும் புறக்கடலுந் திரைபெருகி யுவட்டெடுக்குங் கற்பாந் தத்தி
லடலாழி வரைசாய்ந்து மேருவரை நிலைகலங்கி யசல மெல்லாந்
தடுமாறி யடிக்கழிந்து புவனசரா சரமொடுங்கித் தரங்க வாரி
தொடராக மண்டியபின் படரூழிக் கனலெழுந்து சுவற்றிற் றன்றே.

அண்டமூ லத்தெழுந்து புவனமெலாஞ் சுட்டகன லடங்க மேலே சண்டவா யுப்பரந்து தாவியற வொடுக்கியபின் றரிப்பாய் நின்றீ விண்டலமும் விண்டலமேற் கடவுளரு மேலுளதத் துவமு மாங்கே யண்டையுகந் தனிற்மூன்று முறையாக வொடுங்கவொரு பரனே நின்றான். (ச)

பின்றாகி யளவிறந்த காலமெலாம் பிரிந்திடவும் பிரியா வண்ண மொன்றாகி யெவ்வுயிர்க்கு முணர்வாகிக் குணங்குறிக ளொடுக்கந் தோற்ற, மின்றாகி நின்றவனே யிறையாக வெழுந்தருளி யிருந்தா னென்றும், பொன்றாது சிவபுரம்போ னின்றபுடார்ச் சுனபுரத்துப் பொருந்தி மாதோ. (ரு)

ஒருவடிவுந் தனக்கெனவொன் றிலனாகிக் கருணைதிரு வுருவாக் கொண்டு, திருமுகங்க ளாயிரமுங் கண்களா யிரமுமெனத் திகழுஞ் சோதி, யிருமைபெறு மூவகைத்து மொடுக்குமுறை தோற்றுவிக்கு மியற்கை பேணி, யருணூற் றிதழ்க்கமல மலர்மேலந் தணனுருவ மாகி னானே. (சு)

திசைமுகமு மொருநான்கு மவுலிகளு மிருநான்கு செம்பொற் றோளும், விசையநெடுந் தண்டமும்பொற் கமண்டலமு முப்புரிநூ ல் விளங்கு மார்பு, மிசையமலர்ப் பதுமபீ டத்திருந்து நாமகளா ரிட த்தின் மேவி, யசைவிலாப் புவனமெலாம் வான்வளிதீ நீர்பாரா லரு ளிச் செய்தான் (எ)

வானமுகி லோரேழுஞ் சூரியருஞ் சந்திரரும் வளர்கோ ளேழு மீனினமும் விண்ணவரும் விண்ணவர்வேந் தனுந்திசைக்கு வேந்தர் யாரு, மேனையரா ங்கட்வுளரு மிருபொழுது முக்காலு மிருது வா று, நான்மறையா றங்கமுதற் பலகலைபும் படைத்தருளி நயப்பான் மன்னோ. (அ)

ஓமவேள் வியும்வேள்வித் திரவியமு முயர்காயத் திரியு நல்கித்
தாமரைவாண் முகம்புயமார் பூருவினிற் சாதியொரு நான்கு மீன்று
நாயவா ரிதிபலவுந் தடம்பலவும் வரைபலவு நதிகள் யாவுந்
தேயலர்ப்பூஞ் சோலைகளுந் திகிரிநெடுங்கானகமுஞ்சிருட்டித்தானே.

பிணிமருவு பரசமையச் சூறையிற்பட் டுலகமெலாம் பிறழா வ ண்ண, மணிபெருகுஞ் சிவசமய நெறிதருசெண் பகக்காவு மருளிச் செய்து, பணிவிடைவா னவர்புரிய மறைபரவ நான்முகத்தெம் பகவ னாகிக் குணில்பொருமும் முரசதிருந் திரிகூடக் கோயில்குடி கொண் டா னன்றே. (௧௦)

பார்பூத்த வயன்வடிவாற் படைத்தருளு முலகமெலாம் பரிப் பான் மேனி, கார்பூத்து வாய்பவளக் கனிபூத்துக் கண்கரங்கால் கம லம் பூத்து, வார்பூத்த கொங்கைமட மயிலிரண்டு மார்புபுய வரை மேற் பூத்துக், கூர்பூத்த வளையாழிப் படைபூத்த நெடியகுணக் குன் ற மானான். (௧௧)

கமலலோ சனனாகிக் காத்தனன்முன் படைத்தவெலாங் காத்து முக்க
ணமலநா யகனாகக் குறுமுனிக்கா யமர்ந்ததுமே லறைவா மாதி
விமலையாம் பரைமருவி யிச்சைஞா னக்கிரியை மேவி யாடு
நிமலனே யத்தலத்து மூவராய் முத்தொழிலு நியமித் தானே. (௧௨)

முப்பாலாய் முப்பொருளாய்ச் சிற்பொருளாய்த் திரிகூட முத ல்வ னான, வொப்பாரு மில்லானுக் கொப்பாமற் றொருபொருளை யு

ரைக்கற் பாற்றே, வப்பால னவ்வடிவ னக்குணத்த னென்றவனை யறிதற் கின்ன, மெப்பாலு மிருவருககும் பேறிலைநான் மறைக்கு மெழுத் தில்லை மாதோ. (௧௩)

ஆரிடமா னிடந்தேவ மசுரமிராக் கதம்பதிட்டை யைந்து கூற்று லேரிணங்கு தலமநந்த மியம்புசயம புவுமநந்த மிவற்றின் மேலும் பாரருணை போகலிங்கஞ் சைவலிங்க மதுரைபரா பரமற் றெல்லாஞ் சீரிணங்கு குற்றாலச் சிவலிங்கம் பரமரக சியமே யாமால். (௧௪)

இமைப்போது கொன்றையிலோர் நொடிப்போது கூவிளத்தி லி லிங்க நாடி, யமைப்போது நாலுணர்ந்து தேவரெலா மித்தலத்தை யகலா வண்ணந், தமைப்பேணி யிருந்தருள வேண்டுமென வரம் வேண்டத் தந்தோ மென்று, நமைப்பேணி நாதனருள் புரிந்ததற்கு வேதமொரு நான்குஞ் சாட்சி. (௧௫)

பற்றுகப் பதஞ்சலிவெம் புலிபரவத் திருச்சிற்றம் பலமாந் தில்லைப் பொற்றன நடம்புரிவார் திருவேடு பிடித்தெழுதப் புராண மோர்ந்து கற்றுருங் கல்லாரு முருகுகவி வாதவூர்க் கருணை வள்ளல் குற்றாலத் திற்குறியா யிருந்துமெனவுரைத்ததிந்தக்குறிப்பாலன்றோ.

அன்னவகை யாலிந்த தலங்களுக்குங் குற்றால மாதி யாகு முன்னமுறை திரிகூட மூர்த்தியே மூர்த்திகளின் மூல மூர்த்தி யின்னவனைப்பூசிக்கும்பூசையேயனைவருக்குமேற்கும்பூசை [போல. மன்னுபுனன் மூட்டில்விடக் கொப்பெலாந் தழைத்தோங்கு மகிமை

சாலைதொறு மெரிவளர்க்கப் புகவேண்டா தவம்புரிந்து தவிக்க வேண்டா, சோலைநறுஞ் செண்பகஞ்சூழ் சுருதிகிறை குறும்பலவிற் சோதி நாத, னாலயத்தை நோக்கிவரி னடிக்கடியோர் பரிமகப்பே றமையு மாங்கண், மாலயனுக் கரியானை வந்துபரா வினர்பேறு மதிக் கொணுதால். (௧௮)

மணிசெய்பூண் செழுஞ்சாந்து மலர்மாலை தூசுகளால் வீரதன் மேனிக், கணிசெய்வார் தம்மேனிக் கணிசெய்வார் வானுலகி லமரர் மாதர், கணிசெய்வான் பொழில்சூழுந் திரிகூடப் புரானர்க்குக் கல் லாற் பொன்றைற், பணிசெய்வார் தமக்கேவற் பணிசெய்வார் சயமா தும் பதும மாதும். (௧௯)

காமாரி தனக்கொரு நூ வனஞ்செய்வார் கற்பகப்பூவனத்தில்வாழ்வார்
பூமாரி சொரிவார்மேற் சொரிவார்கள் வானோர்கள் பொற்பூ மாரி
கோமாரி பான்மாரி ததிமாரி நெய்மாரி கோது தீர்ந்த
தேமாரி சொரிவார்கள் கடல்கள்கு மூலகாண்டு சிவமே சேர்வார். ()

குவிமாலை மதிவேணித் திரிகூடப் பரனூர்க்குக் குளக மாதி
கவிமாலை புனைந்தார்கள் கற்பகமா லையைப்புனைந்து கற்பம் வாழ்வார்
தவிராமுக் கனியாலுந் தக்கவிள நீராலுஞ் சாந்தத் தாலு
மவிடேக மாட்டுமவர்க் கவிடேகஞ் சூட்டுவர்மே லயனு மாலும். ()

மோனைவா கனமியற்றித் திருவிழாப் பொலிவுமுதன் முயன்றோர் வெள்ளை, யானைவா கனத்தார்க்கு மன்னவா கனத்தார்க்கு மதிக ராவார், தானைகே தனங்குடைமேற் கட்டிபரி வட்டமணித் தசும்பு மோலி, யேனைய பரணமுத லியற்றுவார் திசைக்கிறையா யிறைபாற் சேர்வார். (உஉ)

கொடியாடு மணிமாட முயர்கூடத் திரிகூடக் கோயி லார்க்குக் கடிமாலை மலர்தொடுப்பார் கமழ்திருமஞ் சனமெடுப்பார் களபஞ் சேர்ப்பார், படிதூபம் விளக்கிடுவார் பரிகலங்கள் விளக்கிடுவார் பணிவார் தெய்வ, வடிவாகிச் சிவபுரத்துத் தொண்டர்குழாத் தண்டர்குழாம் வணங்க வாழ்வார். (உங)

வேறு.

பானு வாரத்திற் பானு வுதித்திடத்
தேனு லாம்புனற் சித்திர கங்கைதோய்ந்
தானு லாவுமம் மானை வலஞ்செய்வார்
வானு ளார்தொழ மால்பதஞ் சேருவார். (உ௪)

திங்கள் வாரங் கதிர்படு செவ்விவாய்ச்
சங்க வீதிச் சயம்புவுக் கோர்மல
ரங்கை யாலணி வாரணி விப்பவ
ரெங்க ளுதர் சிவபுர மெய்துவார். (உரு)

சேயின் வாரத்தி லெங்கரன் செங்கைவேற்
சேயர் தாதைக்குச் செண்பகப் பொங்கர்வாய்ச்

சேய பாதத்திற் செய்மலர் சாத்துவார்
சேய ராயிருப் பார்சிவ லோகத்தில். (௨௬)

அத்த மார்புத வாரத்தி லம்பிகை
யத்த மார்செண்ப காடவி யண்ணலை
யத்த மார்தும்பைப் போதுகொண் டர்ச்சிக்கு
மத்தர் தாரகை வானுல காளுவார். (௨௭)

அம்பொன் வாரத் தருவி படிந்தெழீஇப்
பைம்பொன் வாசத் தலரிப்பைம் போதுதூஉய்
நம்பன் வார்கழல் போற்றினர் நண்ணுவார்
செம்பொன் மார்பகத் தார்திரு வைகுந்தம். (௨௮)

திருந்து நன்னகர்த் தேவுக்கு வெள்ளிநாட்
கரும்பின் கட்டி பருப்புக் கலந்திடும்
விரும்பு தோய்வை யமுதுசெய் விப்பவ
ரரும்பு பூவி னயன்பத மேவுவார். (௨௯)

காரி வாரத்திற் சித்திர கங்கையாம்
வாரி தோய்ந்து பிரான்வலை வீதியைச்
சீரி னோர்வல மாகினுஞ் செய்குவார்
நாரி பாகர் கயிலையை நண்ணுவார். (௩௦)

ஆறு செங்க லணிவிரல் போன்றகன்
ஞாறு காசள வாகினு நீள்விடை
யேறு நன்னகர்க் கோன்பணிக் கீகுவார்
வீறு வெள்ளிக் கயிலையின் மேவுவார். (௩௧)

சீவு சாந்தமோர் நெல்லள வாகினு
மாவின் பாலொரு கையள வாகினும்
பூவொன் றாகினு நன்னகர்ப் பொன்னகர்த்
தேவின் பாலணி வார்சிவ லோகரே. (௩௨)

சிறுகாலை பணிவார்கள் சாலோகத் துறைவர்திரி கூடத் தேவை
யுறுகாலை பணிவார்கள் சாமீபத் திருப்பார்கதி ருச்ச மாகப்

பெறுகாலை பணிவார்கள் சாரூபம் பெறுவர்கதிர் பிறங்கல் சாயு
நுறுமாலை பணிவார்கள் பரமசா யுச்சியமே நண்ணு வாரே. (௩௩)

திருநாளுஞ் சிவவிரதந் தருநாளும் வருடவழிச் சிலவி சேடம்
வருநாளுந் திரிகூடப் பெருமானை யடிபரவ வருவோர் யார்க்கு
மொருநாளைக் கன்னமிட்டார் தருமமெலாங் கன்னமிட்டா ரொருநா
ட் கூட, விருநாளைக் கன்னமிட்டா ரிருவரையுங் கன்னமிட்டா ரிட
த்திற் சேர்வார். (௩௪)

தருமமே நிறைவேறுந் திரிகூடம் பணிவார்க்குத் தாங்கள்வேண்டும்
பொருளெலா நிறைவேறுங் குற்றாலத் தலமகிமை புகழ்கின் றோர்க்கு
மருவுவலம் புரிவீதி வலம்புரிவார்க கின்பமென்றும் வளரு மேன்மே
லருள்குலாங் குறும்பலவ ரடிப்பிணைகள் பணிவார்க்கே யழியா வீடு.

வில்வந்தான் றுதகிதான் கொன்றைதான் றிரிகூட விமலாக்
கீவார், செல்வந்தான் பரகதிதான் செப்பவெளி தோவதற்குத் திறமி
லாதார், புல்லென்று ஆம்வனத்தோ ரிலையென்று ஆங்கிடைத்த பூ
வென் றுனு, மல்லென்று ஆம்பகலென் றுனுமெந்தை யார்க்களிக்கி
ல்மர ராவார். (௩௬)

நஞ்சமுத நுகர்ந்தார்க்குப் பாலமுத நுகரவொரு நாட்செய் வாரே
அஞ்சமுதர் தங்களுக்குமாத் துடனமுத நுகர்ந்திருப்ப ரூழி கால
மஞ்சமுத கதிர்முடித்தா ரடியவர்க ளடியவர்கட் கடிசி லீவார்
கஞ்சமுத லயனுகி யரியாகிப் பெரியசிவ கணத்த ராவார். (௩௭)

நேசிப்பார்க் கினியபிரான் குற்றாலச் சிவசரிதை நிகழ்பு ராணம்
வாசிப்பார் புகழெடுத்து வாசிப்பார் சிவபுரத்து வாழ்வோ ரெல்லாம்
பேசிப்பார் வானுலகம் புகழ்மகிமைத் திரிகூடப் பெருமான் றன்னைப்
பூசிப்பார் தேவரெனப் பூசிப்பார் தமைத்தேவர் பூசிப் பாரால். (௩௮)

கண்டத்தே கறைபூண்டா ரடியவரைக் காப்பதொரு கடன்
பூண் டார்க்கு, மிண்டர்க்கே யாளுனும் விசையம்வரு மவர்க்குறு
கண் விளைப்பா ராகி, லண்டர்க்கே யானுலு மவசெயமா மதுவினவி
னைமல மூர்த்தி, தொண்டர்க்காந் துணைவருக்குத் துணையாவார் துன்
னார்க்குத் துன்னு ராவார். (௩௯)

நின்மலப் பரையாஞ் சத்தி நிகிலகா ரணத்தி னாலே
நன்னகர்ப் பரன்பான் மேவு மகிமையை நவிலற் பாற்றோ. (௨)

சிவபெருங் கோண நான்கு சிற்பரை கோண மைந்தா
நவபெருங் கோணத் துள்ளே நண்ணுமீ ரிருபான் முக்கோ
ணிவர்தரு வட்ட மேன்மே லெட்டித ழீரெண் கோண
மூவரிமூ வட்ட மூன்று சதுரமு முளதோர் பீடம். (௩)

அப்பெரும் பீட மன்றே யருட்பரா சத்தி பீட
மொப்பரும் பரம யோகத் துறைதலால் யோக பீடந்
தப்பிலா வகில மூலந் தரித்தலாற் றரணி பீட
மிப்பெரும் பீடத் துள்ளா ளிறைவர்பா லெம்பி ராட்டி. (௪)

நங்கைபா லாதி யிச்சை ஞானநற் கிரியை யென்னப்
புங்கவ னருளா லைங்கு சத்திகள் பொலிந்து தோன்ற
வங்கவர் தம்மா லெம்மா னியற்றுவ னதிகா ரங்க
ளிங்கவு ருருவ மெம்மா லியம்பரி தியன்ற சொல்வாம். (௫)

மதிமதி புனையு மோலி நாட்டங்கண் மூன்று வாசச்
சததள மபயந் தானை செபவடந் தரிக்கு நாற்கை
மதிமுக மைந்து நான்கு மரபின்மூன் றொன்று நான்காம்
புதிவெண்மை பச்சை செம்மை பால்பொன்மை யைவர் மேனி. (௬)

இனியசத் திகளோ ரைந்தா லைந்தொழி லியற்று மெங்கோ
னனிதமில் பரையே யாதி சத்தியா யருளாற் றோன்றி
மனிதயா னொன்று சென்றால் வருதின மொன்றாந் தெய்வப்
புனிதயான் மரைஞ் ஞாறு பொருந்துவுள் கருப்ப மாக. (௭)

ஒருபெருங் கருப்பந் தன்னி லுயர்ந்தகற் பகப்பூங் கொம்பு
தருமிரு நிதிபோற் பொன்னைச் சதுர்முகத் தவனைத் தந்தாள்
கருதுமோர் கருப்பந் தன்னிற் கமழ்வல்லி சாத மொன்று
மரகத மிரண்டன் றென்ன மாலுட னுமையை யீன்றாள். (௮)

மூற்றரும் புணரி யீன்ற முத்தநற் பவளம் போல
மூற்றொரு கருப்பந் தன்னில் வாணியை யுரனை யீன்றாள்

வெற்றிநான் முகற்கு வாணி விண்டுவுக் கலர்மேற் செல்வி
யுற்றசீர்த் தார மாக்கி யுமைமணம் புணர்ந்தா னெம்மான். (௯)

நிமலனும் பிரம சாரி நின்மலை யென்னு ஞானக்
குமரிபா லகிலந் தோன்றக் குற்றாலங் கோவி தாரஞ்
சமருக மென்னு நாமந் தருவரை யாத்தி நீழ
லமர்தலாற் றிருக்குற் றால மானது மூலட் டானம். (கo)

மூகின்முலை யாதி சத்தி மூவரைப் பயந்த தாலுந்
திகழுமூ விசேடத் தாலுந் திரிகூட மென்னு நாம
நிகழ்வது தலத்துக் கந்த நிமலைசன் னிதிக்கே நின்று
சகமெலாந் தொழுநின் றுடுந் தாணுமா லயப்பூந் தொட்டில். (கக)

பூவணி மருமத் தானும் பொன்னணி மருமத் தானு
நாவணி யொருகொம் பானு நனிமுகத் தொருகொம் பானுந்
தேவர்தஞ் சிறையை மீட்ட செவ்வேளுஞ் சிலைக்கை வேளு
மேவரும் விரவுந் தான மிவள்பெருஞ் சன்னி தானம். (கஉ)

வேறு.

பரா நுபவஞ் சிவா நுபவ மெனுநாழிக் கிருநாழிப் படிநெல் லாலே
தரா தலமொட் டகிலாண்டம் வளர்த்தருளி யறம்வளர்க்குந் தாயா
யென்று, நிராமயசிற் பரனிடத்துச் சிற்பரையாய்த் திரைகடல்
போ னீங்கி நீங்காப், புராதனியைத் திரிகூடத் திரிபுரையை யலதெ
வர்க்கும் புகல்வே றுண்டோ. (கங)

செங்கதிரும் வெண்கதிரும் வலம்புரியும் பொலம்புரிசைத் திரி
கூடத்து, நங்கைபரை பீடமதின் மேடமதி தனிலாவி னறுநெய்
யாட்டி, மங்கலைபொற் பதம்பணிவார் மால்பதமே வுவரிடப மதியின்
வாசப், பொங்கலுஞ்செண் பகப்போதா லருச்சிப்பார் சிவபதத்திற்
பொருந்து வாரே. (கச)

வெள்ளிநிலாக் கொழுந்தோட்டுஞ் செழுந்தோட்டு மல்லிகையா
ன் மிதுனத் திங்க, ளெள்ளியள்ளி வியன்பதத்தி லருச்சிப்பா ரயன்
பதத்தி லணுகி வாழ்வார், தெள்ளியகற் கடகமதி கருப்புரசந் தனங்
கொடுசிற் பரைபீ டத்தில், லொள்ளியமந் திரபதத்தா லணிபவரிந்
திரபதத்தி லுறைவா ரன்றே. (கரு)

அவளவனு மதுவுமென வனைத்துயிரு மனைத்துலகு மருளிச் செய்தா ளெவளவளாந் திரிகூடப் பரைபீடத் தலரியிறு லியாவி மாதந் தவளமலர் கனகமலர் சாத்துமவர் வாணிதிரு வருளிற் சார்வார் பவளமலர் சாத்துமவர் பரையருளிற்பயின்றுசிவ பதத்திற்சேர்வார்.

கன்னிமதி சென்னிமதி குலவுதிரி கூடவரைக் கவுரி பீடத் துன்னியுயர் கிருதமுட னமுதமைப்பார் பரிதிவள ருலகிற் சேர்வா ரந்நிலைது லாமதியிற் சந்நறு நித்தபில மாட்டி னூர்கள், சென்னி நான் கெழில்படைத்துப் பொழில்படைப்பான் பெரும்பதத்திற் சேர்கு வாரே. (கஎ)

பெருகியநெய்த் தீபமிட்டு விருச்சிகத்திங் களிற்காண்பார் பிற வி காணு, ரொருதனுவிற் பருப்பமுத மூட்டினர்வா ளூட்டமுத மு ண்டு வாழ்வார், மருவமர்செண் பகச்சோலைச் சிற்பரைபீ டத்தினி தா மகர மாதந், திருமலியுங் கருப்பூர தீபமிட்டா ரமரகுல தீப மா வார். (கஅ)

வடவருவித் திரிகூடச் சாரல்வளர் பரைபீடம் வணங்கி யேந் திக், கடமதியி லரிசனபா னிரஞ்சாத்திற் சுடர்மதியின் கதியிற் சே ர்வா, ரடல்பெருகுங் கயன்மதியி லைவகைய திரவியங்க ளமைத்து வாசக், குடநறு நீ ராட்டினவ ரழிவிலாப பரமபதங் கூடு வாரே (கக)

துய்யமலர்க் கரங்குவிப்பார் கையினுற் செய்தவினை தொலையு நாவாற், செய்யபுகழ் வாழ்த்தினர்க்கு வாக்கினுற் புரிபாவஞ் சிதை யுங் கண்ணு, லுய்யவெதிர் காண்பார்க்கு விழியினு லிழைத்தவினை யொழியு ஞானத், தையல்பரை பீடம்வலம் புரிந்தாரைப் பிரிந்தோ டுஞ் சகல பாவம். (உo)

சென்றுபணி வார்புகழ்வார் திரிகூடச் சிற்பரையைத் தியான ஞ் செய்வார், வென்றிமன முதலாக முப்பொறியாற் செயும்பாவம் விரைவி னீங்கு, மன்றுடையார் குற்றாலம் பரவியருட் பரைபீடம் வணங்கி யேத்தி, நின்றுதொழு மட்டுமன்றே பழவினைக ளவரிடத் து நிற்ப தெல்லாம். (உக)

உயர்காயத் திரிசெபிக்கிற் கற்பமா யிரம்பிரம னுருவாய் வாழ் வார், பயனுமெட் டெழுத்துரைக்கி லரிருவா யிரங்கற்பம் படைத்

து வாழ்வார், புயலாடுந் திரிகூடப் பரைபீடத் தஞ்செழுத்தைப் புகல்வார் வெள்ளிக், கயிலாயத் தொருபதினா யிரங்கற்ப மிருப்பர்நா தற் கண்ண ராக. (உஉ)

இவ்வண்ணம் பலவுளவாந் திரிகூடப் பரைமகிமை யென்று வாக்கான், மைவண்ணக் கந்தரத்தார் மழைவண்ணச் சதுரகவி யலையச் சாரன், மெய்வண்ண முனிக்குரைத்த படிசூத னுரைத்தருளி மேலோர் வேண்ட, வுய்வண்ண மறைவடிவாங் குறும்பலா மகிமையினை யுரைப்ப தானன். (உங)

10-பராசத்தி பீடச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—சஙிச.

## பதினொராவது:—குறும்பலாச் சருக்கம்.

ஈங்கிது வென்னக் காட்டு மியல்பினுக் கெட்டா தாகி
யாங்கன நினைவு வாக்குக் கரியதாம் பெரிய சோதி
பாங்கரு ளுருவாக் கொண்டு பரையரு ளிச்சை ஞான
மோங்குசீர்க் கிரியை மூன்று லகெலா மருளிச் செய்தான். (க)

அந்திவா னனைய மேனி யரையிருள் புரையுங் கண்டத்
தெந்தையார் வதன மைந்தி லாகம மெழுநான் கேய்ந்த
பைந்துகிர்க் கனிவாய் வள்ளம் பரந்துதேன் வழிந்தா லென்னத்
தந்ததோர் வதன நான்குஞ் சதுர்மறை விரித்த வன்றே. (உ)

மூலமா மறைக ளன்காய் முன்னவ னருளாற் பின்னு
மேலவா மங்க மாறாய் மிருதிகள் பலவாய்ப் பேத
நூல்களாய்ப் புராண மாகி நுவன்றபல் கலையா யென்றுங்
காலமூங் கணக்குங் காட்டிக் கதிக்கெலாங் கதியாய் நிற்கும். (ங)

நாரணர் புவனங் காப்பு நான்முகன் படைப்பும் வெள்ளை
யாரண னரசும் வானோர் வாழ்க்கையு மந்த ணாளர்
காரண மகமு மேனைக் கடவுளர் தவமு மாதி
யாரண நடப்பா லன்றோ வகிலமு நடப்ப தம்மா. (ச)

அவரவர் குலமா சார மனாசாரங் குணங்கள் குற்றந்
தவர்படி துன்ப மின்பஞ் சத்திய மசத்தி யங்கள்

பவனமே பவர்க்கம் பாவம் புண்ணியம் பகுத்தி யார்க்குங்
கவர்படக் காட்ட லாலே கண்களே பொருவும் வேதம். (௫)

அன்னது மனுக்கள் வாழ்வு பகலிடத் தழிவும் வேதாத்
தன்னது நிசிகா லத்திற் சகமெலா மழிவு நோக்கிப்
பன்னருங் கால மெல்லா மழிவிலாப் பான்மை மேன்மை
யுன்னுதன் கருத்தா லுன்னி யுபநிடப் பொருளா லோர்ந்து. (௬)

கண்ணுறை கவின்சேர் நெற்றிக் கடவுளா லன்றி யீது
விண்ணவர் முதலோர் தம்மால் விலக்குதற் கரிதா மந்த
வண்ணல்பே ரருளே வேண்டி னறஞ்செயற் பால தாகு
மண்ணினி லறமுந் தானந் தவமிரு வகையா மன்றே. (௭)

தானமே தவமே யார்க்குந் தருமமே யெனினு மேலை
வானமே யாதி யாய போகமே வளர்க்குந் தான
மோனமேல் விரதம் பூண்டு முற்றுமே பற்றி லார்க்குத்
தீனமே தவிர்த்து வீடு சேர்ப்பது தவமே யாமால். (௮)

என்றுப நிடத வேத மியல்பினா லுணர்ந்து நாளு
நன்றுமெய்த் தவமே தான நன்னகர்த் தலமே யென்று
நின்றது பனச மாக நெடிதுநாட் பரனைத் தேடிக்
குன்றுகு மூலக மெல்லாங் குலமறை தன்னைத் தேட. (௯)

சீலமந் திரவிலாசச் செண்பகா ரணிய மேவிக்
கோலமந் திரங்க ளெண்ணில் கோடிக்கு மேலாய் நின்ற
மூலமந் திரத்தை நோக்கி மூலமீ றில்லா மூர்த்தி
தூலமந் திரத்தை யேத்திச் சூக்க மந்திரத்தை யுன்னி. (௧௦)

பூங்கிளி மழலை பாகன் புடார்ச்சுன புரத்திற் சென்று
மோங்கெழ மறைக டாமே யுலப்பிலாத் தவங்கள் செய்து
தூங்கியு மிளைத்துந் தேடித் துளங்கியு மநேக கால
மேங்கின வம்மா முக்க ணிறையரு ளெளிதோ யார்க்கும். (௧௧)

ஆயிரஞ் சுருதி வேதந் தவம்புரிந் தமர ராண்டி
லாயிரப் பதிற்றுண் டெல்லா மெய்தில ராத லாலே

யாயிர முகஞ்சேர் கங்கை யணிந்தவ னடிகள் பேணி
யாயிரந் திருநா மங்க ளோத்திநின் றேத்த லன்றே. (கஉ)

வேறு.

கங்கை வார்சடை யோகி நமோநம கஞ்சன் மாலறி யாதாய் நமோநம, மங்கை யர்மனோ பாகர் நமோநம மந்த்ர ஞானசொ ரூபர் நமோநம, சங்க வீதிவி லாசா நமோநம சம்பு நாதவி னோதா நமோநம, செங்கை மான்மழு வர்ணா நமோநம செண்ப காடவி நாதர் நமோநம. (கங)

வேறு.

நடமிடு பராபரா நமோநம நதிபொதி சடாதரா நமோநம
நிடதபு யபூதரா நமோநம நிருமல நிராமயா நமோநம
குடமுனி தபாபரா நமோநம குழன்மொழி மனோகரா நமோநம
வடவிட பகேதனா நமோநம வரகர சிவாசிவா நமோவென. (கச)

வேறு.

கலைத்தழும் பிருந்த வேதங் கருதியே தேடுப்ப நாதன்
சிலைத்தழும் பிருந்த தோளுஞ் செண்பகக் கோதை கொங்கை
மலைத்தழும் பிருந்த மார்பு மவுலிமேற் பிறையும் வானோர்
தலைத்தழும் பிருந்த கோலச் சரணமுந் தோன்ற நின்றான். (கரு)

வேறு.

நின்றவிடை மேற்காட்சி கொடுத்தருளி யருணைக்கி ணிமலன் வாசத், தென்றலுட னியாமுறையுஞ் செண்பகக்கா வமர்ந்துதவஞ் செய்த வாற்றால், லென்றுமுளந் தேமறைகா ளின்றுமக்கு வேண்டும் வர மியம்பீ ரென்ன, மன்றினுள்ளா டியபெருமா னருண்கழலுந் திருவடிகள் வணங்கி வாழ்த்தி. (கசு)

நிற்பதே வேண்டுமுல கீன்றவட்கு முனக்குநறு நிழலா யிந்தச், சிற்பனச நறுநிழலே திருக்கோயில் கொண்டருளிச் செய்தல் வேண்டுங், கற்பமுறு பிரளயம்வந் துலகனைத்து மழிக்குங் காலமேனுந், தற்பரநின் றிரிகூடம் போலெனக்கு மழியாமை தருதல் வேண்டும். (கஎ)

முந்துவர மிவைமூன்றுந் தருகவெனப் பரவுதலு முக்கண் மூர்த்தி, யந்தவரங் கொடுத்தருளி யொருவடிவாய்ப் பலவடிவா ய

மரா நிற்பச், சொந்தமறை யொருநான்கு மொருவடிவாய்ப் பலவடிவாய்த் தோன்றிற் றன்றே, யெந்தைபிரா னடியரைத்தா னிருந்தபடி யிருத்துவதூ மியற்கைத் தம்மா. (கஅ)

ஆகையாற் சதுர்வேதந் தருவாக மூலமதன் மூல மாகப்
பாகையா னவையிரண்டுங் கவராகச் சுருதியெலாம் பணைக ளாகச்
சாகையா னவைபசிய சாகையா வுபநிடதந் தவிராச் சூல்கொண்
டோகையார் தருமமுதற் பெறும்பலவுங் குறும்பலவே யுதவுமாமே.

அப்பலவின் வடிவுசதுர் வேதவடி வாதலினு லதன்பா லாக வெப்பலவே வருமிருக்கு மியல்பினு லொருகுடநீ ரிதன்பால் வார்க்கிற், செப்பரிய தேவருக்கு மூவருக்கு மபிடேகஞ் செய்த தாகுங் கொப்பலரு நீழலிடை யுருச்செயுமந் திரங்களொன் றுகோடியாமால்.

ஓதரிய திரிகூடச் சாரலுறை குறும்பலவி னுந்தி பூத்த
மாதவனு மும்புகழ்வார் வைகுந்த பதத்திலென்று மவைகி வாழ்வார்
வேதபா ராயணஞ்செய் வேதியர்க ளரன்கயிலை வெற்பிற் சேர்வார்
யூாதுமோர் மகம்புரிவா ரிந்திரன்போற் சதமகப்பே றெய்து வாரே.()

ஒருமதிவெள் ளடைபாகு தானமிடி லிருமதிவா முலகிற் சேர்வார்
வருமதிதோ றுங்கொடுப்பார் மகிமையுரைப் பரிதுமறை வருக்கைநீழ
லிருபடிநெல் விளையுநில மீவார்க ளெழுபடிக்கு மிறைவ ராவார் [பார்.
கருதுபிதுர்ப் பலியிடுவார் தலைமுறைகண் மூவேழுங் கதியிற் சேர்ப்

நெல்லிடுவார் பொன்னிடுவா ரமுதிடுவார் மறைத்தருவி னிழலி லாயின், புல்லிடுவார் தமக்கமரர் விருந்திடுவார் திருக்கோயில் பொருந்த வோர்செங், கல்லிடுவா ருலகாள்வார் கருங்கலிடு வார்கடவுட் கயிலை சேர்வார், சொல்லிடுவா ரஞ்செழுத்தைத் துதித்திடுவா ரிமையவருந் துதிப்ப வாழ்வார். (உக)

அந்தமா தியுங்கடந்தார் குறும்பலா மகிமையிவை யனைத்து மேனாள்
விந்தமால் வரைகடந்த முனிக்கருளிச் செய்தபடி விளம்பிச் சூதன்
முந்தமா னததான நதித்தானந் தோயார்க்கு முத்தி தோயு
மந்தமா ருததான மகிமைமுனி வோர்கேட்ப வழங்கா நின்றான். ()

11-வது குறும்பலாச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—சஎஅ.

## பன்னிரண்டாவது:—மந்தமாருதச் சருக்கம்.

கல்வி யாதனுஞ் சனகரும் புகழ்வது நவில்வோர்
தொல்வி யாதியும் பாவமுந் தொலைப்பது சுருதிக்
கல்வி யாவையு முணர்வையுங் கொடுப்பது கருதிற்
செல்வம் வீடுபே றளிப்பது செண்பகா ரணியம். (க)

ஐந்து நூற்றுவ ரந்தண ரருமகச் சாலை
சிந்தை யாய்முது தவம்புரி தேவராச் சிரமங்
கொந்து பூங்குழற் பரையுடன் பரனுறை கோயில்
சந்த ளுடவி வேலிசூழ் சண்பகா ரணியம். (உ)

பிரச மாமலர்ச் செண்பகப் பொதும்பரிற் பிறந்து
திரவு பூஞ்சினைத் தொட்டிலாட் டயர்ந்துதே னருவிப்
பரம வாரியிற் படிந்துநீள் பணிலமாக் கோயிற்
குரவன் முன்றில்வாய்த் தவழ்வதோர் தென்றலங் குழவி. (ங)

அன்ன தென்றலின் மகிமையா லருந்தவ ருறையு
மன்ன கர்ப்புடார்ச் சுனபுரத் தெல்லைநாற் றிசையுண்
மன்னி யின்னுயிர் விடுத்ததோர் பாதக மறையோன்
இன்ன நீங்கிமேற் கதிபெறு மகிமையைக் கிளப்பாம். (ச)

வேறு.

விண்டலைத் தெங்கின் பாளை மிடறுடைத் தெழுந்து வாளை
கொண்டலைக் கிழியப் பாயக் குழவியைத் தருவுந் தாய்போற்
கண்டலைக் கமுகை மாவைக் கதலியைக் கடந்து தேமாந்
தண்டலைச் சென்னி நாடு தரங்கநீர்ப் பொன்னி நாடு. (ரு)

பாரிடை நீதி நீரப் பல்குடி பயிர்க ளாக
நேரியர் செங்கோல் வேலி கோலிய நெடுஞ்சோ ணாட்டுப்
பேரிய லந்தணாளர் பெருங்குலத் தலைமை பூண்டோ
னாரிய மறைநூ லாதி யருங்கலை பயின்ற நாவான். (சு)

அருமகம் புரியுங் காட்சி யத்திரி கோத்தி ரத்தான்
பெருமகத் துவஞ்சேர் கல்வி யத்திரி யெனும்பே ராளன்
வருமகத் துணையாங் கற்பின் மடக்கொடி வயிறு வாய்ப்ப
வொருமக னுத்தி ரேய னுதித்தன னுருவின் மிக்கான். (எ)

சீர்பயில் குடிக்கோர் செல்வத் திருமக னுத லாலே
பார்பயின் றறியான் மூன்று பருவமு மருமைத் தாயர்
தார்பயின் முடிமேற் கைமேற் றந்தையார் மடிமேற் கோல
மார்பின்மேல் வளர்ந்தான் ருருப் புல்லூரீஇ வளர்வ தேபோல். (அ)

தாலமேற் பயிலுந் தோறுந் தன்குலத் தரும மஞ்சி
யோலமிட் டழுற்றல் போல வொலிமணித் தண்டை யார்ப்ப
ஞாலமேற் கிடந்த பாவ நடைகற்ப நடைகற் றுன்வேள்
கோலுமைம் படைநாண் பூணக் குலவுமைம் படைநாண் பூண்டான்.

ஒருபிறப் பினியில் லாத வுயர்பிறப் பினில்வந் தானை
யிருபிறப் பாள ரெல்லா மிலங்குமுப் புரிசேர் முந்நூல்
பெருகுநான் மறையி னூலே பிராயமோ ரைந்திற் சாத்திப்
பருவமா றகன்ற வேழிற் பல்கலை பயிலச் செய்தார். (கO)

ஒருபதோ டிரண்டாம் யாண்டு மோதினு னோதுங் காலைச்
சுருதிநூல் பயிலுந் தோறுஞ் சொற்பயில் கிள்ளை போல்வான்
றருபுனல் படியுந் தோறுந் தாவுநீர்க் கரண்டம் போல்வா
னருநெறி நியாசந் தோறு மவிரபப் பாவை போல்வான். (கக)

அருங்கலை பயிலுங் காலை யறம்பொரு ளின்பம் வீடா
மிருங்கலை நான்கின் முன்னை யிரண்டும்பின் னொன்று மோரா
னொருங்குசே ரின்பத் தேனு மொழிபெருந் திணையே யன்றி
விரும்புமைந் திணையுந் தேரான் விதிவழி மதிபோ மன்றோ. (கஉ)

புருவமு முகமுங் கண்ணும் புயங்களு முந்நூன் மார்பு
முருவமுங் கண்ட மாத ருள்ளமுங் கலையுஞ் சோரப்
பருவமும் பதினு றாகிப் படைமதன் வடிவ மானு
னுருவமொன் றெய்தா னாகி லவனிவ னென்ன லாமால். (கங)

தன்னுடைக் கொழுநன் மேனி தானெதிர் நோக்குந் தோறு
மின்னிடை யிரதி யார்க்கு வேறுபா டறிய வேண்டிற்
கன்னலஞ் சிலையில் லாமற் காழினைப் பொருவா னின்னே
னன்னமென் சிலையி னுலே யனங்கனும் பொருவா னன்றோ. (கச)

அளப்பரும் வடிவின் மிக்கா ளாதலா லணங்க ளாரும்
விளக்கில்வீழ் பதங்கம் போல விருப்புட னவனைச் சூழ்வார்
துளக்குறும் விகாரத் தாலே யவனுமத் தோகை மார்பா
லுளத்தினிற் காதல் கூர வொட்டில்வீழ் பதங்கம் போல்வான். ()

கிளர்பொருள் கல்வி செல்வங் கிளைகளும் படைத்து நீங்கா
விளமையும் பெற்றான் வாழ்வோர்க் கிவைகளி லொன்றே போதும்
விளைபொரு ளைந்துங் காம விடாரிடை வீழ்ப்ப தானான்
வளர்குடிப் பிறந்தா ரேனும் வாழ்வுண்டோ மதியற் றார்க்கே. (கரு)

பேய்மொழி கேட்கும் யாமம் பிறன்கடை திரிவா னீன்ற
தாய்மொழி கேளான் மற்றுந் தந்தைதன் மொழியுங் கேளா
னேயுமேற் குலத்தே வந்து மிழிகுல விடர்பாற் கூடி
யாயுரு கரத்தைச் சேர்ந்த வானிளங் கன்று போன்றான் (கஎ)

வேறு.

மாவேட்டி லெழுதாது மறைசொல்வார் தமைநீங்கி
மாவேட்டி லெழுதாது மலர்கொய்வான் மாதருக்காத்
தீவேட்ட முறைபுரியுஞ் சிலதருப்பை பேந்துதல்போய்த்
தீவேட்ட முறைபுரியுஞ் சிலையேந்தித் திரிகின்றான். (கஅ)

பெருக்காயத் திரிகுலத்துப் பிறந்துமே பிறமாதர்
செருக்காயத் திரிகுலத்தார் பிறரோடுஞ் சென்றுழல்வா
னிருக்காயத் திரிவுரரை யிகழுவா னிளமையில்போ
லுருக்காயத் திரிமயக்கா லுயர்காயத் திரிமறந்தான். (கக)

அஞ்சுமுக மஞ்சுமக மாயினு னுயர்குலத்து
விஞ்சுசீ ருறுதொழிலு மறுதொழிலாக் கைவிட்டான்
பஞ்சணையிற் கலவிநலம் பாராட்டிச் செவிக்கோதும்
வஞ்சியர்கள் சதுர்மறையே வழங்குசதுர் மறையானான். (உ0)

சந்தியா னதுமறந்து தரித்தாலும் பொதுச்சேரிச்
சந்தியா னதுமறந்து தரித்திடான் சந்திதொறு
முந்தியே தொடுமிடங்கண் முறைமறந்து போதுமாதர்
முந்தியே தொடுமிடங்கண் முறைமறவா தொழுகினான். (உக)

பிரமமா னன்மணமும் பிரசாபத் தியமணமும்
விரவுபிர மச்சரியம் விட்டமையால் விட்டொழிந்தான்
சாதமக மிழந்ததனுற் றெய்வமணச் சடங்கொழிந்தா
னருமறையி னெறிதவறி யாரிடமும் விடுத்தனனுல். (உஉ)

பாசுரத்தி லெழுதரிய பாவையரை வழிச்செலவின்
மாசுரத்தில் விழித்துயிலிற் பைசாச மணம்புரிந்தான்
பூசுரர்க்கு முறையல்லாப் போரேறு போய்த்தழுவி
யாசுரத்திற் கோவைசிய ரணங்காரை மணஞ்செய்தான். (உங)

மசா புதனி லேழைமையோன் மடமகளை வலிதாக
விரவுதனிற் கொண்டேகி யிராக்கதமா மணம்புணர்ந்தா
னரவனைய வல்குலார் மூவகையா ரல்லாமற்
கரவுதனிற் சிலமாதர் கந்தருவம் போற்புணர்வான். (உச)

கோமளஞ்சே ரிவ்வகையாற் குலவுமனை மடவாரை
மாமனையிற் சாரிகைபோன் மாறுத சிறைப்படுத்திக்
காமவெரி மூட்டுகின்ற கலகவிழிக் கணிகையரைப்
பூமலர்மே லன்னமெனப் பொன்றாவி நிறைவித்தான். (உரு)

வேறு.

பூவிய லன்னம் போல்வார் புலவியே நிலம தாகத்
தூவிய பொருள்கள் யாவுந் துறுமுளை வித்த தாகக்
காவியங் கண்ணார் மோகக் கலப்பையே கருவி யாக
மேவிய சுரத போக விரகவே ளாண்மை செய்தான். (உசு)

அந்தியும் பகலு மாய வரும்பொழு திரண்டு மூன்று
சந்தியு மறந்து நான்கா மொழுக்கமுந் தவறி வேத
மந்திர விளக்க மெல்லாம் வரவர மாதர் மோக
முந்திய சூழைக் காற்று லவிந்தன வொவ்வொன் றாக. (உஎ)

அடிமுறை நடந்து செல்ல வறிவுகண் ணில்லுய் மோகச்
செடிவழி சுழன்று காமத் திரள்புனி தொடர வோடிக்
கொடியிடைக் கணிகை மாதர் கொங்கைவெற் பேறி வீழ்ந்து
கடிதட வாவி தாவிக் கலவியங் கயத்து ளாழ்ந்தான். (உஅ)

கொம்பெலா மன்னோன் காமக் கொடுந்தளிர் தளிர்த்துச் சாதி
பம்பிய வரம்பு தோறும் பழிமொழிக் காடு பல்கி
யம்பலஞ் சந்தி தோறு மம்பலா யரும்பி யெங்கும்
வம்பலர் பெருகப் பூத்து வடுக்களாய்ப் பரந்த வன்றே. (உகூ)

ஆனவை செவியிற் கேளா வவன்குலத் தறிஞ னுவான்
ஞானநா லவனுக் கோதி நன்னெறி யுணர்த்தச் சென்றான்
முன்முனம் பயிற்றுங் கல்வி தன்னையு மயர்த்த தோரான்
மேனெறி செறிவி லானை வேறிடத் திருத்திச் சொல்வான். (௩0)

வேறு.

எறும்புகடை யானைதலை யெண்பத்து நான்கிலக்க யோனி பேதம்
பிறந்துழலு முயிர்க்கெலா மனிதராய்ப் பிறப்பரிது பிறந்தா ரேனும்
பறம்பர்சோ னகர்சூன ரீனர்கா னவர்நுளையர் பழைய ராதி
யறைந்தகீழ்க் குலநீங்கி மேற்குலத்தி லவதரிப்ப தரிது மைந்தா.()

தாழ்குலத்தோர் கோடிசென்மந் தவம்புரிய வேண்டுமுயர் சதுர்த்த ராகக், கேழுழவர் கோடிதவஞ் செயவேண்டும் வணிகர்செ ன்மங் கிடைக்க வேண்டிற், சூழ்வணிகர் கோடிசென்மந் தவம்புரியி னரசரெனத் தோன்று நிற்பர், வாழரசர் கோடிசென்மந் தவஞ்செ யினுங் கிடையாது மறையோர் சென்மம். (௩உ)

அந்தணராய்ப் பிறந்திடினுங் குருடுசெவி டூமைமுடமகன்று மேனி, சந்தவடி வுடன்பிறப்ப தரிதுபிறக் கினும்பாலைத் தான மாதி கந்தவனம் புனமொருவி நீர்நாட்டில் வரலரிது கண்டாய் பார்மேன் முந்துறவித் தலைக்குயர்சீர் பெற்றனையெத் தனைதவமோ முயன்றாய் முன்னர். (௩௩)

ஓதுபிர மச்சரிய மொழிந்தவா னப்பிரத்த முயர்சன் னியாச
நீதிநிலை பெறுகாரு கத்தியமா மாச்சிரம நெறிக ளன்கிற் [யாலே
கோதிலா மூவர்நெறிப் படர்பயிர்க்குக் கொளுகொம்பாங் கொள்கை
மேதினியில் யாவருக்கும் வியன்காரு கத்தியமே விசேட மாமால்.()

முனமாக வைகறைப்போ தெழுந்துசவு சாதிமுதன் முடித்து வாசப், புனலாடிச் செபதவங்கள் முயன்றுகட வுட்பூசை முயன்று

முப்பா, லனலோம்பி ஞ்யவகைமேவள் விபுமியற்றிக் கிளைஞருட னடு
த்தோர் தம்மைத், தினமோம்பி நுகர்ந்துகலை பயின்றிருத்த லில்ல
றத்தோர் செய்கை யாமால். (௩௫)

பூமரமா யூர்வனவாய் மிருகமாய்ப் புட்குலமாய் மனித ராகிப்
பாமரராய்ப் பண்டிதரா யொழுக்கத்தர் ஆயர்ந்தேணிப் படிப்போர்
லேறித், தேம்மறையோ ஞயினைமேற் சுவர்க்கபதந் துனதுபதஞ்
செலுத்தற் பாலாய், காமமெனு மந்தரத்தே தாவியினிக் கீழ்வீழல்
கடனோ வையா. (௩௬)

நிதியான நிறைநீருக் குடைகுளமிக் கானசுல் ரெறிக்கோர் தீன
மதியான மதிவிழுங்குங் கோளரவு பவத்துறு வளர்க்குங் கானங்
கொதியான நரகிழுக்குங் கொடும்பாச முயிருருக்கிக் குடிக்குங் கூளி
கதியான வழியடைக்குங் கற்பெருங்க பாடம்மன்றோ கடிய காமம்.

சுகுடஞ்சேர் பரிமகநா றியற்றிவா னரசுகன்னற் சுவைபோற்
பெற்றான், சகுடம்போ லவன்மனதிற் சசிகாமம் பிடித்தலைப்பத்
தலைகீ ழாக, மகுடம்போய் வானகம்போய் வையகம்போ யரசுபோ
யீ மலைப்பாம் பாக, நகுடன்போய் வீழ்ந்தகதை யறியாயோ சிறி
யாயோ நளினத் தாயோய். (௩௮)

வேறு.

மனைவளர் குலஞ்சேர் கற்பின் மங்கையர் வருந்த நீபோய்ப்
புனையிழைப் பரத்தை மார்க்குப் புதுநலம் பெருக நல்கல்
சினைதரு பருவப் பைங்கூழ் செந்நெலின் பொதிகள் வாடக்
கனைகுர லெழிலி வீண்போய்க் கானவிற் பொழிவ தென்றான். (௩௯)

கொழுந்துவிட் டறிவு தோன்றக் கொளுத்திய குரவன் வாய்மை
கழுந்தனை யானுங் கேட்டோர் கட்டத்தினைக் கவிழ்த்து வீழ்ந்த
வழுந்தெனத் தகைய வாக வகுத்துமே லுரைப்ப தானு
மொழுஞ்சுடர் விளக்கிட் டாலு மிருளன்றோ குருடர்க் கம்மா. (௪0)

மணிநகை யாரே தெய்வம் வாக்குப தேசங் கொங்கைத்
துணைகுரு பீடம் பாதத் துணைவரு டுவதே பூசை
யணைவது முத்தி யாசா னின்னமு மறியாய் போலுங்
கணிகையர் முகத்திற் கூறுங் காமஞ கமங்க ளென்றான். (௪௧)

மருண்மொழி பொருளாக் கூறும் வஞ்சக மறையோன் றன்னை
யருண்மொழிக் குரவன் சீறி யகன்றன னாத லாலே
திருவொடு கிளையும் வாழ்வுஞ் சிதைந்தனன் சிறிது நாளிற்
குருமொழி யிகழ்ந்த மூடர் குவலயத் தெவ்வா றுய்வார். (சஉ)

தனமெலாங் கணிகை மாதர் தனவிலைக் காற்று வாகி (றுக
மனையுள பொருள்போய்ப் பார்ப்பான் மற்றுள பொருளுந் தோற்
கன்னைதபோய் மெலிவா யூரிற் கடப்படுங் கடப்படாதே
யினையவோர் வறுமை பூண்டா னினியதோ கொடிய காமம். (சங)

கர்னக வேட்ட மர்புக் கடுங்கொலை களவு செய்து
தானமு மழிந்து மானந் தவறியுந் தவறுன் காமஞ்
சூனமங் கையர்பா லூனுந் துவசமங் கையர்பாற் கள்ளு
மீனமங் கையர்பா லூனும் போகமு மிசைவ தானான். (சச)

நாரியர் மயக்கில் வீழ்ந்து நாற்குல நடைவிட் டீனர்
சேரியிற் புகுந்தான் செய்கை தெரிந்தன ரந்த ணாள்
ரூரினிற் புகுதா வண்ண மொழிந்தனர் பழித்து நீக்கி
வாரியின் மூழ்கிச் சாந்தி புரிந்துவா லாமை தீர்ந்தார். (சரு)

கீழ்குலந் தாழ்ந்தான் வேறு கிளைவேறு தாரம் வேறாய்
வாழ்வுபோய்க் குலினந்தின மைமைமூ வகையின் மாய்ந்தார்
சூழ்தரு நரம்பு தண்டஞ் சுரைமூன்று மிசையில் யாழாம்.
வீழ்படில் வேடர் கண்ணி விருகுமெவ் பலியோ டன்றே. (சசா)

அங்கணத் தூக்க பால்போ லருங்குலப் பெருமை விட்டுத்
தங்கணக் கிளைகை விட்டுத் தாரமோ டூர்கை விட்டுக்
கங்கணங் கையார் மோகங் கைவிடா னறிஞர் விட்ட
கொங்கணஞ் சிலநாள் வங்கக் காழகங் குறுகப் புக்கான். (சஎ)

வேறு.

நீர்நாடு நீங்கியுமே நீங்காது பின்றொடரும்
போர்நாடு காமவெள்ள நீந்தவொரு புணையின்றிச்
சீர்நாடு மாதர்தனங் குடந்தேடித் திரிவாற்கு
வார்நாடுந் தடைதீர்ந்த மலைநாடு வாய்த்ததுவே. (சஅ)

மலைகாட்டில் வருந்தூர்த்த மறையோனை மடக்கொடிமார்
முலையானை மதமூட்டி முரிபுருவச் சிலைகுனித்துக்
கலையாளி தேர்நிரைத்துக் கட்டெழிலி னுற்பகைத்த
சிலைமாரன் பொரவிடுத்த சேனையெனப் புடைவளைந்தார். (௪௯)

காவிநெடுங் கண்வலையான் மடுப்பவருங் காரிகைமா
தாவிமருண் டருமறையோ னழகுவலைப் புகுந்துவளை
தூவியனம் போற்றொடர்ந்தார் தூர்த்தமா மறையோனும்
பூவையர்தம் பிடிச்சூழல் புகுந்தமதக் களிறானான். (௫௦)

ஆம்பதிதன் குலம்வாழ்வும் பறிகொடுத்து மவர்மோகம்
போம்பரிசி னுவந்துவிடான் பொய்களவாற் பொருள்கவர்ந்து
காம்புறழுந் தோளியராங் கணிகையர்பாற் கருத்தழிவான்
வேம்பரிசி னுடல்கரிந்தும் விளக்குவிடாப் பதங்கம் போல். (௫௧)

சிலமாதர் செங்கையொடுஞ் சிலமாதர் கொங்கையொடும்
பலமாதர் புலவியொடும் பலமாதர் கலவியொடு
நலமேறி யுவட்டெடுப்ப நானாபோ கம்பொசித்துத்
தொலைபாத கனிபழுத்துச் சொரிசோலைக் குருகானான். (௫௨)

வேறு.

மான மின்றிய வல்லியர் மாமுலை
யானை வாய்க்கரும் பாகியுங் கண்வலை
மீன மாகியு மல்குல் வியாழத்தின்
பீன வாய்ப் பெருந் தேரையு மாயினான். (௫௩)

தைய லாரிடைத் தாகம் விளைந்ததும்
பொய்யெ லாநிறை போகம் விளைந்தது
மையன் மோகம் விளைந்தது மற்றவன்
மெய்யெ லாம்வினை யாக விளைந்ததே. (௫௪)

நாணி லார்நய னப்பெருந் தும்பியே
தூண மாமுட லெங்குந் துளைத்ததோ
காண லாமதன் பூங்கணைக் காயமோ
பூண லாப்பிணி பூண்டபுண் ணாயினான். (௫௫)

விண் குலாவுயர் விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாங்
கண்க ளானது காமத்தி னலன்றே. (ருஎ)

மருவி ருக்கு மலர்க்குழல் சோரவே
யுருகி நித்த முடன்புணர் மாதரார்
பெருவ ருத்தமுற் றன்பிணி காண்டனு
மருகி ருக்க வருவருப் பாயினர். (ருஎ)

வேறு.

மூன்பெலாங் களிகூர மோகநல மநுபவித்து
வன்பிணியா லுழல்கால மறுகினிடைத் தள்ளினு
ரென்பெலாங் கசிந்துருகு மிற்பிறந்தா ரல்லாம
லன்பிலாப் பொதுமாத ராபத்துக் காவாரோ. (ருஅ)

தலைநாடு புறந்தள்ளச் சாரன்மலை நாடேகி
மலைநாடு புறந்தள்ளப் பாண்டிவள நாடணைந்தான்
கலைநாடுங் குலநெறிபோய்க் கைப்பொருள்போய் நோய்பூண்டும்
புலைநாடு காமமெனுந் தேக்கிலைபிற் புனல்போல்வான். (ருகூ)

ஊடையரப் பசிபிடுங்க வுறுப்பெலா நோய்பிடுங்க
வாடைதுணி போர்த்தவுட லீப்பிடுங்க வருந்துவான்
பேடைமயி லார்விரகப் பிணிக்குடைந்து புறங்கடைபோய்
வாடையேற் றயர்வானேல் யாரைவிடு வான்மதனன். (சுo)

சரதநெறி மணவேட்கைத் தன்மனையார் மனங்கொதிப்ப
விரகொடும்போய்ப் பிறர்மனையின் மிதித்தகால் விரலழுகி
மரபழிய முந்திதொட்ட மணிக்கரங்க ளுடலழுகிப்
பரமனையார் தமைத்தழுவும் புவமெலாம் புண்ணானன். (சுக)

தலைமைநாற் குலமறுகு சார்கிலான் கீழொழுக்கால்
விலைமாதர் மறுகணையான் மேனியுரு வழிந்தமையால்
வலையர்சே ரியிலூனு மள்ளர்சே ரியின்மதுவும்
புலையர்சே ரியிலருந்திப் புறங்கடையி லுறங்குவான். (சுஉ)

அம்மையிலே பலிக்குமென்பர் செய்தவினை யாங்கொருசார்
செம்மையிலா மறையோன்செய் தீவினையெல் லாமிவனுக்
கிம்மையிலே பலித்ததனை யிவையறிந்து விலகாதார்
வெம்மையுறு கொடும்பிணிக்கு நரகினுக்கும் விருந்தாவார். (௬௩)

வருநாளின் முகம்பார்த்தோர் மறுநாட்கண் பாராரா
யொருநாளி னுறைபதிமற் றொருநாளி னுறையாமற்
பெருநாடு பலகழித்துப் பிறநாடு சேர்வதற்குத்
தருநாடு மிருள்வனத்து வினைதள்ளத் தனிபோனான். (௬௪)

ஆகத்தி லெழும்பசிக் கருந்துவதொன் றில்லாமற்
றாகத்தா னுலர்ந்து தண்ணீருங் கிடையாமற்
சோகத்தா னயர்ந்துகொடும் பாலையிடைச் சுழல்கின்றான்
பாகத்தாற் பகுத்துண்ணார் படும்பாடு மிதுவன்றோ. (௬௫)

கூண்டுவரு நெறிதவறிக் கொடுஞ்சுரம்புக் கயர்காலைப்
பூண்டகுல நெறிதவறிப் புலைபுகுந்த மறையோனைத்
தீண்டலுறும் வாலாமை தீரவோ செழுங்கதிரோன்
றாண்டலுறு மாபாவங் கழியவோ கடற்குளித்தான். (௬௬)

உழிக்கொண்ட புள்ளொளிப்ப வுயர்வனமுங் கண்முகிழ்ப்ப
விழிக்கொண்ட சுரமடைந்தா யினியெங்கே போவதெனப்
பழிக்கொண்ட மறையோன்செய் பாவமெலாங் கூடியொரு
வழிக்கொண்டு வளர்ந்ததுபோல் வந்துவளைந் ததுகங்குல். (௬௭)

வேறு.

அன்றுமோ ருணவில் லாம லதற்குமுன் னிரண்டு நாளா
வொன்றுமே பசியு மின்றி வெம்பசி யுடற்ற வோய்ந்து
கன்றினன் சைவ மல்லாக் கடும்பர சமயம் போலச்
சென்றுசேர் நெறியொன் றில்லாக் கானிடைத் திகைத்து நின்றான்.

வேறு.

வாட்டானை விழியார்க்கு வருந்துவான் வனத்திலுயிர்
வாட்டானைப் புலிபார்க்க வருந்தினன் மாதர்முலைக்
கோட்டானைத் துணைமேவிக் குழறுகுரல் கேட்டுவப்பான்
கோட்டானைத் துணைமேவிக் குளறுகுரல் கேட்டயர்ந்தான். (௬௯)

ஈனக்கள் ளிகர்பாலு மிடுஞ்சோறு மிதழ்க்கனிவாய்ப்
பானக்கள் ளுடனேந்தப் பரிவாயுண் டுறங்குவான்
கானக்கள் ளிகர்பாலும் பொதிசோறுங் கடிமலர்வா
யூனக்கள் ளுடனேந்த வுண்ணான்மற் றுறங்கானால். (எ௦)

வீங்கிவளர்ந் ததுதிமிரம் விருத்திரா சுரனேய்ப்ப
வோங்குமுடுக் கண்ணாக விந்திரனைத் ததுவான
மாங்கசுரன் போயொளிப்ப வந்தரநா தன்கரத்தில்
வாங்குமொரு வச்சிரம்போல் வானிலெழுந் ததுபரிதி. (எக)

வடிந்திடத் திமிர வெள்ளம் வளர்ந்திடப் பரிதி காணிற்
படிந்திடு மாத்தி ரேயன் படருறு வினையோ நோயோ
முடிந்தன வெதுவோ வென்று முடிவிலாப் பிறப்போ வெல்லாம்
விடிந்தது விடிந்த தென்ன விடிந்தது கங்குற் காலம். (எஉ)

விடிந்ததென் றெழுந்து போவன் மெய்களைத் தயர்ந்து சோர்வ
னடர்ந்தகல் லிடறி வீழ்வ னடியிடச் சவியி லாதே
முடங்குவன் மரங்க ளோறு முட்டுவ னெட்டி யேகி
நடந்தனன் றிருக்குற் றால நகர்க்குயோ சனைக்கு ளாங்கர். (எங)

வேறு.

குடிக்கொண்ட பூங்கோதைக் கணிகையர்க்கே காதலனாய்க்
குடிப்பண்பின் மடவாரைக் கொடுஞ்சிறைசெய் பாதகத்தான்
மிடிக்கொண்டு வெறுந்தனியாய் வெயிற்கானற் பரல்வீழ்ந்து
பொடிக்கொண்ட தழல்வீழும் புழுப்போலத் துடிக்கின்றான். (எச)

உண்ணாது பசிதுரப்ப வுடலெலாம் பிலிரியுலைப்பப்
புண்ணாக மெய்யயர்காற் போற்றுமொரு துணையின்றி
யெண்ணாத பலவெண்ணி யிளைத்திருமி வாய்குளறிக்
கண்ணாரு மொளியிருண்டு காதிலோ சையுமடங்கி. (எரு)

தருணநிலை தடுமாறிச் சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்திக்
கருவிகர ணங்களெலாங் கைகடந்து மெய்யயர்ந்து
துரியவவத் தையில்வீழ்ந்து துரியாதீ தங்கடந்தே
யுரியதொரு சூக்குமக்கா யமிசொடுங்கு மந்நேரம். (எசு)

அறநெறிமுற் றவப்பயனோ வத்திரிகோத் திரமறையோ
ருறுகதிமெய்த் தவப்பயனோ வுயிர்விடும்வே தியனுடலிற்
குறுமுனிக்கண் புடையபிரான் றிரிகூடக் குலவரைவாய்ச்
செறிமலர்ச்செண் பகச்சோலைத் தென்றற்கால் பாய்ந்ததுவே. (௭௭)

மால்பாய்ந்த மறையவன்மேற் றிரிகூட வரைவசந்தக்
கால்பாய்ந்த தென்கேனோ கவுணியன்வாய்க் கவுரிமுலைப்
பால்பாய்ந்த தென்கேனோ பவக்கடலிற் குகப்பெருமான்
வேல்பாய்ந்த தென்கேனோ யாதெனயான் விளம்புகேன். (௭௮)

இந்தவகை யிறந்தானை யியமபட ரெதிர்முடுகி
வந்துநெடு வலைவீசி வளைந்துபெரும் பாசத்தாற்
பந்தமுறக் கட்டியொரு பட்டமரந் தளிர்த்ததெனச்
சிந்துதிர மெழப்புடைத்துத் தென்புலத்துக் கொடுசெல்வார். (௭௯)

செல்லுகின்ற வேலைதனிற் சிவபிரான் கணநாதர்
நில்லுமெனத் தூதர்தமை நிராகரித்து மறையோனை
வல்லுதிரக் கறைதுடைத்து வன்பாச மறுத்துநயஞ்
சொல்லுவன பலசொல்லிச் சூட்டுவன பலசூட்டி. (௮௦)

அரமகளிர் கவரியிட வந்தரபல் லியங்கறங்க
வரியிசைக்கின் னரர்பாட வானவர்பூ மழைபொழியப்
புரிசடைப்பண் ணவர்புகழப் புட்பகத்தின் மீதேற்றிக்
கரியுரிவை தரித்தபிரான் கயிலைதனிற் கொடுபோனார். (௮௧)

வேறு.

செம்மான மிசையிழிந்து சென்றுமறை யோன்கயிலைச் சிகர மேவிப், பெம்மானை யடியின்மிசை முடிபணிந்தா னந்தவெள்ளப் பெருக்கி லாடிக், கைம்மானுஞ் சுடர்மழுவுங் கறைமிடறும் புரிசடையுங் கண்கண் மூன்று, மெய்ம்பானுந் திருவடிவுங் கண்டிருகண் களிப்பவுடல் விதிர்ப்ப நின்றான். (௮௨)

சென்றுதொழு மந்தணனை யருணோக்கிற் கயிலைவளர் சிவபிரானார், நன்றுநீ யுயிர்விடுங்கா னமதுசெண்ப காடவிசேர் நறும்பூந்

தென்ற, லொன்றியுன் தாகமிசைத் தைவரலசற் பாவமெலா மொழி
த்தோங் கண்டா, யென்றுமழி யாமலினி யெமதுகணத் தவர்பதத்தி
லிருப்பா யென்றார். (அ௩)

வேறு.

அன்று நாதன் றிருவருள் செய்ததான்
மன்றன் மாலயன் வாழ்வு முவர்ப்புறச்
சென்று செல்வச் சிவகணத் தாருட
னென்று நீங்கலாப் பேரின்ப மெய்தினன். (அ௪)

யாமி யந்தனி லெய்திய தூதுவர்
சாமி யந்தகன் றாளிணை போற்றியே
காமி யந்தனன் கண்ணுதல் பாலுற்றான்
பூமி யந்தரம் போற்றிடப் போயென்றார். (அ௫)

வெய்த வாறுடை வீணனைத் தென்புல
மெய்த வாறுகொண் டேகலு மேதடை
செய்த வாறுஞ் சிவபெரு மான்றொண்டர்
வைத வாறும் வளர்செவி சாற்றினார். (அ௬)

செறிவு சேர்மனத் தென்புலக் கோமகன்
குறிகொள் சித்திர குத்தரைக் கூவியே
வெறிகொள் விப்பிரன் மேற்கணக் காலுள
பொறிகள் யாவும் புகலுமி னென்றனன். (அஎ)

சாத்தி ரப்பல தான்கற்று மத்திரி
கோத்தி ரத்தி லுதித்துங் குலநெறி
நேத்தி ரத்தொழி னீக்கி வைசியர்க்குஞ்
சூத்தி ரர்க்குங் கடைஞரி றழேன்றினன். (அஅ)

கற்பு மங்கையர் கட்டழித் தான்பொரு
ளற்பு மாந்த ரடைக்கலம் வெஃகினன்
பொற்பு மாதர் புறங்கடை நின்றுளா
னற்பு மாந்தர்க்கு நண்ணிய தீமையான். (அகூ)

சாலை சத்திரந் தன்ம மலைத்துளா
றாலை யத்தின் களவுகை யாட்சியான்

மாலை காலையுஞ் சந்தி மறந்துள்ளான்
வேலை தோறு மதுநுகர் வேட்கையான். (கூ0)

குருவுந் தெய்வமு நிந்தைசெய் கோளினன்
கருது நோன்புடைக் கன்னியர் காமுகன்
றரும யோகர் தவங்க ளழித்துளான்
பொருவின் மோகப் புலைச்சியர் போகத்தான். (கூக)

அந்த ணர்க்கோ ரருங்கலை மூவகைச்
செந்த ழற்குத் தெறும்புனல் சிந்தைசெய்
மந்தி ரத்தின் மறவி பிறரெலா
நிந்தை செய்யு நிரக்கர குக்கியான். (கூஉ)

பிறந்த நாட்பிதுர் நாள்வரு டாதியிற்
சிறந்த நாட்சிவ ராத்திரி யாதியா
வுறைந்த நாள்விர தாதிமுச் சந்தியு
மறஞ்செய் வாள்விழி யாரை மறந்திரான். (கூங)

அலைவி லாத குடிக ளலைத்துளான்
மலர்செய் காவின் மரங்கள் குறைத்துளான்
புலைசெய் பான்மையும் பொய்கள் வாதியுங்
கொலைசெய் பான்மையுங் கூறத் தகாதவால். (கூச)

இரும்பு போலு மிதயத்தன் கள்வெறிச்
சுரும்பு போல்பவன் கோபச் சுடர்ஞெ
ஞெருங்கு பாவத் துடன்பிறந் தானற
மிருந்த வூரி லிருந்தறி யானென்றார். (கூரு)

கரண வீரர் கணக்கிவை கூறலு
நரக வீரனை நல்வழி சேர்த்திடும்
வரவி யாதென மாமனத் தெண்ணினன்
றிரம தாங்கிச் செய்யுஞ்செங் கோலினன். (கூசு)

அரவ மாலை யவிர்சடை யாரிடைப்
பரம ராசியம் யாது பயந்ததோ
பிரமன் மாலறி யாத பிரானுடன்
விரைவில் விண்ணப்பஞ் செய்திட வேண்டுமால். (கூஎ)

செப்பு மெல்லைச் சிவபெரு மான்முறை
தப்பு மெல்லைத் தகல்வது தாகனெ
வொப்பு மெல்லைத்த வெமபக மேடறினுன்
கப்பு மெல்லைத்த குலமுங் கைக்கொண்டான். (௯௮)

பாசந் தண்ட மெழுகர பத்திரம்
வீசங் கைவரை யெஃகம விறன்மழு
மூசு சயபட முசலங் கணையமவாட்
டூசல் வீர கொடிபுறஞ் சுற்றினர். (௯௯)

கால னும்பெருங் காலமிருத்தவும்
ஆல முக்கிரன் மான்முக னாதியா
நீல மேனி நிரைத்தெழு தூதரு
மோல மென்ன வொருபுடை சுற்றினர். (௧௦௦)

விளங்கும் வைஷ்ணவச் சுதபர் மேவினர்
துளங்கி யோர்புடை சூழ்ந்தனர் சூழ்திரை
யளந்து போற்றினர் தானவ ராதியோர்
வளர்ந்து கிங்கரர் மல்லர்க ளாதினர். (௧௦௧)

பெருவி யாதி முயல்வலி பீனிசந்
குரும கோதரங் குட்டங்க ளாதியர்
மருவு சேற்றும வாதபித் தங்களும்
பொருவு சேனைக ளாய்ப்புடை சூழ்ந்தவே. (௧௦௨)

வெட்டு வார்துணிப் பார்மிரு பாவரைக்
கட்டு வாரடிப் பார்நர காதியர்
கிட்டு வார்பணி கேட்பவ ராய்நமன்
மட்டு வார்கழல் வந்து வணங்கினர். (௧௦௩)

ஆய சேனைக் கடலிடை யந்தலார்
தூய சாமரைத் தெண்டிரை துள்ளுறப்
பாயு மோதையிற் பல்லிய மார்த்தெழ
மேய வூர்தியென் வங்கத்து மேயினுன். (௧௦௪)

சொந்த வைவைச் சுதா பர நீங்குபு
வந்து சேர்ந்தனன் வைதர ணித்துறை
யுந்து தாரையை நோக்கின ஞெண்கயல்
பந்தி சேர்தரு பல்சிலை நோக்கல்போல். (௪0௫)

பாங்கு சேர்பரி வாரத் தொகையெலா
நீங்கு கென்ன நிறுத்திவெங் காலிலை
யாங்கு கூவி யமைச்சனே டேகியே
யீங்கு சோதிக் கயிலையை மேவினன். (௧0௬)

நீல மால்வரை நின்றிழி கொண்டல்போற்
கோல மேதி யிழிந்துசெங் கோற்கிறை
கால னேடு கயிலையஞ் சாரல்வாய்ச்
சூல மேந்தித் தொழுதெழீஇப் போயினன். (௧0௭)

வேறு.

சென்று வெள்ளியந் திருமலைத் தென்றிசை காத்திடும் வட மேருக், குன்று போலுயர் கோபுர வாய்தலிற் குறுகினண் ணவ ரெல்லா, நின்று போற்றுபொற் படிமிசைத் தென்புல நிருபன்வெம் மனக்கோட்ட, மன்றி நின்றுதன் வரவினை யருங்கடை காவலர்க் கறிவித்தான். (௧0௮)

கடைக ளேழின ரொருவர்பா லொருவராய்க் கழறமற் றவர் பூதப், படைகள் காவலர்க் குணர்த்திட வன்னவர் பணவர வணி கோலச், சடைகு லாமுடிச் சுடர்மழு நந்திநந் தலைவனுக் கமைந் தோத, வுடைய நாயகன் சன்னிதா னத்தவ னுணர்த்தலுங் கொணர் கென்றான். (௧0௯)

நந்தி நாயக னருண்முறை சிவகண நாதர்கள் புகுந்துய்ப்பப் பந்தி யாம்பல திருக்கடை கடந்துமேற் படர்ந்துதென் றிசைவேந் தன், புந்தி யார்ப்புறக் கண்டனன் சிவபிரான் பொன்னணி திருக் கோயின், முந்தி யாரணர் நாரணர் பெறவொணு முறைமைபெற் றனனென்றான். (௧௧0)

வேறு.

கின்னரர்கின் னரமிழற்றத் தந்திரர்தந் திரிமீட்டிக் கீதம் பா டப், பன்னகர்கிங் கிரர்கருடர் சித்தர்வித்தி யாதரர்தம் பணிசெய்

தேத்தப், பொன்னகரிந் திரன்பரவ வானவர்பொன் மாரிபுட்ப மாரி தூவப், பின்னகபந் திகளசைய வரமபையர்கண் மணிகவரி பிடிப்ப மாதோ. (கககூ)

புவலோகர் வலம்புரியப் பாதாள லோகர்மணிப் பொற்பூ ணேந்தத்
தவலோகர் சனலோகர் சத்திய லோகரும்பணிந்து தவப்பேறெய்திய
பவலோகங் கடந்தேற மாமேலோகத் தவர்பரம பதமே யான
சிவலோகந் தனைவேண்டி யடிபரவச் சிவகணங்கள் சேவை செய்ய.

அணிமாதி சித்திகள்குற் றேவல்செய வீசான னடைப்பை தாங்க
மணிவாரி யோரேழுந் திறையளப்பப் பகல்வேந்தர் மாருத் தீபம்
பணிமாற மதிபடிமக் கலமேந்த மறைதெளிப்பப் பவனன் றார்ப்பத்
தணியாத தழற்கடவுள் பரவியா லத்திசுறறத் தருமம் வாழ்த்த. ()

அறுசமைய மைம்பூத நான்மறைமுக் காலமிரண் டறங்கள் யாவு, மெறும்வலிகள் வேண்டியொரு கோடிவர மந்திரங்க ளெண்ணில் கோடி, மறுவறுசின் றிருகோடி புகழ்ந்தேத்த வரிபிரமர் மகுட கோடி, செறிகமலத் தாள்வருடப் பதினெருமுக் கோடியராந் தேவர் போற்ற. (கககூ)

கங்கைசர சோதிசிந்து யமுனைகோ தாவரிநன் மதைகா வேரி மங்கலமா நதிபலசா மரைபிரட்ட விமையவரை வயிறு வாய்த்த நங்கையொரு பாலிருப்பப் பொருப்பெடுத்த வேற்குமர னடுவண் மேவ, வெங்கயனை யமர்சாய்த்த விசையமதக் களிறெருபால் விளை யாட் டெய்த. (ககரு)

மாணிக்க மரகதங்கோ மேதகமுத் துப்பவளம் வயிர நீல
நீணித்த மணிபுருட ராகம்வயி டூரியங்க ணிரைத்த தூணி [மீது
ணணிப்பொன் மேருவென வுயர்மணிமண் டபத்தரியா சனத்தின்
வேணிச்செவ் வான்படர மதிதவழு மொருபவள வெற்பு மான. ()

ஒருமருங்கு மிருசருமத் துகிலுடையு மூன்றுகண்ணு முயர்தோ ணான்குங், கருணைபொழி திருமுகமு மைந்துபணு டவிமுடிமேற் கங்கை யாறும், பரிதிபெழு வெயிலெறிக்கு மவுலியும்வெண் ணில வெறிக்கும் பணிலத் தோடும், பொருமுரக குண்டலமு மண்டலமும் விண்டலமும் பொலிந்து வாளை. (கஎ)

கரதலமு மான்மழுவு மபயவர தமுஞ்சுருதி கனிந்த வாயு மரவணியு முரககணங் கங்கணமுங் காண்டொறுமப் புதமேற் கொண் டான், றிருவடியுங் குரைகழலு மிடம்வலங்காண் டொறுமபயமுந் திடமும் பூத்தான், பிரமன்மால் சிரமாலை துயல்வருதிண் புயநோக் கிப் பிரமை பூண்டான். (ககஅ)

முதியவா னவர்கணமாம் பரவையிடை முழுமணியா சனமென் றோங்கு, முதயவரை தனிலருக்க கோடியுதி ரோருருக்கொண் டுதித்தா லென்ன, வதியுமுயர் பரஞ்சுடரைக் காண்டொறுங்கண் வழுக்கியன்பின் வழிக்கொண் டேகித், ததிபரவி யெழிற்கடலி னருட்டுறைவீ ழெழிலியெனத், தொழுது வீழ்ந்தான். (ககூ)

ஆதியாய் சரணமநு பூதியாய் சரணமகி லாண்ட மீன்றாள்
பாதியாய் சரணமறை வேதியா சரணமருட் பரமா னந்தச்
சோதியாய் சரணமென வீழ்ந்தானை யெழுகவெனச் சுருதி நாதன்
மேதியான் முகநோக்கி வந்தகா ரணம்யாது விளம்பா யென்றான். ()

என்றுமுதல் வன்றிருவாய் மலர்ந்தருளப் பெற்றேனென் றிரு கை கூப்பிச், சென்றுதுணை யடிவணங்கி வணங்குதொறு முடல்வி திர்ப்பச் சிலிர்ப்ப ரோம, நின்றுசெழுந் துகிலொதுக்கி வாய்புதைத் து நடுநடுங்கி நிமல மூர்த்தி, யொன்றுளதென் னேருவிண் ணப்ப மென வுரைத்தருளா லுணர்த்து கின்றான். (கஉக)

பாரின்மேன் மறைக்குலமாம் பயிர்க்குமுது கனையாகப் படர்ந்தா னந்த, வூரின்மே லுதிக்குமுனம் பாதகத்தி னுடனுதித்தா னெழுக் கந் தீர்ந்தா, னீரின்மேற் குமிழ்த்தறியான் மாதர்முலைத் தடங்குளிப் பா னீச மாதர், காரின்மே னியுந்தீண்டி யவர்மனைபுக் கூணருந்திக் கள்ளுண் பானல். (கஉஉ)

தானமறி யான்மூன்று சந்தியறி யானலது சாம வேத
கானமறி யானோமக் கனலுமறி யான்மனுநூற் கல்வி கேள்வி
மானமறி யான்செபமு மந்திரசித் தியுமறியான் மவுன யோக
ஞானமறி யானிவனே நாங்களறி யாப்பதத்து நண்ணு வானே. ()

கோடுபொரு முலையார்கள் காமத்தாற் புலைபுரிந்த கொடியோன் றன்னை, வாடுபெருந் துயர்நீக்கிக் கயிலைதனிற் சிவகணத்தார் வரித்,

தா ரன்னோ, ராமிவது திருக்கூத்தா யதுதானே யலங்கார மாகு மா றல், வீடுபெறு சுவர்க்கமென்று நரகமென்று மெங்களுடன் விதம் பிப் பானேன். (கஉச)

கைப்பொழுது பாவமெலா மினிப்பொழுக நடந்தானைக் காட்டும் போது, தப்பொழுகக் கணநாதர் தன்னிற் றெனிற்பாவந் தருமமே து, பொய்ப்பொழுது கழிப்பாரை யலைத்துநான் மெலிவதினிப் போ து மெந்தா, யெப்பொழுதுங் கயிலையினுன் னடியவர்க்கே பணிவி டைசெய் திருப்பே னென்றான். (கஉரு)

தக்கவே தியன்றவமுஞ் சேய்ஞலூர் மறையவன்பா தகமும் பூ சை,புக்கமறைப் பாலகன்வா ளுளழிவு முப்புரநாட் பொலிவு மாற்று மிக்கதிருச் செயல்களினும் விதிமுறையை நிலைநிறுத்தும் விளையாட் டாலே, முக்கணு யகர்தருமன் முகநோக்கிக் கருணையுடன் மொழிவ தானார். (கஉசு)

மூர்த்தக்கால் சிவதலத்துத் திரிகூட மான்மியங்கண் மொழியு நாளிற், சுர்த்தக்கா ரெடுவேலிச் சண்பகக்கா மகிமைசொன்னோந் தனி த்தக காலே, மந்தக்கான் மகிமைசொல்ல வைத்திருந்தோ மினியத னை வழங்கு வோம்யா, மந்தக்கான் மகிமையைநீ யறிந்தக்கா லிவன் மகிமை யறிவா யென்றும். (கஉஎ)

விளையாடுந் திரிகூடக் கடவுண்மால் வரைத்தோன்றிக், கிரித்தே ன் கங்கை, யளையாடிப் பொங்குகடற் பாலாடி. வடவருவி யமிழ்த மாடித், தளையாடி மடலவிழ்க்குஞ் சண்பகா டவிதவழ்ந்து சங்கக் கோயில், விளையாடி யெம்மருகில் விளையாடுந் தென்றலங்கால் விளை யாட் டேயோ. (கஉஅ)

மலையாறு கடலலைந்து மண்டுபடார்ச சனபுரத்து மாய்வோர் தீமை மலையாம றுமிருந்து மறைப்பொருளை வலக்காதில் வழங்கும் போது மலையாட்டி கவுரிகுழல் வாய்மொழிசெங் கையிலணைத்து மடிமே லே மலையாம விளைப்பாற்றி வீசுவது திரிகூட வசந்தக் காலே. [ந்த.

தீர்த்தமகி மையிலதிகந் திரிகூட வடவருவி திருக்குற் றாலு மார்த்தலங் கலிலதிக மூவுலகா ஞ் சிவலிங்க மருளா னந்த, மூர்த்

திகளி லதிகமிவை சாலோக முதன்மூன்று முறையே நல்குங், கூர்த்
துரைக்கி லிவைமூன்று மந்நலத்தி லுலவுதென்றல் கொடுக்கு
மாதோ. (௧௯0)

மஞ்சுதோய் முதுகுடுமித் திரிகூட மலைச்சாரல் வசந்த வூதை
துஞ்சுபோ தையின்மேனி தைவரலால் வானெழுந்த குறைக் காற்றி
ன், பஞ்சுபோன் மறையவன்செய் பாதகம்போய்ச் சிவதருமம் பலி
த்த தாலே, தஞ்சமா முயர்கயிலை வரைமேவி யெமதுபதஞ் சார்ந்தா
னன்றே. (௧௯௧)

ஆதலா லெமதுபுடார்ச் சுனபுரத்தி லெழுதிரைத்தே னூறு பா
யுங், காதலா மைந்திணைநாற் றிசைமூன்றி யோசனையுங் கலந்து
வாழ்வோர், சாதலாம் பொழுதிருபா லுயிரிடத்து மொருநாளுந் த
ருமவேந்தே, போதலா வதுதவிர்த்தி தூதர்யா வருக்குமிது புகல்
வா யென்றார். (௧௯௨)

இன்னபடி கயிலைமலை யெம்பிரா னருளியவா றியமன் கேளா
முன்னமிதை யறியாது செய்தமையை நினைந்திரங்கி முகுந்த னூ
லும், பன்னரிய மறையாலுந் தெரிவரிய பரமரா சியத்தின் பான்
மை, மன்னுபெருந் திரிகூடத் தென்றலங்கான் மகிமையென மகிழ்
ச்சி கூர்ந்து. (௧௯௩)

பின்னலணி பிறைமவுலிச் சடையினா ரடிபரவிப் பெம்மா னெ
ம்மான், சொன்னபணி விடைதலைமேற் கொண்டனன்கொண் டன
னெனவே தொழுது போற்றித், தன்னகர்க்கு நம்பெருமான் விடை
கொடுப்பப் பகடேறித் தருமன் போந்து, நன்னகர்மந் தாநிலத்து
மகிமையே யனைவருக்கு நவில்வ தானான். (௧௯௪)

தருமமே தங்குபுடார்ச் சுனபுரத்து மூன்றியோ சனையின் மே
லும், வருமமே மறந்திடுமின் ஆதர்கா ளவனுறைவோர் வருவோர்
யாருங், கருமமே தியற்றுகினுந் தருமமே குறிக்கொண்மெனக் கண
க்கர் யார்க்கும், பருமமே நியையுகைக்கு நடுநெறிச்செங் கோற்கட
வுள் பகர்ந்தான் மன்னோ. (௧௯௫)

பாராது மறையவன்செய் பாதகந்தீர்த் தருள்புரிந்த பரிசீ தென்று
வாராத வழிகாட்டு மந்தமா ருதமகிமை வழங்கிச் சூதன்

மீராத சிவத்துரோ கந்தீர்த்த மகிமையுரை செய்வா யென்னு
மாராமை முனிவரர்க்குத தக்கன்மகம் புரிதன்முத லறைவ தானுன்.

12-மந்தமாருதச் சருக்கம் முற்றிற்று.

ஆசத் திருவிருத்தம் - ககச.

---

## பதின்மூன்ருவது:—தக்கன் வேள்விச் சருக்கம்.

அலர்க்கமல நறும்பொகுட்டி லயன்றலைநா ளுலகமெலா மளிக்க வேண்டி, முலைத்தலத்தி லறத்திறைவன் மார்பினிடைப் பிருகுளத் தின் முதுமரீசி, புலத்தியனத் திரிகிருது வங்கிரா சனபதிமேற் புல கன் ருேன்ற, வலப்பதத்திற் றக்கன்முத லாயதசப் பிரமரையுமரபி னீன்ருன். (க)

அன்னவராம் பதின்மர்களிற் பின்னவனுந் தக்கனெழுந் தயன் பா லேகிப், பின்னமிலா துயிர்க்குயிராய் நிற்பவனுஞ் சிற்குணனும் பெருந்தே வர்க்கு, முன்னவனு மிறுதியிலா முதல்வனும்யா ரெனக் கேட்ப முளரி மேலோ, னுன்னரியா னுணர்த்தரியா னிருவர்களுந் தேடநின்ற வொருவ னென்ருன். (உ)

படைப்பதுவுங் காப்பதுவு முன்னர்நீர் புரிந்திருப்பப் பரிவாற் பின்னர்த், துடைப்பவனை முதல்வனெனச் சொன்னவா றென்னை யெனச் சுதன்வி னவ, வுடைப்பிரம மாமவனே யுலகொடுக்கு நா ளைமையு மொடுக்கா நிற்பன், விடைப்பரன்பின் னருளியன்ருே யாங்கள்படைப் பதுங்காப்பு மென்ருன் வேதன். (ங)

நாரணனை யுனைப்பூத வகையையுயிர்த் தொகையையெலா நான் கு வேதம், பூரணமாம் பிரமமெனப் புகல்வதெவ னென்றுதக்கன் புகல வேதா, 'வாரணநம் பரமனுரை யுண்மைமொழி யவற்கேமற் றவர்கட் கெல்லாங், காரணமா முகமனுரை வேந்தனையு மீசனெனல் கடுக்கு மென்ருன். (ச)

ஆங்கவனோர் செயலுடையன் வடிவுடைய னுதலினு லவ்வனுக் கென்றும், பாங்குபெறுந் தோற்றமீ தெய்தாதோ வெனுஞ்சேய்க் குப் பதுமத் தண்ணல், யாங்குமுளன் யாங்குமில னுருவுமில னுருவு மில னெம்மா னம்மா, வோங்குலகின் பொருட்டாகச் செயல்புரியக் கருணைதிரு வுருவாக் கொள்வன். (ரு)

உயிர்கள்புரி வினைக்கீடா யுருவருக்க வேண்டிலென துருவ மீர் வன், செயிரறவே வினைப்பயன்க ளூட்டுதற்கு மாலாவன் சிதைப்பா ன் வேண்டி, னயில்பெறுமுத் தலைச்சூலத் தரனுவன் யாவுமறைத் தருளும் பான்மை, பயின்மகே சனுமாவன் சதாசிவமா யருள்புரிவ ன் பரம மூர்த்தி. (௬)

விள்ளாமை யருவாகி யருவுருவ மாகியுரு மேவா நிற்பன்
றள்ளாமை யுருவகத்தும் யாங்களிரு வருமாகித் தான்வே றுவ[னே
னெள்ளாருந் தயிலமுமபூ மணமுமணிச் சோதியும்போ லெங்குந தா
யுள்ளாகிப் புறமாகி யகம்புறமு நீங்காத வொருவ னுவன். (௭)

மாதவனே பிரமமென்றும் யான்பிரம மென்றுமதி மயங்கா வண்ண, மீதெலா மெம்போல்வார் வெண்டலைமா லைகள்புனைந்தான் விமல மூர்த்தி, யீதெலா முணர்ந்துணரா மாலாகி மாலுடன்யா னிக லுங்கால, நாதனெதிர் விலக்கியன்றே நாங்களடி முடிதேட நடுநின் றனே. (அ)

மூவரா நினைந்தரியை யென்னையரன் றனக்கிணையா மொழிவர் யாரும், பாவராய்த் தாந்தமையே கெடுப்பதன்றி யெமக்குமவர் பகைவ ராவார், சேவினு னன்பரென நினைப்பவர்க்கே யாங்களருள் செய்யா நிற்பே, மேவரா கிலும்யாரை யிறைவரென விறைஞ்சன் முக்க ணிறைக்கே சாரும். (௯)

கவ்வைநீர்ப் பலகோடி நதிகளுக்குஞ் சாகரமே கதியாம் போல வெவ்வகையா கியசமய நெறிக்கெலா மிறைவன்முக்க ணெம்மா னன்றே, யவ்வகையா யிரமறைக ளுரைத்தும்யா னுணர்த்தியுநீ யறி யா யையா, நவ்வியணி கரத்தானைப் பரவியருள் பெறுகவென்று னளினத் தானே. (௰)

வேறு.

கதியின் மேற்பெரு விதிமொழி சிறுவிதி கருதா
முதிய நாயக னரனெனிற் பணிந்துமான் முதலோர்க்
கதிக னாகெனும் வினையமுள் ளமைத்தருந் தவஞ்செய்
புதிய தானம்யா தென்னனு மலரில்வாழ் புத்தேள். (௧௧)

அந்த மானதங் குணர்வரு மேருவி னணித்தா
நந்த மானத தடம்புனன் மூழ்கிநம் பரனை
முந்த மானத வருசசனை முதற்றவ முயன்று
சொந்த மானதற் பரனடி சேரெனச் சொற்றான். (கஉ)

வேறு.

பூந்தவிசி லயனுரைத்த போதுமா னததடத்துப் போந்து தக்க, னுந்தவமோ ராயிரம்யாண் டியற்றுதலு முயர்விடைமே லாதி தோன்றிக், கூர்ந்தபெருந் தவமுவந்தே மீங்குனக்கு வேண்டும்வரங் கூறு யென்னப், பாந்தளணி செஞ்சடையார் பவளவாய் மலர்ந் தருளப் பணிந்து போற்றி. (கங)

மேகபத முதலாய விசும்புலகு மால்பதமும் விரிஞ்ச னூடு, நாகருல கமும்புவியு மெண்டிசையு மெனதாணை நடப்ப நாளும், பாகசா தனன்முதலா வனைப்பணிவோர் யாவருமென் பணிகள் கேட்ப, மாகனசுற் றமும்வாழ்வு மக்களுஞ்செல் வமுமழியா வரமும் வேண்டும். (கச)

சுந்தரியுன் னிடத்துறையுந் தோகையுமென் மகளாகத் தோன்ற நீயோ, ரந்தணன்போல் வந்தருளி மணம்புரிய வேண்டுமிவை யருளா யென்னப், புந்தியுற வணங்குதலும் புகன்றவர மனைத்து மருள் புரிந்து மேலுஞ், சிந்தையுற நன்னெறிநீ நிற்கிலிவை நிற்கு மென்றான் றேவ தேவன். (கரு)

வரமனைத்து மரவிடையா ரருளியெழுந் தருளியபின் மதங்கூர் தக்கன், பிரமனைத்தன் னிடத்தில்வர வுன்னுதலு மவனுணர்ந்து பெருஞ்சீர் முந்திப், பரமனைக்கண் டிவ்வாறே பெற்றனன்யான் பணித்தகொன்றும் பயின்றா னல்லன், நரமனைக்கு ளமுதூட்டி வளர்த்தாலுங் காளமன்றித் தருமோ நாகம். (கசா)

சிற்றறிவற் கினிதுரைக்கு நன்மொழிகள் மென்முளையோற் சிதைவா மென்று, முற்றறிந்த நான்முகன்போய் மைந்தனவை யகத்திசைந்த முகமன் கூற, மற்றவனைக் கம்மியன்போல் வளநகரு முறைபதியும் வகுப்பா யென்றான், பெற்றவரைப் பெரியவரைத் தெரியுமோ சிறியவர்க்குப் பெருக்கம் வந்தால். (கஎ)

தாலமிசை யயன்வகுத்த தக்கமா புரியிடத்துத் தக்கன் மேவி மாலயனு முறைபுரிய வாசவனும் பணிகேட்ப வானோர் போற்ற நீலவிழி யரமகளிர் கவரியிட நிரைமணிப்பூண் மகுடஞ் சூடி, மேல ரியா சனத்திருந்தான் வேந்தர்வேந் தாய்விதிக்கு விதியாய் மாதோ. (கஅ)

வேறு.

அரசுசெய் காலந் தன்னி லயன்மலர்ப் பதத்துத் தோன்றும்
விரைசெறி குழலாள் வேத வல்லியை விரும்பி வேட்டுத்
தரைதனிற் புதல்வ ரீரா யிரவரை யிருகாற் றந்தா
னுரைசெய்நா ரதனு லன்னோ ரொழிவிலா முத்தி சேர்ந்தார்.()

பாலரை முத்தி சேர்த்த பான்மையான் முனியைத் தக்க
னேலமீர்ப் புவனந் தோறு முழன்றிடச் சபித்துப் பின்னர்
நீலவார் கூந்த லம்பா னேரிழைக் கணத்தை யீன்று
சால்புசேர் சுபுத்தி யாதி பதின்மூவர் தருமற் கீந்தான். (உ௦)

அரிவையர் பதின்மர் தம்மிற் பிருதியங் கிராவுக் காக
மரிசிசம் பூதி வேட்ப வுற்சையை வசிட்டன் மேவக்
கிருதுவே கமையை வேட்பக் கியாதியைப் பிருகு மேவப்
பொருகனல் சுவாவை நண்ணப் பிரீதியைப் புலகன் வேட்ப.()

புத்திரை சனதி மாதைப் புலத்தியன் மணப்ப வாய்மைத்
தத்தையா மனசூ யைக்குத் தலைவனத் திரியே யாக
வித்தகக் கியாதி மைந்தன் விதாதாவே சுவதைக் காக
வத்திரி மகவாஞ் சோம னசுபதி முதலோர்க் காக. (உஉ)

தார்முடிச் சுவதை யீன்ற விருவரிற் றரணி தன்னை
மேருவே மணப்ப வாட்கண் மேனையை யிமவான் வேட்ப
வார்முலைத் தரணி யீன்ற மேலையை வருணன் வேட்டா
னாமு தனையா ரீன்ற மக்களு மநேகர் மாதோ. (உங)

வேறு.

இங்கிவரிற் காசிபனை யீன்றனன்ம ரீசிபுலத் தியன்சீர் மைந்தர்
பொங்கிராக் கதர்கவிகள் கின்னரர்கிம் புருடர்முதற் புலக னீன்றோ

ரங்கிரா சனபதிகள் கந்திருவர் வசுக்கடமை யளித்தா ராங்கே வெங்கவியைத் திருவையவு ணரைப்பயந்தான் பிருகுவென விளம்பு மேலோன். (உச)

அன்னவரிற் காசிபன்பின் றக்கனருள் பதின்மூவ ரணங்கார் தம்மை, முன்னர்வேட் டன்னவரி லதிதியா தித்தர்தமை முறையி னீன்றாள், பின்னிரண ணியனிரணி யாக்கனையுந் திதியயந்தாள் பிரக லாதன், பொன்னவன்சே யவன்மகன்வி ரோசனன்மா வலியவன்சேய் புதல்வன் வாணன். (உரு)

காலகே யரைப்பயந்தாள் காலையா யுவுமசுரர் கணத்தை யீன்றாள், மேலையோர் நாலவரொடு கலுழனையு மருணனையும் வினதை யீன்றா, ளாலவிழி யரம்பைமுதற் பன்னிருவர் தமைப்பயந்தா ளரிட்டை மூவாக், கோலரா குவைப்பயந்தாள் சிங்கிகைகந் துருநாகக் குலத்தை யீன்றாள். (உசா)

சம்பரனை முதலாய பன்னிருவர் தானவரைத் தனுவு மீன்றாள், கொம்பினிலங் கிளைகபிலை யிருவருமே கந்திருவக் குலத்தை யீனறார், வெம்பரிதி யிந்திரியம் பாரிமூக் கினில்விடுப்ப விரண்டு கோடி, யுய்பர்மருத் துவர்பிறந்தார் பிறநதனச ராசரங்க ளுலப்பில் கோடி. (உஎ)

எண்கிளையா வாண்மகப்பெற் றென்பெற்று ணயிரத்தி னிரட்டி யோரும், விண்கிளையா வீடுபெற்றார் மீட்டுமக ளிரைப்பயந்த வியப் பா'லோங்கி, யொண்கிளையாய் மலைகடலும் பாதலமும் பூதலமு முயர்வா னுடும், பெண்கிளையாற் சிறுவிதிக்குப் பெருங்கிளையா னதுதவத்திற் பெரிதொன் றுண்டோ. (உஅ)

வேறு.

அத்துணை வாழ்வு மீச னருளென வுணரான் றன்பாற்
சித்தென வகந்தை யேறிச் சிறுவிதி பெருமால் பூண்டா
னெத்துணை கற்று ரேனு மிருவகைச் செருக்கால் யார்க்கும்
மத்தநோ யறுமோ முக்கண் மருந்தையுட் கொள்வார்க் கன்றி. (உகூ)

மகக்குழாத் திருபா னேழ்பெண் மக்களை மணஞ்செய் சோமன்
முகத்தெழி லாரல் பானு முலையெழி லுரோணி பானு

முகப்பினு லெனை யோரை யொருவின னதனைக் கேளாத்
தகைப்பெரு மதியைத் தேய விதிமகன் சாபஞ் செய்தான். (௩௦)

புதியவா னமுத மீந்து புலவரை வளர்ப்பான் மேனி
திதிதொறுந் தேய்வ தானன் சிறுவிதி சாபந் தீரா
னதிபொதி பவள வேணி நாதனு ரடியா ரன்றி
விதிதனை மதியி னலே வெல்லவும் வல்லா ருண்டோ. (௩௧)

பாண்மதி தேய்ந்து மேனி பழுதுபட் டுழன்று வானோர்
கோனவை குறுகிக் கூறக் கொழுங்கனல் கரியா வேட்ட
தேனனோர்க் கோரஞ் செய்த சிறுமையாற் பெருநோய் பூண்டாய்
மேனெறித் தக்கன் சாபம் விலக்குதற் கெளிதோ நம்மால். (௩௨)

முதிரைமோ தகவி ழாவின் முதுகய முகத்தெம் மான்முன்
னதிகவீ றுரைத்து நீசனுயினை யந்தச சாபஞ்
சதுமுக னவனை வேண்டச் சதுர்த்தியி னமைத்து நீத்தா
னிதுவுமங் கவனாற் றீர்தி யென்னலு மயன்பாற் சென்றான். (௩௩)

வியன்மதி யுலகி னுன்கும் விண்ணிடை நான்கும் வீய
வயிரவாட் படையான் முன்னர் வளர்கலை நான்குந் தேய
வயன்முனர்க் கலைமூன் றேக வவன்வழி விடுப்ப வேகி
யுயர்பிரான் கயிலை வெற்பி லொருகலை யொடும்போய் வீழ்ந்தான்.

மறைகளின் முதல்வா வோலம் வானவ ராவி காத்த
கறைகெழு மிடற்றா யோலங் கண்ணுதற் பெருமா னேலை
மிறைவனே யோல மோல மென்னலு மிரங்கி நாதன் [டான்.
பிறையையோர் கரத்தால் வாங்கிப் பிறழ்சடை முடிமேற் கொண்

அருகுறை மதிமேற் சாப மயனின்று பணிவி னுவ
முருகுறை பிலிற்றுங் கொன்றை மோலியான் முடித்த திங்கட்
கொருகுறை யில்தாய்த் தன்பா லுற்றதால் வளர்வு மந்நோய்
வருமுறை யதனாற் றேய்வு மதிதொறு மதிக்கு வைத்தான். (௩௬)

இன்னவை யுணர்ந்து தக்கன் யான்புரி சாயந் தீர்ப்பான்
மின்னல்வே ணியனே யென்னப் பிதற்றலும் புலக னோக்கிச்

சன்னிதி யடைந்தோற் காத்துன் சாபமும் நிறுவி நின்சீர்ப்
பொன்னனூர் வாழ்வுங் காத்தான் புரையதோ வென்னத் தீர்ந்தான்.

சாதனைத் தவமும் வீறுந் தக்கனூர் மிக்க வாழ்வு
மாதரா ரறுபான் மூவ ராகிய மக்கட் பேறு
மோதுதல் புரிந்தா மப்பா லுயர்புகழ்ச் சதியை யீன்று
நாதனூர்க் கீந்த வாறும் வேள்விசெய் நயப்புஞ் சொல்வாம். (ரு அ)

இரசத சிகரி மீதி லிறைவர்பா லெம்பி ராட்டி
யரசுவீற் றிருக்கு மெல்லை யடிதொழு தகில மெல்லாம்
வரதனீ நடத்தும் பான்மை வகுத்தெனக் குணர்த்தா யென்றாண்
முரகரிக் கரிய நாதன் முறுவல்கூர்ந் தருளிச செய்வான். (ரு கூ)

சகளநிட் களமே யாகிச் சகலமு மொடுக்கந் தோற்ற
நிகழ்தரப் புரிவோ மென்று நிகழ்த்தலு நிமலை மேனி
யகளமா முனக்கே தென்று ளருளுரு வாவ தென்றன்
புகலுநின் னருள்யா னெல்லா மெனதென் றாள் புவன மீன்றாள். ()

அகிலமா முணர்வை நாத னம்பிகை யுறையான் மாற்ற
நிகிலமு மயங்கிப் பானு நிலாவொளி திறம்பி யேனைச்
சகமுளோர் சடமாய் வீழ்ந்தார் சதுமுகத் தயன்மா லானன்
முகில்வண்ணன் பிரம மானன் மூவுல கிருளா யிற்றால். (சக)

யாவுமே மருளாய்க் கன்ம மிகந்துமா சுறலா லஞ்சிப்
பூவையென் மடமை யாவும் பொறுத்தியென் றடியில் வீழ்ந்தா
டேவிமெய்த் துளக்க நீங்கத் திருவுள மிரங்கி யண்ண
லாவியாய் நிறைந்து நின்று னகிலமு மெழுந்த வன்றே. (சஉ)

உணர்ச்சிமீண் டிறைவ னல்க வுலகுயிர்த் தெழுந்த தம்மா
கணத்தினி லுகம்பல் கோடி கழிதலாற் கன்ம மாற்றாப்
புணர்ப்புறு தன்மேற் குற்றம் போக்கெனக் கவுரி யோற்றத்
தணப்பிறாற்பிறவியெய்தித்தவஞ்செய்துதவிர்ப்பாயென்றான்.(சங)

வள்ளலைப் பிரிந்து தேவி வலம்புரி யெனக்கா ளிந்தி
வெள்ளமேன் மிதந்தும் பூமேல் விரதமுற் றுழன்றுந் தக்கன்

பிள்ளையா யூழி காலம் பெருந்தவ முயன்றும் பாவந்
தள்ளுதற் கரிய தாலுற் சகத்துளோர்க் கெளிதோ வம்மா. (சச)

மணந்தனன் மறையோ னாக மழுவலான் மாதை வேட்டுத்
தணந்தனன் மறைந்தா னன்றே தக்கனுங் கதமேற் கொண்டா
னணங்குபின் வருந்தி நோற்ப வார்வமுற் றெய்தி நாதன்
கணங்தொழவிடைமேற்கொண்டுகயிலைமால்வரைமேற்போந்தான். ()

தந்தைதா யுணரா வண்ணந் தன்மகட் கொடுசென் றானென்
றெந்தையார் தமையெண் ணும விகழ்வது தொடுத்தான் றககன்
சிந்தையா லமர ருன்னிச் சிறுவிதிக் கிதனாற் றீமை
வந்திடு நமக்கு மேதம் வருமென வெருவிச் சூழ்ந்து. (சரு)

ஆதியார் வரத்தாற் பெற்ற வரசினு லவன்பால் யாமும்
போதரா திருத்தல் கூடா தாதலாற் புனல்சேர் வேணி
நாதர்பா லிவனை யுய்ப்ப நவையறு மென்றுதேறி
மாதுநின் மருகற் காண்பான் வருகென வவனுஞ் சென்றான். (சஎ)

கவளமால் வரையைக் காத்தோன் கமலத்தோன் குலிசத் தாலே
துவளமால் வரைக ளீர்ந்தோன் சுரர்களுந் திரளாய் வெள்ளித்
தவளமால் வரையை நோக்கித் தக்கனோ டெழுந்து முக்கட்
பவளமால் வரையைக் காண்பான் பரிவினுல் விரவிப் போநதார். ()

போந்தனர் வானோர் வெள்ளிப் பொருப்பிறை செம்பொற் கோயில்
சார்ந்தனர் வாயில் பூதர் தடுத்தனர் விழியுந் தாளுஞ்
சேந்தன னகங்கா ரத்தாற் சிறுவிதி நின்றான் செல்வி
காந்தனைப் பணிவா ரெல்லாங் கடைதடை யின்றிச் சென்றார். (சகூ)

எரிமணி யிமைக்குங் கோயி லிமைப்பிலா விமையோர் புக்கு
வரிவிழி மடந்தை யோர்பான் மருவிவீற் றிருந்தான் றன்னை
யரியணை யணுகித் தாழ்ந்து பணிந்தன ருகாந்த வாரி
கிரிசனெம் பெருமான் வெள்ளிக் கிரிமுனர்த் தாழ்த லேய்ப்ப. (ரு0)

சொல்லினு லரிக்கு மோலிக் துளக்கினல் விதிக்கு மூரல்
வில்லினுற் குலிசத் தாற்கு விழியி னலமரர்க் கின்ப

நல்கினான் சமயந் தோறு நண்ணிய கடவு ளாகி
யல்கலி னுயிர்கட் கெல்லா மளவினுக் களவாய் நிற்பான். (ருக)

காப்பது கடனாக் கொண்ட கண்ணனை யினிது நோக்கி
மாப்புவ னங்கள் யாவும் வளவிதே யென்று னன்னோன்
பூப்பவன் றனக்கும் யாவும் புரக்குமென் றனக்கு மேத
நீப்பவ னுளைநீ யாக நிறைவலாற் குறைவே தென்றான். (ருஉ)

கரியுரி யாடை போர்த்த கண்ணுதற் கருணை மூர்த்தி
யரிபிர மாதி யோரை யவரவ ரதிகா ரத்துப்
புரிவன புரிந்து வாழ்மின் போதுமி னென்று வாக்கால்
விரிதரு குறிப்பா னோக்கால் விடைகொடுத் தருளப் போந்தார். ()

படையினார் வணங்கு நேமிப் படையினு ளாதி வானோர்
விடையினார் சரணம் போற்றி விடையினன் மீளுங் காறுங்
கடையினார் முகனார் கோயிற் கடையினி லமர்ந்தான் றக்கன்
புடையினார் பரவக் கொங்கைப் புடைப்பினார் கவரி யேந்த. (ருச)

திருமலைக் கோயில் வாயில் செறிந்தசா ரதரை நோக்கி
மருகனை மகளைக் காண்பான் வருமெனைத் தடுத்தென் னேவ
லரிதனை யயனை வானி லமரரை விடுத்திர் நீரென்
பெருகடித் தொழும்ப ராயும் பேதமே புரிந்தி ரென்றான். (ருரு)

வணங்குதி யாகிற் சேறி வள்ளல்பா லென்றார் பூத
ரணங்கினை யவனுக் கீந்தே னடியர்போல் வணங்கே னென்னைக்
கணங்கணீர் தடுத்த வாற்றாற் காண்மினுங் கடவுள் பூசை
தணந்திட வுலகம் யாவுந் தடுப்பனென் றுருத்துப் போனான். (ருசு)

அன்றுதொட் டயனை மாலை யமரர்கா வலனை மேருக்
குன்றுதொட் டவன்பொற் கோயில் குறுகுதிர் பணிதி ராகின்.
மன்றுதொட் டரசும் வாழ்வு மாற்றுவ னெனலு மன்னோர்
நன்றுநின பணியே நிற்போ நம்பிநீ முனியே லென்றார். (ருஎ)

பூமனுங் கண்ணன் றானும் பூமனும் புனிதத் தெய்வக்
காமனும் போய பின்னர்க் காமனு நெறிதீர் தக்கன்

சோமனை முடித்துத் தோலைச் சோமனென் றுடுத்தா னென்னை
மாமனென் றுணரான் றனை மாமனென் றிருந்தா னென்று. (௫௮)

தீர்த்தனைப் பரவு வாரைத் தீர்த்தனன் றீராக் குற்றம்
போர்த்தனன் பிரமன் யாகம் புகுந்தனன் பரம பாக
நீத்தன னந்தி சாப நிறுவிட வேள்விக் குண்டந்
தூர்த்தன னகந்தை செல்வத் துரவினைத் தூர்ப்ப தோரான். (௫௯)

திருநந்தி சாப மஞ்சிச் செய்கலர் யாரும் வேள்வி
தருமமாந் துணையை நீங்கித் தவித்தன வுலக மெல்லாம்
வெருவுபே ரவையை நோக்கி வேள்வியான் புரிவே னென்று
னெறிபெருஞ் சாபத் தீமூன் னெதிரும்வைத் தூறு போல்வான். ()

தெருண்டவா னவரைக் கூவிச் செப்புவான் கயிலை யாற்கு
மருண்டபுன் காடு நாடு மலர்க்கையி லெடுப்ப தோடு
சுருண்டபூங் குழலார் வீடு தொறும்பலிக் குழல்வான் கண்ட
மிருண்டது வயிறுற் றும லெழுகடல் விடமுண் டன்றே. (௬௧)

விதியெனு மெனது தாதை விதியிலாற் கிரங்கி யென்பாற்
சதியெனு மகளை யன்னோன் றனக்கரு ளென்ற வாற்றாற்
பதியென வவனுக் கீந்தேன் பாக்கிய மவளாற் பெற்றான்
மதியினு மதியா னென்னை மாதுல னெனவு மோரான். (௬௨)

தாயிலான் றமரு மில்லான் றந்தையு மில்லான் காடு
கோயிலா னூரு மில்லான் குலமிலான் குடியு மில்லான்
றீயிலா டரங்க மாகத் திக்கெலா முடைதொட் டாடும்
பேயிலா திருந்தா னுண்டோ பேரிலான் றனக்கோர் சுற்றம். (௬௩)

கொற்றவ னல்லன் வேணிக் கோலத்தாற் குருவி லாதான்
கற்றவ னல்லன் மாதர் கற்பினை யழித்த லாலே
நற்றவ னல்ல னீம நடத்தினா லொழுக்க மில்லான்
மற்றவன் றனையே சூழ்ந்து வணங்குதிர் வானோர் நீவிர். (௬௪)

பொன்மையா ரிருவர்க் காக மற்றுள புதல்வி மாரை
யன்மையா யலைத்தான் றன்னை யலைத்தனன் சாபத் தீயான்

மென்மைசேர் மகத்தீ யொன்று வேட்டினிச் சதியை வேட்டான்
வன்மையும் பணியுந் தேவர் மடமையுந் தவிர்ப்பே னென்றான். (௬௫)

என்றன னிருந்தார் தும்ம வெழுந்தன னமர மாதர்
பொன்றுணைக் கவரி யேந்தப் புள்ளிடை தட்பப் போகிச்
சென்றனன் கங்கை யோர்பாற் றிசைமுக னாதி தேவர்
மன்றனன் மகளி ரோடும் வருகென விடுத்தா னோலை. (௬௬)

கனகல வனத்துத் தெய்வக் கம்மிய னிறைஞ்சிப் புக்குப்
புனைமணி வாயின் ஞாயில் பொன்னெடுஞ் சிகர மன்றஞ்
சினகர மணங்கார் கோட்ட முனிவரா சிரமந் தெற்றி
யனமடஞ் சாலை சோலை யறப்புறம் வேதி யாதி. (௬௭)

ஏறுயோ சனையோ ரைஞ்ஞூற் றிரட்டியின் யாக சாலை
நூறுயோ சனைவி சால நுவல நம் வேள்விக் குண்டங்
கூறுயோ சனையான் மேருக் குன்றமு மலையா நிறப
வீறுசேர் கடலு மேங்க விண்ணவர் வியப்பச் செய்தான். (௬௮)

வேறு.

இந்தமகச் சாலையுறீத் தக்கனு ரோலைவழி யெழுந்து போந்தார்
கந்திருவர் கின்னரர்நா னவரியக்கர் கிம்புருடர் கருடர் போக
ரந்தரசா ரியரமரர் வித்தியா தரர்பூத ரரக்கர் மாநதர்
முந்துதா ரகணத்தர் பாதாளர் வேதாளர் முனிவர் சித்தர். (௬௯)

பன்னிருவ ராதவர்கள் பதினொருவ ருருத்திரர்மேற் பதின்மர் தேவர், மன்னுநவ மணிமவுலி மனுவேந்த ரெண்டிசையின் மகுட வேந்தர், நன்னுதிக ளோரேழு பொழுதாறு தருக்களைந்து நான்கு வேத, முன்னருல் கொருமூன்று மிருமருங்கு நிறைந்தனரான் முகுர்த்த மொன்றில். (௭0)

பொன்னுலகி லரம்பையர்கள் பொருப்பிலுறை யரமகளிர் புயங்க நாட்டுக், கன்னியர்க ளியக்ககுலப் பூவையர்கிஞ் சையர்மகளிர்க்குப வேந்தர், பன்னியர்கள் கந்திருவப் பாவையர்க ளுடுமகளிர் படிவ மாத, ரின்னகைமே னகையரம்பை யுருப்பசிதி லோத்தமைமே விந்தி ராணி. (௭௧)

வேறு.

வந்துகுழு மினர்மகவான் முதலோ ராக வானவர்கு ழாத்துடன் யால் வாரி மீதி, லுந்திபூந் தவனிடம்போய்ந் தக்கன் வேண்டி யுயர் மகநீ காத்தருளென் றுரைப்ப மாமான், முந்தவெழுந் தொருகரு டத் துரங்க மேறி முளரிமலர்த் திருவினொடும் வந்தான் பூமே, லந் தணரோர் புறத்தணைந்தா னதனைக் காண வறுபத்து நாற்கலையோ டொருமான் வந்தாள். (எ௨)

வேறு.

புக்காட் செல்வம் போலும் புகலுண்டோ புகலா முன்னர்த்
தக்கனார் வேள்விச் சாலை தன்னிலெவ் வுலகத் தோருந்
தொக்கனர் புவன வேந்தர் தொகையிலீ சான னல்லார்
மக்களிற் சதியே யல்லார் மருகரிற் பரம னல்லார். (எ௩)

மவுனரிற் பராச ரன்சீர் வசிட்டனத் திரித தீசி
சுவனுயர் கும்ப யோனி துருவாசன் பிருகுத் துங்க
னிவர்களெம் மானை யன்றி யெய்தில ரிருநதார் மற்றைத்
தவமுயன் முனிவர் யாருஞ் சார்ந்தனர் யாக சாலை. (எ௪)

பதுமநா பனுக்கு மேனைப் பண்ணவர் தமக்குஞ் செய்யு
முதன்மையாஞ் சிறப்புச் செய்து முறைமுறை வரிசை யாவும்
புதல்வியர் மருகர்க் காற்றிப் பொருவரு நெடுங்கூ டத்து
மதகயம் புகுந்தா லென்ன மகப்பெருஞ் சாலை புக்கான். (எ௫)

ஆகவ னியங் காரு கபத்தியந் தென்பா லங்கி
மாகனற் கொழுந்து வீச வடவரைத் தறிவா னோங்கப்
பாகமாங் காம தேனு பரந்தவி சொரியா நிற்ப
யாகமார் பொருள்கள் யாவு மீந்திடப் பாரி சாதம். (எ௬)

திரவியங் குன்று குன்றாத் தேவர்கள் குவிப்ப வானோர்
புரவலன் பணிப்ப மோனைப் புங்கவர் திசைகள் காப்ப
விரதமார் வருக்க மெல்லா மிந்துவே கொடுப்ப வேனை
மருகரோ டதிதி யாதி மக்கள்கைக் கரும மாற்ற. (எஎ)

இருபுறத் தமர மாதர் கோடிக மேந்திச் சூழத்
திருநுதலிந்தி ராணி செயும்பணிக் குறைக டீர்ப்பக்

கருணையா னுலக மெல்லாங் காப்பவன் வேள்வி காப்பப்
பொருவரும் யாகத் தெய்வம் பொலிவுற நடப்ப மாதோ. (எஅ)

தருமனே குரவ னாகச் சதுமுகப் பிரம னீன்ற
பிரமரி லொருவன் மேவிப் பிரமதா னத்தில் வைகக்
கருநிறக் கலைத்தோல் போர்த்தனக் கைத்தலம் வெண்ணெய் பூசித்
திருமகப் பொலிவு பூண்டு சிறுவிதி யிருந்தான் மன்னோ. (எகூ)

மடுத்துச்சொல் லுரையா லாணி மறையுரைப் பவனாம் யாவு
மெடுத்தகைகை நீட்டி வாரா மெழிற்பெருந திருவாந் செல்வி
விடுத்துக்கைம் மறுப்பா ருண்டோ தக்கனார் வேள்விச் செல்வங்
கொடுக்கக்கை சடைப்பா ரிலலை கொள்ளக்கை சடைப்பா ரின்றி. ()

இன்னவை நிகழு மெல்லை யீசனைம் பெருமா னன்றிப்
பன்னரு மகத்தின் சாலை படருவான் மடமை நோக்கிச்
செந்நெறி விளைப்ப னுன்னிச் சென்றனா முனிக்கு ழாத்துத்
துன்னுசீர்ச் சுவனுத் துங்கன் றருவாசன் றதீசி மாதோ. (அக)

சிறுவிதி முகத்தை நோக்கிச் செப்புவான் றதீசி யார்க்கு
முறுதியே யறங்கள் செய்த லுயர்பல வறத்தின் மேன்மை
பெறுகதி மகமே மிக்காம் பிறங்குசீர் மகத்தி னுன்போன்
மறுவறு முயற்சி வல்லார் வழங்குமூ வுலகிற் காணேம். (அஉ)

நிச்சமார் தருவும் வானோர் நிருபனு மேவல் கேட்பப்
பச்சைமால் வேள்வி காப்பப் பண்ணவர் விண்ணோ ரேத்த
விச்சையா மகஞ்செய் கின்றாய் விதிமகன் விதிநீ செய்யு
மெச்சமென் பத்தற்கோ ரெச்ச மீசனில் லாத தென்றான். (அங)

தேசமர் முனிவன் கூறச் சிறுவிதி யொருவர்க் கிங்கே
யீசர்பன் னொருவ ருள்ளா ரென்றன னிவரோ நேர்வா
ரோசைவிந் துவமா மூல வுருத்திரர்க் கென்றான் யோகி
யாசறு மனத்தன் மீட்டு முருத்திர ரவரே யென்றான். (அச)

உமையொரு பாகர்க் கோது முருத்திர நாமஞ் சொல்வார்
தமதுருப் பெற்றோ ரங்கி சம்புவின் கணத்தோர்க் கெல்லாஞ்

சுமையுறு தாது வைந்தும் பொன்னெனிற் சுவண மாமே
வமரரோ புலவ ரென்றா லாடினோர் பாடி னோரும். (அரு)

கடைநடு முதலிலாமுக் கண்ணனே கடவு ளொன்று
சடைமுடித் தலைவன் கூறச் சாற்றுவான் முனிந்து தக்க
னிடையினிற் சடையின் மாத ரிருவர்வைத் தவனே யாகி
விடையினைப் பரியா வேறி வீதிபோ மவனே யீசன். (அசு)

நஞ்சினை யமுதுண் பானே நாணிலா நக்கன் றானே
குஞ்சிதப் பவுரி யாடுங் கூத்தனே தீர்த்த னவான்
வெஞ்சினப் பன்றிக் கோடு மீன்விழி யாமை யோடு
கஞ்சுகி பிறவும் பூணுங் கருத்தனே கருத்த னவான். (அஎ)

கழிதலை மாலை யானே கையிலோ டேந்து வானே
சுழிபுலி கரித்தோ லாடை சுற்றிவெண் ணீறு பூசி
யழிதரு மயானந் தன்னி லலகையோ டாடு வானே
விழியில்வேற் றுருவு காட்டும் விகிர்தனே விமல னென்றான். (அஅ)

முறையிலான் முனிந்து கூற முனிவிலான் மொழிவான் மூல
மறையெலாங் கற்றுங் கல்லா மனத்தராய் மதத்தா லுன்போ
லிறைவனை யெண்ணா ராகி யிருந்தவம் புரிந்தார் மன்னோ
குறைகெழு மனத்தார் தாருகாவன முனிவர் முன்னாள். (அகூ)

ஈங்கிவர் தவத்தை மாய்ப்ப மாயனை யேவி யெம்மான்
றீங்கனி மொழியார்க் கெல்லாந் திகம்பர னாகிச் சென்றா
னாங்கவர் மருங்கு நெஞ்சு மாசையே யுடைய ராகி
நீங்கருந் தவமுங் கற்பு நிறைகளுந் தோற்றா ரன்றே. (கூo)

அவ்வவ ராபிசார முயன்மிதித் தாடி வேங்கை
வெளவுரி யுடுத்து நாக மிலேந்துகூர் மழுவுந் தீயு
நவ்வியுந் துடியு மேந்தி நகுதலை முடித்துப் பூதம்
வெவ்வடர் படையா நாதன் விரதர்வீ றடக்கி யாண்டான். (கூக)

உலகமீன் றருளப் பெண்பா லுகந்தனன் மலர்ந்த நாட்டந்
திலகவா ணுதலாள் பொத்தச் செங்கைவேர் வெழுந்த வாரி

புலமெலா மழித்தல் கண்டு புவனமூன் றுரு வுய்த்தான்
பலநதிப் பரப்பி லொன்றே பகீரதற் கேந்து கங்கை. (௩௨)

வீறுசே ருகாந்தம் பொங்கி யெரிசெற வெளியாங் கால
மீறிலா மையிரு வீச னிவ்வெளி மயானத் தந்த
நீறணிந் தாடல் செய்வா னின்மலை யொருதனி காண
ஆறிலாத் தருமஞ் சேவா யுகந்தொறு மொருதா ளேக்கும். (௩௩)

மீனமாய் மறையை மீட்டுக் கமடமாய் வெற்பைத் தாங்கி
வானவர்க் கமுத மீந்து மகிதலம் வீழாமற் கோட்டா
லேனமா யெடுத்து மாமா லெய்துமா வடக்கி மைந்தர்
ஞானநா யகன்பா லுய்த்தார் நாட்டமு மோடுங் கோடும். (௩௪)

கயமெனு மவுணக் குன்ற முயிர்க்கடல் கலக்குங் காலம்
வியமுறு துலக மும்ப வென்றுதோ லுரித்துப் போர்த்தா
னயன்மதஞ் சிரத்தா னீக்கி யதுபலிக் கலமாச் சூலம்
வயிரவற் கீந்து விட்டான் மாலாதி சுரர்மான் மாற்ற. (௩௫)

வாசவன் மதமோர் கால மாற்றவேற் றுருவா யெங்கோன்
பூசல்வெங் கதத்தி லுய்த்த சலந்தரன் புவன மூன்றிற்
கேசவன் முதலோர் சாயக் கிளர்சமர் விளைத்தான் வெற்பி
லீசனந் தணன்போ லுய்த்த நேமியா லிருகூ றுற்றான். (௩௬)

வீந்தவ னுருவிற் புக்கு விறலரி விருந்தை யென்னுங்
காந்தையைப் புணர்காற் சோரங் கண்டவள் சபித்துத் தீயின்
மாய்ந்தனள் மயானத் தாடு மயங்கலு முமையோர் வித்தாற்
பூந்துழா யருளா வன்றே புனைந்துமா லொழித்தான் மாலும். (௩௭)

அகிலகா ரணமா வாட லாடலுக் கிசைந்த கோலஞ்
சகலமு மங்கங் காகத் தரிக்குவன் விடுப்ப னல்லாற்
புகலரு முருப்பேர் செய்கை பூண்படை யுடையூண் மற்று
நிகிலநா யகனுக் குண்டோ நிகழ்ந்தது நிகழ்த்து ஞாலம். (௩௮)

சரமனைத் தசர மெல்லாந் தந்தையாய்த் தாயாய்த் தந்த
யரனைப் பணிந்தே நீயும் பண்ணவர்க் கரசா யுந்தை

பிரமனைப் பிறரை யாண்டாய் பிஞ்ஞகர்க் கவியும் பெய்து
சிரமனைச் செல்வ மெய்தித் திறம்பெற வாழ்தியென்றான். (௯௯)

ஆங்கவன் பொருட்டா லென்று மமுதின்றி விடமுண் டாற்குப்
பாங்கினாற் பலியேற் றுண்ணப் பரிகலங் கொடுத்தா னெந்தை
நீங்கலா வறுமை நீக்கி நேரிழை சதியை யானே
யோங்குசீர் மனத்தா லீந்தே னுயர்மனை வாழ்வு பெற்றான். (௧௦௦)

துன்னரும் புலித்தோன் மாற்றித் துகில்சுற்றி மகுடஞ் சூட்டி
மன்னுபொன் னணிகள் பூட்டி மணவாளக் கோலஞ் செய்த
வென்னையோ ரனுவா வென்று விகழ்ந்தன னதனா லீசன்
றன்னையு மருகா வெண்ணேன் சதியையு மகளா வெண்ணேன். ( )

பற்றில னெனவே தக்கன் பகர்தலு முனிவ னோக்கி
யுற்றுநீ புரியும் வேள்விக் குறுபய னளிப்பார் யாவர்
பெற்றமா மறைகள் யாரைப் பிரமமென் றுரைக்கும் பேதாய்
வெற்றிகொண் டெழுமோ சேனை வேந்தனை யின்றி யென்றான் (௧௦௨)

முனிவனீ துரைப்பத் தக்கன் முயற்சியே பயனை நல்கு
மெனவுரை வலிப்பப் பின்னு மிறையின்றிச் சடமா மூக்க
நனிபயன் றருமோ வென்ன நற்றவன் மறுப்ப மற்று [ன்.
முனதுரை கேட்பார்க் கன்றோ வுரைப்பதென் றருந்துச் சொன்னா

அவனது பகர்த லோடு மடன்முனிச் சீயஞ் சீறிச்
சிவனரு ளின்றிச் செய்கை சீவகோ டிகளுக் குண்டோ
விவனையெண் ணாது நீயு மியலுமட் டியற்றும் யூபங்
கவனவெங் களத்தி லாவி கழியுமட் டாடும் யூபம். (௧௦௪)

விதுவணி சடையா னன்றி வேள்விநீ யியற்றுஞ் செய்கை
மதுமலர் குழலிற் சூட்டி வனமுலை யாரம் பூட்டிக்
கதிர்மணிக் கலாபஞ் சாத்திக் கன்னிகை யொருத்தி தன்னைப்
புதுமணக் கொழுந னின்றிப் புரிமணக் கோலம் போலும். (௧௦௫)

கண்ணனென் பவனு மெங்கள் கடவுள்பாற் சத்தி மற்றை
விண்ணவர் பசுக்க ளன்றே வியன்பசு பதியை நீக்கிப்

பண்ணமை பசுப்படுத்துப் பயனுகீ யெய்து வாயேற்
பெண்ணொரு பெண்ணைக் கூடி மகவினைப் பெறலு மாமே. (௧0௬)

வசுக்களே யாதி வானோர் காசிபன் மற்றோ ராய
முசுக்கள்போன் முனிவ ராலு முடிவதொன் றில்லையாற் கவ்வை
யுசுக்கள்போ லரிப்பக் கூடி யுயிரரித் திருநதீ ரும்மைப்
பசுக்கள்போற் படுப்பன் வந்து பசுபதி யவனே யின்னம். (௧0௭)

உகம்பல கடந்த முக்க ணொருவனை மழுவ லானை
யகர்தையா விகந்த நீயு மழிகநின் யாக சாலை
புகுந்தவர் சிதைக வேள்வி பொன்றுக வென்று சாற்றித்
திகந்தமும் புகழும் யோகி முனிக்குழாத் தெழுந்து சென்றான். ()

ஆங்கவன் போய பின்ன ரமரரோ டிருந்து தக்கன்
வீங்குதீ வேள்வி செய்தான் மேல்வருங் கரும மோரான்
யாங்குமே நிறைந்த முக்க ணிறைவனே யறிவித் தன்றித்
தீங்குநன் கெய்தும் பான்மை தேவர்க்குந் தெரியொ ணாதால். (௧0௯)

இருநிலப் பரப்பும் வானு மேவல் கேட் டிறைஞ்சத் தக்கன்
றிருகுசெய் மகத்தின் கோப்புந் திங்கள்கா சிபனே யாதி
மருகர்தஞ் செருக்கு மன்னோர் மனைவியர் களிப்பும் வானோர்
பெருமையுங் கண்டு வெள்ளிப் பிறங்கல்யாழ் முனிவன் சேர்ந்தான்.

திருமலைக் கோயில் வாயிற் றிருக்கடை பலவு நீங்கி
மருமலர்த் திருவோ லக்க மண்டபங் கடந்து போகி
யருளினாற் கண்டான் சிற்சூ தகிலமு மாடுங் கையாற்
கருணைநம் பரமனோர்பாற் கவறெறிந தாடு வாளை. (௧௧௧)

சடைமுடி தாளிற் சூட்டித் தாழ்ந்துவீழ்ந் திறைஞ்சி முக்க
ணுடையநா யகனைப் போற்றி யுலகெலா மீன்ற தாயைப்
புடையுற வணங்கி வாழ்த்திப் போந்துவாய் புதைத்துத் தக்கன்
விடையமார் வேள்வி மார்க்கம் விரைவின்விண் ணப்பஞ் செய்தான்.

கேட் டனள் கவறுஞ் சூதுங் கிடத்தின ளிறைமுன் றனை
யிட்டிய மகத்தி னார்வத் தெழுந்தனள் பணிந்து வீழ்ந்தாள்

வேட்டகத் தேவர்க்கு மெய்தா வியன்சிறப் பெய்தி னாலும்
பேட்டன நடையி னார்க்குப் பிறந்தகத் தாசை போமோ. (கக௩)

அன்னைதாள் பணிந்து கேட்ப வையர்தா முறுவல் பூத்து
நின்னையு மையா னெம்மை நினைவிலு நினையான் சென்று
னுன்னையே மதியான் போத லொழியென மறுத்துந் தாயர்
தன்னையர்க் கண்டு மீள்வே னென்றுபொற் சரணில் வீழ்ந்தாள். ()

வல்லியங் கொம்பு வேண்ட வரதன்மேற் கரும மோர்ந்து
சொல்லிய வண்ண நேர்ந்தான் றாயபொன் விமான மேறிப்
பல்லியங் கொம்பு பம்பப் பணிமொழி யணங்கார் சூழச்
செல்லியற் கணங்க ளார்ப்பச் சிறுவிதி சாலை சார்ந்தாள். (கக௫)

ததிநிலக் குண்டங் கீண்டு சமிதையா முரந்தூஉய்ச் சாலி
முதிரைவித் தெறிந்து நெய்யா முதுபுனல் சொரிந்து நாளுந்
திதியொடு கோளுஞ் சூழத் தீவினைப் பயிர்செய் வான்முன்
புதியநல் வினைபோற் சென்று புகுந்தனள் புவன மீன்றாள். (கக௬)

வன்சுதை தீற்றுஞ் சாலை வாஞ்சையின் வருகின் றானைத்
தன்சுதை யெனவும் பாரான் றகவிலன் வருகன் றாட்டாப்
புன்சுதை யனைய னாகிப் புறக்கணித் தகலா நின்றான்
மென்சுதை தனைக்கண் டாலம் விலங்குதல் வழக்கே யன்றோ. (கக௭)

தீயவ னிருந்த மார்க்கந் திருவுளந் தனிலெண் ணமை
ளுயகி நடந்தா ளுள்ளே நடத்தலு மவன்கா ணாது
தாயருந் துணைவி மாருந் தழுவினர் மகிழ்ச்சி கூர்ந்தா
ராயிழை பாச வர்க்க மகற்றினு மகலு மேயோ. (கக௮)

பயந்தனள் சிறப்புச் செய்யப் பயந்தனள் பதக னாலே
வியந்துடன் பிறந்தார் யாரும் விருப்பினர் வெறுப்பார் போன்று
ரயர்ந்தன ளகன்றாள் செல்வி யணங்கனார் குழாத்தை நீக்கிப்
புயங்கலை புரிவை போர்த்தான் புரிமக முன்னர்ப் போந்தாள். ()

கண்ணனை மலரு ளானைக் கற்பக வனத்து ளானை
யண்ணகா பிறரை வானில் வெண்மதிக் கடவு ளாதி

யெண்ணரு மருகர் தம்மை யாகத்தில் வரித்தாய் முக்க
ணண்ணலெம் பரனை யெந்தா யயர்த்தனை போலு மென்றாள். (௧௨௦)

அலைகட லமுதப் பாய லண்ணலு மமுத முண்ணும்
புலவரும் புலவர் கோனும் புலவருக் கமுத நல்கும்
கலைநிலா வொளிருந் திங்கட் கடவுளும் வளர்பொற் சாலை
நலமிலா விடத்தை யுண்டா னண்ணுதற் குரிதமேதோ வென்றான். ()

ஆரணன் வெருவி யோட வமரர்க ளோட வோடா
நாரணன் வெளிய மேனி கரியதாய் நடுங்கி யேங்கிப்
பூரண முறையோ வென்னப் புகறலும் விடத்தை யெங்கோன்
பாரணஞ் செயலா லன்றோ பருகின ரமுத மென்றாள். (௧௨௨)

மன்றிடை நிருத்தஞ் செய்து மனைதொறும் பலியேற் றுண்டு
குன்றுறை குலமி லானைக் கூட்டலன் வேள்விக் கென்றா
னுன்றனி மகவை யன்றாற் குதவினை குலமென் சொல்வா
யென்றன னதனை யீவி ரிருவருந் தவிர்க வென்றான். (௧௨௩)

அங்கண னகனை முக்க ணகிலநா யகனை மூர்க்கன்
பங்கமா விகழ்த லாலே தந்தைமேற் பழைய காதன்
மங்கைநா யகியாண் முற்று மறந்தனண் மடவார்க் கெல்லாந்
தங்கணா யகனே யன்றித் தந்தைதாய் தமர்வே றுண்டோ. (௧௨௪)

மந்திர மறைகள் பாய்மா மகத்திலெண் டிசைகள் காக்கு
மிந்திரன் முதலோர் தூச ரிமையவர் முனிவர் தொண்டர்
சந்திரன் கதிரோ னங்கி தம்பிரான் விழிகள் பூமி
யந்தர மனைத்து மேனி யவனலா துலக முண்டோ. (௧௨௫)

சீர்மக முனக்கே தீண்டிச் செயுமிட மேது நீதான்
யார்மகன் றந்தை தாயர் யாவரென் றுணராய் போலும்
போர்மழ விடையார்க் கன்பு புரிந்தமெய்த் தவத்தா லன்றோ
தார்மக பதியே யாதி தலைவர்க்குந் தலைமை பூண்டாய். (௧௨௬)

நெறியுளார் செல்வம் பெற்றா னெறிநின்று நீடு வாழ்வா
ரறிவிலார் செல்வம் பெற்றா லளவிலா வகந்தைப் பேயும்

பிறிதுகண் டெரியா நோயும் பிடித்திடு மவையை மாற்ற
வறுமையே தண்ட மென்னு மிரண்டுமா மருந்து மாதோ. (கஉஎ)

சிட்டரைப் பரிக்குந் தேவ தேவைநீ யிகழ்த லாலே
துட்டநிக் கிரகஞ் செய்யத் தோன்றலார் தோன்று நிற்ப
ரிட்டமா முனிவர் சொல்லு மெம்மனோர் மொழியுங் கேளாய்
மட்டறு செல்வ மந்தோ மதத்தினு லழிக்கின் றுயால். (கஉஅ)

யாவரே மழுவ லாளை யிகழ்வரே லுடனே யந்தப்
பாவரை யடுதல் வேண்டும் படாதெனிற் பழிமேல் வைத்து
வீவதே வேண்டு மாவி வீந்திடா ரவ்வூர் விட்டுப் .
போவதே வேண்டும் வேண்டார் பொருந்துவர் சிவத்து ரோகம். ()

என்றனள் கவுரி மானத் திவர்ந்தன ளணங்கார் சூழச்
சென்றனள் கயிலை வாழ்வைத் தெண்டனிட் டிறைஞ்சி யோர்பான்
மன்றலங் குழல்பின் சோர மனத்தொரு வேகந் தூண்ட
நின்றனள் கமலம் வேர்ப்ப நீலங்கள் சிவப்ப நாணி. (கஙo)

அணங்கெழுந் தருளும் பான்மை யறிதலா லமரி லேற்ற
கணங்களைத் துரந்திட் டன்னோன் கனன்மகத் தாபி சாரத்
துணங்கெழு தறுகட் பூத மொறுத்ததும் பிறவு நோக்கி
மணங்கெழு கொன்றை யார்முன் சென்றனன் மகதி யாழோன். ()

வேறு.

மமதை யான்மதி யழிந்திடு தக்கன்மா மகளா
முமையை யெண்ணல னுனதரு ளெண்ணல னுமையோ
டமைய வேருநின் கணங்களை யடர்த்தன னமலா
விமைய வர்க்கவி சொரிந்துனை யிகழ்ந்தன னென்றான். (கஙஉ)

முனிவன் வாசகந் திருச்செவி புகுதலு முதல்வன்
புனித வாயிதழ் துடித்தது நெறித்தது புருவ
நனிகொள் வாணுத லிவர்ந்தது சிவந்தது நயன
மனில மங்கியு மொடுங்கின நடுங்கின வகிலம். (கஙஙு)

மார னிங்கிலை விழிக்கடை சிவந்திட வறிதா
மூரல் வந்திட முப்புர களுமிலை முழுதும்

வேரம் வந்திடக் கடையுக மிலையென விமலன்
பார வெங்கத மடக்கியோர் குறிப்பொடும பார்த்தான். (கஅச)

13-தக்கன் வேள்விச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - எசஅ.

---

## பதினான்காவது:—தக்கன் வேள்வியழிந்த சருக்கம்.

பார்த்த திக்கினிற் கொடுமுடி யாயிரம் பரப்பிச்
சூர்த்த திண்புய வரையிரண் டாயிரந் துலக்கிப்
பேர்த்த தாள்களி லண்டமு மகண்டமும் பெயர
வேர்த்தெ ழுந்தனன் வீரரில் வீரரில் வீரன். (க)

அண்ட கோளகை முகடுற நெடுமுடி யனந்தஞ்
சண்ட பானுவோர் வடிவெடுத் தெனவொளி தழைப்பக்
கண்ட கங்கதி ரெறிப்பவோர் கனகமால் வரைமேன்
மூண்ட கங்குளா யிரமுகிழ்த் தெனக்கர முகிழ்த்து. (உ)

காற்று மொன்றுதீ யொன்றலா விரண்டிலை கடப்பக்
கூற்ற மென்பது மொன்றலா விரண்டிலை குமைப்பத்
தோற்ற யன்சிர நான்கலா லைந்திலை துமிப்ப
வேற்றெ ழுந்திசை யெட்டலாற பிறிதிலை பிறப்ப. (௩)

குரைபு றக்கட லொன்றலா விரண்டிலை குடிப்ப
வரைசெய் மேருவு மொன்றலா விரண்டிலை வளைப்ப
வுரைசெ யண்டமேற் பித்திகை யிரண்டிலை யுடைப்பப்
பரசு பாணியா யழைத்தெதன் பணிக்கெனப் பணிந்தான். (ச)

பொன்ப ருப்பத மண்டமெண் டிசைகள்யாம் புரிந்த
மென்ப ரப்பெலா மழிப்பது குறித்திடேல் வீர
வன்ப கத்திலாச் சிறுவிதி பெருமக மழித்து
வன்சி ரத்தையுந் துணித்திவண் வருகென்றான் வரதன். (௫)

என்ன லும்பணிந் தேகின னிறைவிடாற் றோன்றி
யன்னை பத்திர காளியல் கணத்தொடு மணைந்து

டன்னி டைப்பல கோடியர் விரரைத் தந்தான்
பின்னர் முன்னரு மருங்கினு நெருங்குறப் பெயர்ந்தான். (௬)

ஆனை தந்தமீப் போரவையு மடற்புலி கொடுத்த
தானை யும்பெருந் தானையங் கடற்புவி தாங்கு
மேனை மாமருப் பணியுட னெறிகடற் றிடையே
போன மாமறை மீட்டசேற் கண்களும் பொலிய. (௭)

உரவு மார்பிடைச் சிங்கவேற் றரிவையுத் தரிகம்
விரவு மாசுணக் கங்கணம் விரிபணு மணிகள்
கரத லந்தொறுங் கதிர்தரக் கலைமதிக் கணம்போற்
பிரமர் மால்சிர மாலைகள் புயந்தொறும் பிறங்க. (௮)

ஆயி ரம்பணு நெடுமுடி யுடையகச் சசைய
வாயி ரங்குபொற் கழலொலி யுருமொலி மடுப்பச்
சேயி ருந்திரு முகந்தொறுஞ் செறிநுதல் விழியாற்
காய கங்கையும் புறக்கடல் களுங்குடர் கலங்க. (௯)

வடிநெ டுங்குடை கொடிகள்வான் கதிரொளி மறைப்ப
விடைநெ டுங்கொடி நிலவுமே லிருளெலாம் விழுங்க
வடிபெ யர்ந்திடும் விசைதொறுந் திசைதொறு மதிரத்
தொடிநெ டும்பணி கதிர்மதி மண்டலந் துரப்ப. (௧௦)

அடல்செய் திண்புய மெண்டிசா முகவெளி யடைப்ப
வுடைய பொன்முடி யண்டகோ ளகைமுக டுடைப்பப்
புடைகள் கண்டகர் மனநதொறுங் கொடுங்கனல் பரப்பத்
தொடையுன் மார்பமுந் தடித்ததோ ளளும்வலந் துடிப்ப.

கண்க ளிற்பொறி யூழிவெங் கனலையுங் கனற்ற
விண்க ளிப்புறு முடுக்கள்போன் மலர்த்தொடை மிடைய
மண்க ளிற்பில மதிர்தர வரும்பெருஞ் சேனை
யெண்கு லப்பெருங் கிரிகளை யிசைகளா லெடுப்ப. (௧௨)

குன்றி காவுயர் கயிலைநின் றிழிந்தொரு கோடி
துன்னு பூதமொவ் வொன்றுபே ரண்டமுஞ் சுமப்ப

வுன்னி வாங்கிய வுயர்மணிக் கொடிஞ்சியந் தேர்மே
லென்னை யாள்பவ னேறின னுலகமீ டேற. (கங).

வேறு.

கப்பணம் பிண்டி பாலங் கணிச்சிமுட் கரங்கோ டாரி
வைப்பெருஞ் சுரிகை தோட்டி வச்சிரம் வெதினந் தண்டங்
துப்புடை முசலங் கைவாள் சூலமே திகிரி யாதி
வெப்புடைப் படைகார் கால மின்னெனப் பரந்து மின்ன. (கச)

முருடுசல் லரிகள் பேரி முரசுமத் தளித டாரி
கரடிகை திமிலை மொந்தை கைமணி படகம் பம்பை
திரடரு பணவந் தக்கை திண்டிம நவுரி காளம்
வருடகா லத்துத் தோன்று மாமுகி லொலியோ லார்ப்ப. (கரு)

வேறு.

நந்தி பல்கணத் திரளொடு நனிபுறங் காப்ப
வந்து சண்டனும் வலத்துற விடத்துற மணிமான்
முந்து பல்கண நாதரும் பூதரு முரணிச்
சிந்து ரக்குழாந் திரிந்தெனச் சாரிகை திரிய. (கசா)

புலிமு கத்தன கலைமுகத் தனவயப் புலிமா
ஞெலிமு கத்தன கொய்யுளை யுத்தரி முகத்த
கலைமு கத்தன கரடியின் முகத்தன கணங்கண்
மலைமு கத்தினு மறிகடன் முகத்தினும் வாவ. (கஎ)

அடித்த லங்களி வலைகடல் கலக்குவ வணந்தன்
முடித்த லங்களு முளுக்கநின் றுடுவ முகிலோ
டிடிக்கு லங்களைப் பிசைவன மிசைவன விமையோர்
கெடிக்க லங்குறக் ககனமண் டலங்களைக் கிழிப்ப. (கஅ)

மேற்றி சைக்கரி கீட்டிசைக் களிற்றின்மேல் விடுப்பக்
காற்றி னைக்கொடு சுழற்றுவ கனலைவாய் மடுப்ப
யோற்று பாரிடஞ் சூழ்தரத் தேர்மிசைப் போந்தான்
கூற்றி னுக்குமோர் கூற்றெனும் வீரகோ ளரியே. (ககூ)

காளி வஞ்சனி காடுகாள் கடற்படை கஞலக்
கூளி சிந்துவெம் குறள்புலிப் பறழெனக் குழும
வாளி சென்றெனச் சென்றன ரடற்கண நாதர்
தூளி சென்றது சிறுவிதி மகக்குழி தூர்ப்ப. (உ0)

மலைய திர்ந்தன மாதிர மதிர்ந்தன வான
நிலைய திர்ந்தன வீரர்க ளதிர்தலு நெடுநீ
ரலைய திர்ந்தன மகஞ்செயு மயன்மகன் குடுமித்
தலைய திர்ந்திட வதிர்ந்தன வானவர் தகுதி. (உக)

காலை வானுடித் தெரிந்தன கதிர்தனை நோக்கிக்
கோல ஞாளிகள் குரைத்தன நரிக்குழாங் குழுமிச்
சாலை யூடவி கவர்ந்தன தக்கனு தியர்க்கு
மேல வேமன மடித்தன துடித்தன விடமே. (உஉ)

தக்க னுனவன் றன்மகங் கடிந்துதான் புரிவான்
மிக்க னுவது காண்டுமென் றயனின்ற விரிஞ்சன்
முக்க ணாயகன் சேனைகண் டெளம்வெரீஇ முதுவான்
புக்கு நாமினி யுய்ந்தன மெனப்புறம் போனான். (உ௩)

தொகைத்த டங்கடல் வீரன்மாப் படைவருந் துழனித்
தகைக்கு மாலுமா லாகினன் முனிவருஞ் சடைத்தார்
திகைக்கு மன்னரே யாகினர் தேவர்கோன் முதலோ
ரகைத்து மாமக மயருமும்வா னவர்களு மயர்ந்தார். (உச)

ஞால மேழையு மீன்றநா யகியையு மிகழ்ந்து
மால யற்குயர் தேவையு மறந்துளான் மகஞ்செய்
சாலை புக்கதே யவலமென் றமரருஞ் சலித்தார்
மேலி னிச்செயல் யாதென முனிவரும் வெருண்டார். (உரு)

ஆதி நாயகன் புதல்வனை முன்னிடா தமிர்த
மோத வாரியிற் கடைந்துமுன் பட்டபா டுணர்வோ
மாது பாகனை யிகழ்ந்தவன் மகத்திடை மதிபோய்ப்
போதன் மேயினம் புரிந்தனம் பிழையெனப் புகல்வார். (உசு)

துன்று திக்கெலாந் துந்துபி யதிர்தலுந் துளங்கிக்
குன்ற டார்த்தவன் முதலினோர் மாலொடுங் குழுமி
யின்றி னிச்செயல் யாதென வெருவுவார்க் கெதிரே
சென்று தாக்கின பாரிடப் பெரும்படைத் திரள்கள். (உஎ)

ஓல மிட்டெழு கூளிக ளும்பர்மே லுதிரக்
கோல மிட்டெனக் கிழித்தன வாய்வழி குருதி
கால விட்டன வானவர் மகளிர்கா தரிந்து
நால விட்டன புரந்தரா தியர்சபை நாப்பண். (உஅ)

மனமு ருத்தெழு குறட்படை மகப்பெருஞ் சாலை
யனல்கொ ளுத்தின யாகமேற் கொழுங்கன லவித்த
கனக நற்சுவ ரிடித்தன வுடைத்தன கடங்கள்
சினைம லர்த்தருப் பிடுங்கின நடுங்கின திசையே. (உகூ)

சாலை யிற்கனல் கொளுத்துசா ரதர்தமை நெருக்கி
யாலை யிற்படு கரும்பென வலைத்தன ரமரர்
பாலை யிற்பெருங் கிழத்திசென் றமரர்தம் படைமேல்
வேலையிற் கலங் கலக்கிடுஞ் சுறவென மிடைந்தாள். (௩௦)

மிடைந்து முத்தலைப் படையினு லதிர்த்துவாள் விதிர்த்துத்
தடிந்து சென்னியு மூளையுந் தகர்படத் ததியைக்
கடைந்த மத்தெனத் தண்டினு லலைத்தனள் காளி
யுடைந்து விண்ணவ ரோடினர் தரிபடா துலைந்து. (௩க)

அமரர் தூங்கிய கொடிப்படை நெரிதலு மழன்று
நமனு மங்கியு நிருதியும் வருணனு நலங்கூர்
தமனி யப்பெருந் தலைவனும் பாகசா தனனுந்
திமில முற்றெழு பவனனு மெதிர்ந்தனர் செருவில். (௩உ)

வலம ழுப்படை நந்திதே வனுமணி மானுங்
குலவுபல் படைச் சண்டனுஞ் சாரதர் குழுவுங்
கலக விற்கொடு வாள்கொடு கதைகொடு கலந்தார்
புலவு மைக்கடன் மேல்வட வனற்றிரள் புகல்போல். (௩௩)

இந்தி ரன்பொர நந்திபல் கணத்தொடு மெதிர்ந்தான்
முந்து செங்கதிர் தழன்முதன் மூவர்மேற் சண்டன்
வந்தெ திர்ந்தன னெறுழ்வலித் தடம்புய மணிமா
னூர்ந்து மாமதி வருணனு டியருட னுடன்றான். (௩௪)

பம்பை யார்த்தன படலிகை யார்த்தன பணைபோர்க்
கொம்பு தாரைகள் குழறின பிளிறின வேழ
மம்பு வார்சிலை முட்கர மெறிமழு வடல்வாள்
சம்ப மாதிய படைகொடு தாக்கினர் சமர்மேல். (௩௫)

தாள்க ளைப்பெருஞ் சிரங்களைக் கரங்களைத் தடிந்து
தோள்க ளைச்சிறு புறங்களை யுரங்களைத் துமித்து
வாள்க ளிற்பொரு சாரதப் படைகளை மடித்துக்
கோள்க ளைப்பொரு கோளென வானவர் கொதித்தார். (௩௬)

சித்த ரைப்பெருந் தேவரை யியக்கர்விஞ் சையரை
மொய்த்த கின்னரர் கருடர்கிம் புருடரை முரணிக்
கைத்த லத்தினுற் புடைத்துவெங் காலினு லுதைத்துத்
தத்த வானிடத் தெறிந்தனர் பாரிடத் தலைவர். (௩௭)

கருநி றத்தெழு காரெனக் கார்முகந் தாங்கி
யுருமெ னச்சிறு நாணொலி திசைதொறு மொலிப்பத்
தரும ழைப்பெருந் தாரைபோ லமரர்கோன் சரந்தூஉய்
வருக ணப்படை துரந்தெதிர் நந்திமேன் மலைந்தான். (௩௮)

ஒன்று பத்துநா றாயிர மெனப்பொலிந் துலவாத்
துன்று பத்திர மாயிரம் வாசவன் றுரப்ப
நின்று நந்திதன் கணிச்சியா லடுதலு நீறாய்ப்
பொன்றி விட்டன விளக்கில்வீழ் பதங்கமே போல. (௩௯)

நிரைநி றைப்பொரு கணையெலா மவ்வண நிகழ
வரையெனப்பெருங் கதைகொடு மலைந்தனன் மகவான்
புரைத விர்ப்பவன் புழுவினுற் போயது பொடியாய்த்
தரைத னிற்சினத் தெறிந்தமட் கலமெனத் தகர்ந்து. (௪0)

குலிசம் வாசவன் பிடித்தன னிடித்தெதிர் குமுறு
மொலியி னுற்பெருஞ் சாரதர் மலைந்தன ருலைந்தார்
வலியை யேவினி நில்லென வள்ளன்மேல் விடுத்தான்
கலைக ளார்த்தென வார்த்தனர் வானவர் கணமே. (௬௧)

எரிய ரப்பியெண் டிசைகளும் புகைத்துரு மேறுங்
கரிய டப்படர் புரந்தரன் வச்சிரக் கதிர்வாள்
விரிச டைப்பெரு நந்திதன் கணிச்சியின் மிடலா
லெரிக னற்கிடுஞ் சமிதைபோ லடலையா னதுவே. (௬௨)

காயும் வச்சிரப் பொருபடை யெரிதலுங் கனன்று
ஞாயி றந்தடங் கண்ணினு னடற்பெருங் கரியைப்
பாய விட்டெதிர் படர்தலுங் களிற்றைவால் பற்றிச்
சீய மொத்தவன் றிசைதொறுங் கறங்கெனத் திரித்தான். (௬௩)

கறைய டிப்பெருங் களிற்றொடுஞ் சுழற்றலுங் கலங்கிப்
பறவை யின்குயி லுருகொடு வாசவன் பறந்தான்
மறைபு கானுவின் மறைதலு மழுவினன் மலையைச்
சிறை யரிந்தவன் சிறையையு மரிந்தனன் செய்யோன். (௬௪)

இயம னங்கியை நிருதியைப் பரிதியை யிகலி
யயம னங்கியேழ் கரங்களிற் சிலகர மரிந்து
வயம னங்கிபல் லுருத்துவா னவரைவான் மடுத்துச்
சயம னங்கிபோர்த் தாடின னெழுவலிச் சண்டன். (௬௫)

வருணன் வாயுவைத் தனதனைத் துவைப்பொரு மணிமான்
றருண வேந்தரைச் சேனையைத் தானையைத் தடிந்து
கருணை வாழ்கென விருந்தூணும் பருந்தொடு காக
மருண மண்டல மறைத்திடும் பந்தரி லார்த்தான். (௬௬)

அடித்து மார்பிடை யுதைத்துமேற் கதுப்பிடை யறைந்து
மிடித்து மெற்றியுந் துகைத்துமேற் பற்றியு மீர்த்துங்
கடித்தும் விஞ்சையர் விண்ணவர் தானையங் கடலைக்
குடித்து மைப்புயற் குழாமெனத் திரிந்தன கூளி. (௬௭)

சூழு மெண்டிசைக் காவலர் தொலைதலுந் தொலையாப்
பூழி மொய்த்தெழச் சாலையுட் சாரதர் புகுந்தா
ரூழி யண்டங்க ளுடைப்பபோ லவிக்கட முடைத்தா
ராழி மால்பெரு வேள்விகாப் பவனெதி ரடர்ந்தான். (சஅ)

தக்க னெங்குளான் சாலையெங் குளதவன் சாலை
புக்க வானவ ரெங்குளார் போதுமின் புகுமின்
சிக்க யாத்திவட் கொணர்மினென் றமரிடைச் சினவி
முக்க ணுயக னருளலுஞ் சாரதர் மொழிவார். (சகூ)

வெற்றி யானைவிட் டோடின னிந்திரன் மேதிச்
சிற்றி யானைவிட் டேகின னந்தகன் றேவர்
மற்றி யாவரு மிரிந்தனர் வேள்விகா வலனு
மெற்று போர்செயப் புகுந்தனன் முகுந்தனே யென்றார். (ருo)

எந்தை யார்பதம் பணிந்துகண் ணிடந்துசாத் தியதும்
வந்தை யாவருள் புரிகெனத் திகிரிவாங் கியது
முந்தை யாரதிரு வருளினன் மோலிபெற் றதுவுஞ்
சிந்தை யாலுற மறந்தன னேகொலாந் திருமால். (ருக)

யாங்கு ளானவன் யாங்குளா னெனப்புகா வெதிர்ந்து
தாங்கு நின்னுழைத் தக்கனைத் தருதியோ சமர்மே
லூங்கு நின்றெதிர் பொருதியோ வென்னலு முருத்து
வாங்கு வெஞ்சமர்க் கெழுந்தனன் கலுழன்மேன்மாயன். (ருஉ)

ஒறுத்து மால்சிறு நாணொலி யுருமென வொலிப்ப
மறுத்து வில்லிடு முகிலெனச் சரமழை வரதன்
குறித்த தேரின்மேற் காளிமேற் கூளிமேற் குறண்மேற்[தான்.
பொறுத்த நந்திமேற் சண்டன்மேற் கணங்கண்மேற் பொழிந்

மாத வன்கணை கணங்கண்மேற் சொரிதலும் வரதன்
மோது தானவர் தயித்தியர் சேனைபோன் முகுந்தா
பூதர் மாப்படை யெளிதென நினையலை பொருபோர்
பேது றுமெனில் வருகென வொருசிலை பிடித்தான். (ருஈ)

வேறு

பிடித்தன னமலன் சாபம் பிறந்தன பகழிக கூற்றங்
குடித்தன செறுந ராவி குவிந்தன குணபக் குன்றந்
துடித்தன வுடல்கள் சோரி சொரிந்தன கணங்கள் பாட
நடித்தன கவந்த பந்தி நடுங்கின திசைக ளெங்கும். (ருரு)

சேனையைத் துமிக்குஞ் சில்லித் தேர்களைச் சிதைக்குந் தேவர்
தானையைத் தொலைக்குந் தானைத் தலைவரைத் துணிக்குந் தாவி
யானையை யுருட்டும் வாசி யடர்த்தெழு மமலன் பாணம்
வானமுங் கடலுந் திக்கும் வரைகளும வரையா தேகும் (ருசு)

கரங்களைக் கடிந்து நீண்ட கால்களைத் தடிந்தும் வீர
ருரங்களைப் பிளந்துந் தாவி யுயிர்களைக் குடித்து மோதிச்
சிரங்களைத் துணித்து மூளை தெறிபடத் தகர்த்தும் வானோர்
வரங்களைப் புகுந்து சூறை யாடின வரதன் வாளி. (ருஎ)

நீடின விகடர் சேனை நெரிபட வரங்கள் கீறி
யோடின வுலகந் தோறு முலவின வொருவன் வாளி
வீடின ருடலங் கீண்டு மெய்ந்நிணம் பருகி யாவி
தேடின திசைக டோறுந் திரிவன பொருவு மாதோ. (ருஅ)

அமரரா யுடலுண் டார்க ளலகையா யுடலுண் பாராய்ச்
சமருளார் படைகண் மாய்ந்து தம்பிரான் படையாய்ச் சூழக்
குமரியா ணலகைக் கூட்டங் கூளிகள் குரவை யார்ப்பத்
திமிலையார் களத்திற் காகப் பந்தரிற் சீர்வேட் டன்றே. (ருகூ)

வேறு.

நொடிக்கு ளண்டமு மகண்டமும் வெடிபட நொறில்போர்
முடிக்கு மாயினு முடிவிலான் விடுகொடுஞ் சரங்க
ளிடித்தெ ழுந்துல கெவையினு மெண்ணல ராவி
குடித்து மீள்வன பரவுவார்க் கின்னருள் கொடுத்து. (சுO)

வெய்ய வோர்பசு விதிமகன் விதியற்றான் விரவார்
கையு மெய்களும் யூபமாக் களமமர்க் களமா
நெய்க ளேவுவாய் நெருப்புமிழ்ந் தவியுண நிரப்பி
யையன் மாப்படை யனந்தமாம் பசுப்படுத் தன்றே. (சுக)

ஏறு வெஞ்சம ரிமையவர் தொலைதலு மெதிர்போர்
வீறு வெஞ்சிலை மாதவுன் வளைத்துவெங் கணைக
ளாறு நூறொரு தொடைதொடுத் தனனதை யமல
னூறு நூறெனு நூறினு னொருகணை நுதியால். (௯௨)

ஆயி ரம்படை காந்தமால் விடுத்தலு மனகன்
பாயி ரும்படை காந்தமே யொருகணை பணித்தான்
மாயன் வண்பதி னாயிரங் கணையிருண் மலைந்தான்
றாய வுங்கணை யாயிரங் கதிரெனத் துரந்தான். (௯௩)

மாரி யிற்சர மாரிபெய் தனன்மழை வண்ணன்
மூரி விற்சரஞ் சூறையின் விடுத்தவை முருக்கிப்
பாரி டத்தவன் முராரிதேர்ப் பரியினைப் படுத்துத்
தேரி டத்தவன் பாரிடத் தவனெனச் செய்தான். (௯௪)

சேமத் தேர்மிசைக் குதித்தன னெதிர்த்தனன் றிருமால்
வாமத் தானையின் வலம்படு கணைகளான் மலைந்தான்
சோமத் தாரவன் சரமொரு தொடையினு றளவத்
தாமத் தான்விடு கணையொடு சிலையையுந் தடிந்தான். (௯௫)

புதைய வெஞ்சரஞ் சிலையொடு தொலைதலும் புழுங்கி
யிதைய மண்டுறத் தண்டமொன் றெடுத்தரி யிறைமே
லுதைய மால்வரைக் கிறுதிமால் வரையென வுய்த்தான்
கதையி னற்கதை யிலையெனக் கடிந்தனன் கடவுள். (௯௬)

குல்லை மாலினித் திகிரியே படையெனக் குறியா
வெல்லை யண்டமும் புவனமு நடுக்குற வெடுத்து
வல்லை யேயினித் தாங்கென வலியினால் விடுத்தா
னெல்லை வானவ ரார்த்தனர் சாரத ருலைந்தார். (௯௭)

நேமி யம்படை நேமிமால் விடுத்தலு நெரிந்து
பூமி யுந்தர நெருப்பெழக் கொதித்தெழும் போதின்
வீமி சைத்தவுங் காரமொன் றிசைத்தனன் விமலன்
றூமி யுந்தனைப் பக்குவுன் மடிப்பது கடுப்ப. (௯௮)

அலைகள் வற்றுறக் குடித்துமூ வுலகமு மதிர்த்து
மலைக ளைப்பொடித் தெதிர்வரு கிரிமாப் படையை
மிலைத ரப்புயப் பொருப்பின்மே லேற்றனன் வீரன்
றலைவர் போற்றலை மாலையிற் கடைமணி தயங்க. (சுகூ)

சண்ட நேமிபோய் வாள்கொடு குறைகடற் சயனன்
கொண்டன் மின்னொடு வருதல்போல் வருதலுங் குழறி
யண்ட மெண்டிசை வெடிபட வார்த்தனை யயன்
விண்டு வாய்வெரீஇ யுருமொலிக் கரவென வீழ்ந்தான். (எ0)

வீழ்ந்த வன்றனைத் தடிந்தில னருளினால் விடுத்தா
னாழ்ந்த தண்கட லரண்புகுந் தொளித்தன னவனுஞ்
சூழ்ந்த திண்குர லிடித்தலுந் துடித்துவீழ்ந் தனனே
போழ்ந்தி டும்படை தொடுத்திடி லாற்றுமோ புவனம். (எக)

சண்ட னுந்திரு நந்தியுந் தனிமணி மானு
மண்டு மேதிமேற் சண்டனைத் தனதனை மடுத்துக்
கண்ட கால்கனல் வருணனை நிருதியைக் கடைநாட்
கொண்ட லாமென வாய்வழி கறையுகக் குமைத்தார். (எஉ)

ஒருவ னைச்சிவ பரமனைக் கருதலா வுதய
னொருவ னைத்தனி விழிகுறைத் தனர்மதி யுருவா
மொருவ னைத்தலை நிலத்தொடு தேய்த்தய முகைக்கு
மொருவ னைக்கரங் களைந்தனர் நாவையு மொறுத்தார். (எங)

குடர்சு ரிந்தனர் தாள்குறைந் தனர்கரங் குறைந்தார்
முடிசி ஞ்தந்தனர் விண்ணவர் விஞ்சையர் முதலோர்
படிக ளந்தனிற் கிடந்தன ருடல்பதை பதைத்தா
ருடைய நாதனை யிகழ்ந்தவர் யாவரே யுய்வார். (எச)

கணையுங் குந்தமுஞ் சுரிகையுங் கயலினங் கடுப்ப
விணையில் குஞ்சர மிடங்கர்மா வெனவெடுத் தேகித்
திணைநெ டுங்களக் குருதியா றுயர்பிணத் திரளா
மணைக டந்துசேர்க் கலிங்குமுன் சுழிந்துபாய்ந் தனவே. (எரு)

அண்டர் சேனைக டொலைதலு மமர்க்கள மகன்று
மண்டு சாரத ரிருபுடை வலம்புரி முழக்க
விண்ட வேள்வியஞ் சாலையிற் புகுந்தனன் விமலன்
கண்ட பல்வகைக் கணங்கண்மேற் புகுந்தன கணங்கள். (எசு)

தூண்கள் பற்றிய பசுக்களை விடுத்தனர் துரப்பா
ரூண்கள் பற்றிய வமரரை முனிவரை யொறுப்பார்
சேண்கு டத்தவி முனிவர்தஞ் சிரங்கண்மே லுடைப்பார்
வீண்கு வைப்படு திரவியங் கடல்புக வீழ்ப்பார். (எஎ)

தீர்த்த னெம்பிரான் றனையிகழ் வேள்வியைத் தேவர்
பார்த்த கண்களைப் பறிப்பன கேட்டவர் செவியை
யோர்த்த கைகளை யவிநுகர் நாவினை யீர்த்துக்
கூர்த்த வாளினு லரிந்தன திரிந்தன கூளி. (எஅ)

வாணி யிந்திரை துண்டமுஞ் சசிவன முலையுஞ்
சேண ரம்பைய ரதிதிமற் றவர்குமிள் சிமிழு
காணி ரம்பவோ கண்ணெச்சில் கழியவோ நடுவே
காணு முன்பிடித் தரிந்தனள் சொரிந்தனள் காளி. (எகூ)

திக்க னைத்தையும் யாகதண் டத்தமர் செலுத்தி
யிக்க னைத்தவர் பணிசெய முனிவரேத் தெடுப்ப
முக்க ணைநதழன் முருக்கெனப் பூத்துமுன் னிருந்த
தக்க னைச்சிகை பிடித்துவாள் பிடித்தனன் றலைவன். (அ0)

மக்க டாரமு முலைகண்மூக் கிழந்தமை மதியாய்
திக்க டாமல்விட் டோடிய தேவரைத் திருப்பாய்
மிக்க டாவினை விடிந்ததோ முடிந்ததோ வேள்வி
யக்க டாவுனக் கெளியனோ மழுப்படை யமலன். (அக)

வேறு.

இற்பரா பரைமகளாச் சிவபெருமான் மருகாக
முற்பராய்த் தவம்புரிந்த முறைமையா லுலகாண்டாய்
தற்பரா பரனைமறுத் திகழ்ந்துதனித் தாய்பாவி
யற்பரா னவர்முடிமேற் றங்குமோ வபிடேகம். (அஉ)

உன்னையின் றெடுத்தவனே யுயர்மவுலி தேடவவன்
றன்னையின் றெடுத்தவனே தாட்கமலந் தேடநின்ற
வென்னையின் றெடுத்தபிரான் றன்னைமதத் தாலிகழ்ந்து
சொன்னவாய் சிரததினொடுந் துணிக்கின்றே னெனத்துணித்தான்.()

எச்சகா யத்தவரு மிடைந்துமாய்ந் தனர்போத
னெச்சனுஞ் சிறுவிதிபு மிமைப்பொழுதில் வீடினு
னெசசநா மல்லதிலை யெனவிரலை யாலெபூந்த
வெச்சனு மவன்றலையும் வாளினு லறவெறிந்தான். (அச)

மந்திரத்தின் முறையறியார் பூசைபோன் மகவேள்வி
யிந்திரற்கு மிமையோர்க்கு முடியாம விருந்ததாற்
சிந்திரத்த மொடுதக்கன் சிரமறுத்தா குதியுரிந்து
தந்திரத்தி னொடுமுடித்தா னொருகணத்திற் சகநாதன். (அரு)

வேறு.

அமர ராகவே மகத்திடை யவியுணப் புகுந்தா
ரமர ராகவே களத்திடை யவியுண்டா ரதனுற்
றமர வாரிதி விடமுண்ட தம்பிராற் பரவுந்
தமர லாதவர் நினைததவா முடிப்பரோ சகமேல். (அசு)

உகம ழிப்பவ னனையபோர் வீரனென் னலரைக்
ககம ழிததிடப் பொருதுபோய்க் கணத்தொடு கயிலை
யிகன்ம பூப்படை யெம்பிராற் றொழுதவவ னீந்தான்
மகம ழித்ததோர் நாமமு மழிவிலா வரமும். (அஎ)

நண்ணு வீரனு நந்திபல் கணமுநா ரதனுங்
கண்ண னும்புடை பரவவீற் றிருந்தருள் கயிலைப்
பண்ண வன்றனைப் பணிந்தன னெழுந்தனள் பகர்வா
ளண்ணல் பாகமு மாகமும் பிரிகலா வணங்கு. (அஅ)

வேறு.

ஏவரும் பரவு நின்னை யெண்ணலா திருந்த தக்கன்
பாவையென் றென்னைக் கூறும் பரிபவ மொழிப்பா யென்று
தேவிநின் றுரைப்ப நாதன் றிருவுள மகிழ்ந்து நம்பா
லாவல்சே ரிமவான் செல்வி யாகென வருளிற் போந்தாள். (அகூ)

இறந்தநான் முகத்தோன் போற்றிச் செகங்களின் குறைபா டோதி
பிறந்தவ ருயிரை மீட்பா னெம்பிரா னருள்பெற் றேகி
யறுங்கைகால் சிரங்க ளாதி யவயவம் பொருத்து மேல்வை
யுறங்கினர் விழித்தா ரென்ன வெழுந்தன ரும்ப ரெல்லாம். (கூ0)

அத்தலை யூபந் தோறு மவரவர் முடிபெற் றுய்ந்தார்
நெய்த்தலை யூபத் தூடு நிணத்தலை பறிபோய்த் தக்கன்
மைத்தலை யூப மேவி வானவர் தலைமை தீர்ந்தான்
மெய்த்தலை விதியே வந்து விலக்கினும் வினைவி டாதால். (கூக)

யாகத்தின் வினையாய்த் தக்க னெடுத்தகல் வினையே யென்றுஞ்
சோகத்தி வினையாய் வந்து சூழ்ந்திடத் துயரி லாழ்ந்தான்
மேகப்பூங் குழலோர் பாக னருளன்றி வினைக ளாலே
யாகத்தி னுயிர்கட் கெல்லாம் பயனறிந் தாட்டற் பாற்றே. (கூஉ)

சிவநெறி யோர்ந்து மோராச் சிறுவிதி செயலின் மாய்வுங்
குவவுறு திணிதோள் வீரன் கொற்றமு முரைத்தாம் பின்னர்த்
தவநெறி யில்லான் வேள்விச் சாலைபுக் குழன்ற வாறோ
ரவநெறி யடைந்து பாவ மடைந்தமை தொடர்ந்து சொல்வாம். (கூரு)

14-வது தக்கன் வேள்வியழிந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—அசக.

---

## பதினைந்தாவது:—தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம்.

மோலியிற் பிறைவைத் தாரை முறையிலா திகழ்ந்த தக்கன்
சாலையிற் புகுந்து வேள்வி சமைத்ததீ வினையி னாலே
மேலையி லிமையோர் தம்மை வெண்மதி விரவி லாத
மாலையி னிருள்போல் வந்து வளைந்தது சிவத்து ரோகம். (க)

தளர்மதி முடித்தார் நேயந் தவிர்தலா லமரர் பாவக்
களர்நிலத் திடைக்கா லாழ்ந்த கயக்குழா மென்னத் தாழ்ந்தார்
கிளர்சமத் தஞ்சி யோடிக் கீழ்ப்படு மவுண ராங்கு
வளர்கரிக் கணம்போற் றூக்கி வளமெலாங் கவர்ந்தார் மன்றோ. (உ)

பல்லவ முயிர்க்கும் பாரி சாதமும் பசும்பொன் னுடுஞ்
செல்வமுஞ் சுரபி சிந்தா மணிகளுந் தெய்வ மாதர்
நல்லெழிற் புணர்வு நீங்கி நல்குர வடைந்தார் கல்லாப்
புல்லர்தம் மருங்கிற சேர்ந்த புலவர்போற் புலவ ரெல்லாம். (௩)

கவிகையு மரசும் வாழ்வுங் கடவுள்வா ரணமுஞ் செம்பொற்
சிவிகையு மிழந்து காலா லுழந்தனன் றேவர் வேந்த
னவியமு மறியு மேந்து நம்பனை நம்பார்க் கென்றும்
புவிதனிற பிலத்தில் வானப் பரப்பினிற் புகல்வே றுண்டோ. (௪)

இந்திர பதத்தை நீத்த விந்திரன் முதலோ ரெல்லா
மந்திரக் கிழவர் சூழ மதிநெறி முறையிற் சூழ்ந்து
தந்திரக் கலைக ளுவான் சதுமுகத் தவனே யென்று
சுந்தரப் பதுமத் தண்ண லுன்னகர் நோக்கிச் சென்றார். (௫)

வேறு.

பரவை யார்த்து தணவுபோய் வாழ்வுபோய்ப் பனிநா
ளிரவு தாமரைக் காடுபோன் முகம்புலர்ந் திமையோர்
குரவ னுன்முகன் கோயிலின் றிருக்கடை குறுகிப்
புரவி பூண்டதே ரிரவிமுன் கமலமே போன்றார். (௬)

நாவி ரண்டுகட் கமலமு மதிமுக நான்கு
மேவி ரண்டிரண் டருமறை விரிக்குநாத் தடமும்
பாவி ரண்டினு நாலிரு தடம்புயப் பணைப்பு
நாவி ரண்டையு மகம்புறந் தரித்தநோன் மார்பும். (௭)

மீதி லங்குநான் மகுடகோ டிகள்வெயில் விரிப்புங்
காதி லங்கிய குண்டல மொளிவிடு கதிர்ப்பும்
போதி லங்கிய கரங்களுங் கமண்டலப் பொலிவுந்
தாதி லங்கிய தாமரை தாமமுந் தயங்க. (௮)

நாவின் மாடத்து நறைவிரி நளினபீ டத்துத்
தேவி பாரதி மகிழ்வொடு சிறந்துவீற் றிருப்ப
வாவி பேதக மனந்தகோ டிகளுமங் குரிப்பத்
தாவில் வேதமு டங்கமுங் கலைகளுந் தளிர்ப்ப. (௯)

மடன்மு முக்கவிழ் வனருக மண்டப நாப்பட்
சுடர்வி ளக்கென வுறைதரு சுருதிவா னவனைக்
கடல்கொ ழித்தன கருணையங் கடவுளைக் கண்டா
ரிடர்த விர்த்தன மினியென விறைஞ்சின ரிமையோர். (க0)

வான மாதியா லுயிர்க்குடல் கரணங்கள் வயக்கி
யேன போகமும் புவனமும் வினைவழி யிசைத்து
மேன காலமுங் கருமமு நடைபெற விதிக்குந்
தான பங்கயாச சிரமனே பரமனே சரணம். (கக)

வான நாதனே மண்பொதுத் தந்தையே மறைதேர்
கான வேதியர் கலைகனை கருதுவார் தனியே
ஞான பாரதி நண்பனே நாற்பெருங் கோணிற்
பானு வாயொளிர் பகவனே சரணெனப் பணிந்தார். (கஉ)

எந்தை யேயென விறைஞ்சுவார்க் கெதிர்முகங் கொடுத்து
நொந்த வானவ ரெழுமெனத் திசைமுக னோக்கி
வந்த காரணம் யாதெனப் பவளவாய் மலர்ந்தா
னந்த ராதிபன் பரவிவாய் புதைத்துநின் றறைவான். (கங)

சேம மாநிதித் திறைகொண்டு வந்தெமைப் பரவு
நாம வாளுடைத் தானவர்க் குடைதந்து நலிந்தோங்
காம தேனுவுங் கற்பகக் கானமு மிழந்தோஞ்
சோம சூரியர் வழங்கிடாத் திசைதொறுஞ் சுழன்றோம். (கச)

வான மாநதி வைகறை யாடலு மறந்தோந்
தான பானமுஞ் சந்தியு நியதியுந் தவிர்ந்தோம்
மீன மார்தனத் தரம்பையர் முயக்கமும் பிரிந்தோங்
கான மாமறை யுறுதிபோய் வறிதுநாட் கழித்தோம். (கரு)

வசைக்க லம்புனை யவுணராஞ் சுறவின மடுப்ப
விசைக்க லங்கவிழ் வணிகர்போ விடர்க்கடல் வீழ்ந்தோ
நசைக்க லந்தன நறுஞ்சுவைக் கலந்தன நல்யா
ழிசைக்க லந்தன மெமக்கிவை புகுந்தன வென்றார். (கசு)

மிக்க நான்முகன் விளம்புவா னென்மகம் விலக்கித்
தக்க னனவ னல்லுதற் கோமகஞ் சமைத்தா
னுக்க பேரவி யுருத்திர பாகமு மொழித்தான்
முக்க ணாயகன் றன்னையு மிகழ்ந்தனன் முடிவால். (கஎ)

தகவின் மக்களை யழைத்தன னழைத்திலன் சதியை
யகில முற்றவு மீன்றருள் அன்னையென் றுணரான்
வகையு ணர்த்தவு முணர்ந்திலன் மதத்தினு லழிந்தான்
புகலி னுங்கெடு மதிகள்கண் டோற்றுமோ புலவீர். (கஅ)

அறிவி லானவ னப்படி யாருக வானும்
பொறியி லீருங்கள் புத்தியும் வெறுவிதாய்ப் போமோ
வெறிம லர்ப்படை யிறைவனை யாவரோ விகழ்ந்த
நெறியில் யாவரு நிற்பரோ நீவிரே நின்றீர். (ககூ)

ஆதி யார்விட முண்டதா லமரரா யமர்ந்தீர்
காதி முப்புரம் வென்றதாற் கனகநாட் டுறைந்தீர்
மாது பாகர்செய் நன்றியை மறத்தலின் மகத்தா
லோது நல்வினை தீவினை யானதா லுமக்கே. (உ0)

நந்தி நாயகன் முகுந்தனைப் படைப்பானா னவன்ற
னுந்தி மாமலர் மிசையவ னருளினு லுதித்தே
னந்த நான்முத லீன்றுகாத் திருந்தன மதனு
லெந்தை யாரலா லெமக்குமோர் களைகண்வே றுண்டோ. (உக)

அணைந்த சாமியும் யானுமேத் தமலனை யரவம்
புனைந்த வேணியெம் புனிதனைப் பொருளெனப் போற்றீர்
மனங்கொண் மாமறை யோதியுஞ் சுவர்க்கமேல் வதிந்துங்
கனங்கொண் மெய்ந்நெறி கடந்தனிர் நவையுறக் கடவீர். (உஉ)

பாவ மேதரும் பழிதரும் பகைவராற் படுக்குந்
தாவ சோபமே விளைத்திடுங் குலத்தையுந் தாழ்க்கு
மாவ தாம்பொரு ளழித்திடு நரகிடை யழுத்துந்
தேவ ராகிலும் விடுத்திடு மோசிவத் துரோகம். (உங)

கறையணிந் திடுங் கண்டனைப் பழித்திடுங் கயவோ
ரிறைசி வாகமஞ் சிவபுரா ணங்களை யிகழ்வோர்
முறைமை யன்பரை யன்பர்வே டங்களை முனிவோர்
பிறைசெய் கும்பியா கக்கொடு நரகிடை வீழ்வார். (உச)

எழுந்தி டாநர கழுந்திபு மியமதண் டத்தின்
கழுந்தி னலடி யுண்டுமே கற்பங்கள் கழிவார்
செழும்பு னற்சடை யெம்பிரான் சிவநெறி யகன்று
பழங்க ணெய்திடப் பரமதம் புகுந்தபா தகரே. (உரு)

ஆகை யானுமைச் சிவத்துரோ கம்பிடித் தலைப்ப
வாகை தானவர்க் கீந்துமா சுணப்படங் கிழிகருந்
தோகை கோம்பியாற் சுழல்வதொத் திரது தொலைந்து
போக யான்முத லெந்தையா லியற்றவும் போமோ. (உசா)

வேறு.

வேதநெறிக் கடங்காத பாவமியான் போக்குவனென் விதியிற் றீராப், பேதமுறு பாவமெலா மாலொழிப்ப னவனாலும் பிரியாப் பாவந், தாதவிழ்கொன் றைச்சடையான் போக்குவிப்ப னவனரு ளாற் றவிராப் பாவஞ், சீதரனார் தம்மாலு மெம்மாலு மெவராலுந் தீர்க்கொ ணாதால். (உஎ)

ஓராத கோகத்தி பிரமகத்தி திரிகத்தி யொன்றொன் றேற்றஞ்
சாராத குருத்துரோ கஞ்சனத்து ரோகஞ்சா மித்து ரோக
நேராக வொன்றிலொன்று நூறுமடங் கதிகமிவை நீங்கு மேனுந்
தீராது தீராது சிவநெறியிற் பிழைத்தவர்தஞ் சிவத்து ரோகம்.

என்றுதிசை முகனுரைத்து நின்றுமுறை யிடுவாேனார்க் கிரங்கி பின்னுந், தொன்றுமேச ரகிலாண்டத் துள்ளசிவா லயங்களெலாந் தொழுவீ ராகி, லன்றுபோ மும்துவினை யல்லதெனில் வகைநான்குண் டவைக ளன்கி, லொன்றுசெயத் திருமெனத் தொகையுணர்த்தி வகைவினவ வுணர்த்து கின்றான். (உகூ)

வேறு.

பூதலமே லோசனையோ ரிலக்கம் பானுப் புதுமதியோ ரிலக்க மூடு மேலொன் ருகு, மேதைபுகர் செவ்வாய்பொன் சவுரி தானு

மேன்மேலே யிவ்விரண்டா விளங்கித் தோன்று, மாதிமுனி வோரெழுவர் தான மேலொன் றப்புறமோ ரிலக்கமென்பர் துருவ தான மேதினியி லிருந்துபுவ லோகங் காறும் விலக்கரிய தொகையுமைவந் திலக்க மாமால். (௩௦)

சுவலோக மிலக்கமெண்பத் தைந்து மேலே சொல்லரிய மகலோக மிரண்டு கோடி, நவமேவு சனலோக மிருநாற் கோடி நண்ணுதவ லோகமும்பன் னிரண்டு கோடி, யிவைமேற்சத் தியலோக மீரெண் கோடி யெம்பதமுக் கோடியரி பதமுக் கோடி, சிவலோக நாற்கோடி பித்தி கோடி செப்புதொகை யுரைக்கிலைம்பான் கோடி பார்மேல். ()

பூதலத்தின் கனமிலக்க மெண்பா னுகும் புயங்கமெட்டுஞ் சேடனுமெண் களிறுங் கீழாய், மாதலத்தைத் தாங்கிநிற்கு மதன்கீழ்க் கோடி மற்றிருபா னிலக்கமா டகர்தங் கோயின், மேதகுபன் னகராக்க ரவுணர் சூழ்வோர் விடுத்ததல முதலேழு மேழொன் பானுஞ் சோதிபெறு கூர்மாண்டர் பதங்கீ ழொன்பான் றெண்ணூற்றெண் பானிலக்க மதன்கீழ்க் கும்பி. (௩௨)

இருணிலமு மெழுநான்கு கோடி யாகு மிலக்கமிரு பத்தொன்பான் கீழ தாக, வொருகமட மிருக்குமிட மொருகோ டிக்கீ ழுயங்கு நெடும் புகைப்படல மைந்து கோடி, மருவுறுமக கினிசுசுவலை பதின்கோ டிக்கீழ் வயங்குகா லாக்கினியின் வரதர் கோயில், பெருகுபித்தி கோடியதன் கனமோர் கோடி பெரும்புவிக்கீ ழுலகமைம்பான் கோடி யாமால். (௩௩)

வேறு.

கோவலைய நடுமுதலா நாவலொடு தேக்கு குசைகவுஞ்ச மிலவிறலி புட்கரமே யாகப், பாவலவர் புகழ்தீவு மேழாகு முப்பு பாறயிர்நெய் கரும்புமது நீர்க்கடலே ழாகு, நாவலந்தீ வோரிலக்க மிரட்டிமேன் மேலு நரலையுப்பு முதலேழு மன்னவே யாகு, மேவுதிரைக் கடலேழுந் தீபமோ ரேழு மிருகோடி யைம்பதினுன் கிலக்கம்யோசனையே. (௩௪)

சூழ்கனக பூமிபதின் கோடி யப்பாற் சுடர்த்திகிரி வரையதனைச் சூழா நிற்கும், வாழ்வரையின் பெருங்கனமோ ரயுத மாகும் வலைந்

தபுறக் கடல்கோடி யிருபத்தே ழிலக்கம், பாழிருண்ட பூமிமுப்பா னைந்து கோடி பத்தொன்பா னிலக்கமுட னயுத நான்கா, வாழ்கன பித் திகைகோடி யாக மேரு வரைக்குகிலந் திசைகடோ றைம்பான் கோடி. (௩௫)

வாசனையைம் பதுகோடி திசைதோ றுண மகிதலஞ்சூழ்ந் தால யங்கள் வணங்கு வீரோ, யோசனையைம் பதுகோடி வான்மே லேறி யுயர்விடையார் பதம்பரவித தீர்க்கின் றீரோ, தேசனையைம் பது கோடி யிறங்கிக் கீழ்போய்ச் செறிந்தபா தலங்கடந்து காண்கின் றீரோ, வீசனையே நினைந்தொருபாற் றவஞ்செய் வீரோ வினைநா ன்கி லுமதுகருத் தியம்பீ ரென்றான். (௩௬)

மேலான சிவபதத்தி னுயர்ச்சி தானு மேதினியெண் டிசைபரா ந்த விரிவுங் கீழ்மைப், பாலான பாதலமு நரகின் வீறும் படர்புகை யுங் கனற்சிகையும் பரிந்து தாவிக், காலாங்கி யுருத்திரரைக் காணு மாறுங் கருத்தினுன்னி நடுநடுங்கிக் கரங்கள் கூப்பி, நாலான திசை முகத்துக் கமலத் தேவை நனிதொழுது புத்தேளிர் நவில்வ தானார். ()

முன்னமே வீரன்வலிக் குடைந்து போனோ முழுதுமே சிவப தத்து முயன்று சென்று, வின்னமே சிவகணத்தார் பொறுப்ப ரேனு மிகலும்வயி ரவர்சூலத் திடைய மாட்டேம், பின்னர்மேற் புவனிவ லம் புரித லாற்றேம் பிலத்திறங்கி யுருத்திரரைக் காண மாட்டேந், தன்னமே தனியிருந்து சிவபி ரானைத் தவம்புரிந்து காணும்வகை சாற்று மென்றார். (௩௮)

வேறு.

வானவ ருரைப்பச் செந்தா மரைமலர்த் தவிசின் மேவு
ஞானநான் முகத்தோன் சொல்வா னற்றவம் புரியுந் தானம்
பேனமாப் புணரி சூழ்ந்த பெரியபூ தலமே யாகு
மானதோர் திகிரி வெற்பி னகமலாற் புறமு மாகா. (௩௯)

மற்றையேழ் தீவின் வேந்தர் மனுமகன் விரத னென்பான்
பெற்றசீ ரங்கி தீரன் பெரியமே தாதி புட்டு
வுற்றசீர்ச் சோதிட் டென்பா னுயர்தரு துதிமான் மற்று
முற்றமில் சிறப்பின் மிக்க வார்வலிச் சவனன் மன்னோ. (௪௦)

அவரினுஞ் சம்புத் தீவி லங்கிதி ரனுக்கு மைந்தர்
புவிபுகழ் பார தன்கிம் புருடனே யரியே கேது
தவறில்பத் திராச்சு வத்தன் றனியிளா விரதன் மேலு
நவிலிர மியனே பொன்னன் குருவிவர் நவகண் டந்தோர். ()

வீறுசேர் சம்புத் தீப நடுவுற விளங்கு மேரு
கூறுநாற் றிசையுஞ் சூழக் குலவுநாற் குன்ற மப்பான்
மாறிலாத் தென்பான் மூன்று வடதிசை மூன்று மேல்பா
லூறிலா வொன்று கீழ்பா லொன்றுசூழ் குன்ற மெட்டாம் ()

ஈரெண்ணா யிரமே கீழும் பக்கமு மெண்பா னன்கு
மேருமே லுயரம் பாதி மிக்குள வரைகட் காகுஞ் [றுஞ்
சேருமெண் கிரிச்சா ரெட்டுஞ் செம்பொன்மால் வரையின் சுற்
சாருமே கண்ட மொன்பா னவ்வகை சாற்றக் கேண்மின்.(சங.)

வடகடல் சிருங்க நாப்பண் வளர்குரு வருட மிப்பா
லிடவிய சுவேதங் காறு மிரமிய வருட மேனைத்
தடவரை நீலங் காறுந தனியிர ணியமாங் கண்டஞ்
சுடர்வரை மேருச சூழ்ந்த திளாவிர தப்பேர் சொல்லும் (சச)

கந்தமா தனமே மேல்பாற் கடலிடைக் கேது மாலம்
வந்தபத் திரியே கீழ்பால் வாரிமா லியவான் மட்டு
மந்தமா நிடதத தென்பா லரிகண்ட மேம கூடத்
துந்திய தென்பா லாகு முயர்ந்தகிம் புருட கண்டம். (சரு)

பனிவரை சேது நாப்பட் பாரத கண்ட மாகு
நனிதரு மிவையொன் பானி னண்ணுபத் திரியே கேது
வினியமுப் பதிற்று நாலா யிரமென்ப ரேனை யாறு
மனையயோ சனைக ளொன்பா னாயிர நாப்பண் மற்றே. (சசா)

தருமமே தரும பாவந் தகவிலாப் பாவ மூன்றுங்
கருமபூ மியிற்செய் வோர்கள் கதிதரு சுவர்க்கம் பூமி
யிருணில மூன்றும் போக மெய்துவ ரிவைகண் மூன்றிற்
பொருவருஞ் சுவர்க்க சேடம் பொசிப்பது போக பூமி. (சஎ

ஓதிய பரத கண்ட முழவுவா ணிபங்கள் வித்தை
காதல்சேர் வரைவு சிற்பங் கருமத்தாற் கரும பூமி
மீதுறை பவர்க்கு நெல்லூண் மேனியு முழநா லெட்டுக்
கோதறு பருவ நாளா றுகந்தொறுங் குறையா நிற்கும். (௪௮)

கருமசே டங்க ளுண்பார் கதிகண்மேல் விழைவார்க் கெல்லாந்
தருமமுந் தவமுஞ் செய்யத் தக்கது கரும பூமி
புரிதவ மநேகங் காலம் போகபூ மியிற்செய் வார்க்கு
வருபலன் கரும பூமி வளமொரு தினத்தே நல்கும். (௪௯)

வேறு.

ஒண்டொடியோர் பாகனிட முறைப்பி னண்டத் துச்சியுருத் திரர்கோயி லதன்கீ ழாகு, மண்டர்பிரான் சிவலோக மண்ட மூலத் தமர்வதுகா லாங்கியுருத் திரர்தங் கோயின், மண்டுமா டகர்கோயி லதன்மே லாக மகிதலத்தி னிருகோடி கீழா மன்னும், விண்டநடுக் குடதிசையின் கீழ்பா லாகு மேருமே கலைமூன்றில் விமலன் கோயில். ()

வேறு.

பொன்மலையுத் தரத்திலண்டச் சுவரணவும் வடகயிலைப் பொருப்புங் கோடும், பன்மதிலு மளப்பரிய வுருத்திரர்நா ராயணரும் யதுமத் தோருங், கொன்மலி வேற் கந்தர்கண பதிகள்சா ரதர்சாத்தர் குழுவி னர்ப்பு, நின்மலச தாசிவமுந் தெய்வதக்கு ழாமுமெம்மா னிகழ்த்தொ ணாதால். (௫௧)

பொன்னிமய மால்வரைக்கு வடமேல்பான் மந்தரத்தின் புடைசேர் தென்பாற், கன்னிநெடுங் கயிலைவரை கற்பகோ டிகள்கடந்து ககனந் தாவிச், சென்னிமதி யாறணிந்த தேவனே யன்றிமற்றத் தேவ ரெல்லா, நன்னிலைவிட் டிறப்பதுவும் பிறப்பதுவுங் கண்டுகண்டு நகையா நிற்கும். (௫௨)

வேறு.

துங்கவட கயிலாய முதலா வைந்து துளுவொன்று தொண்டைவள நாட்டெண் ணான்கு, தங்குநடு நாட்டிருபத் திரண்டு பொன்னித் தலநூற்றுத் தொண்ணூறு மலைநாட் டொன்று, கொங்கேழு சிங்களத்தி லிரண்டுவைகை கொழிதமிழ்நாட் டீரேழு முதலாஞ் சூலச், செங்கையார் தலமிருநூற் றெழுபா னென்கிற் றெக்கிணபாற் கயிலாயந் திருக்குற் றாலம். (௫௩)

அம்புவியி வித்தகையா லுரைத்த வெல்லா மாதிதலம் பிறதல ங்க ளனந்த மாகுஞ், சம்புநிலப் பரதகண்ட மடநல் லாட்குத் தாணீட்டு வடதிசைதென் றிசையே சென்னி, நம்புசீர்ப் பருப்பதங்கே தாரங் கொங்கை நளினவயற் றமிழ்நாடு வதன மாகக், கொம்பலர் சூழ் செண்பகா ரணியஞ் சூழ்ந்த குற்றால மபிடேகத் தான மாமால்.

புவனநெடும் பரப்பெலாந் திணையைந் தாகப் பொன்னிமய கிரிவடபா லொன்று போகக், கவனவரை யிமயமுதற் கன்னி காறுங் கண்டபெரு நிலமுழுதுங் கழனி யாகுஞ், சிவனுறைகே தாரமுதற் கருப்பந் தோட்டஞ் சென்னிவளை நீர்நாடு கன்னற் சாறு, குவளைவயற் றமிழ்நாடு வடித்த பாகு குற்றாலஞ் சருககரைவட் டாகு மன்றே.

வேறு.

தற்பரையைம் பெருமாட்டி யகிலாண்ட சிற்றிலெனத் தனி நின் றாடு, முற்பதியா யுயர்தாணு மாலயப்பூந் தொட்டிலுக்கோர் மூல வீடாய்க், கற்பமெனுங் கடல்கடத்துந் தோணியாய்க் குணங் குறிகள் கடந்த ஞான, சிற்பரைவா ழிடமான பரமரக சியத்தானந் திருக்குற் றாலம். (௫௬)

சிறக்குமிடஞ் சிற்பரைக்கும் பரமனுக்கு மூவருக்குந் தேவர் யார்க்கும், பிறக்குமிடங் கவுரியறம் வளர்க்குமிடம் பிறந்தோர்கள் பிறவி பிணிக்கை, மறக்குமிடம் வடவருவி யெனுங்காம தேனுவளர் பால்க ளுன்குங், கறக்குமிடம் பரகதியே காட்டுமிடந் திரிகூடக் கடவுட் டானம். (௫௭)

ஆண்டுபதி னாயிரமோர் புண்ணியமாத் தலந்தரும்பே றனைத்துங் காசி, கூண்டுதவு மோராண்டு லயனமொன்றிற் கேதாரங் கொடுக்குங் காஞ்சி, பூண்டுதவு மிருமதியி லொருமதியிற் பெரும்பற்றப் புலியூர் நல்குஞ், சேண்டருமெய்ப் பயன்களெலா மொருநாளிற் கொடுத்தருளுந் திருக்குற் றாலம். (௫௮)

வேறு.

தாய்பசிக்கத் தந்தைபசித் திருக்கக் காண்போர் தங்கள்சுற்ற மனங்கொதிக்கத் தாங்கள் வாழ்வோர், சேய்பசிக்கத் துடிக்கவிருந் துண்போர் தாரஞ் சிறையிருத்திப் பரதாரம் விரும்பிச் செல்வோர்

வாய்பதைத்துப் பிறர்குடிக்குத் தீங்கு சொல்வோர் மன்றிருந்து வழக்கோரஞ் சொல்வோர் பொல்லா, நாய்வளர்த்துக் கொலைபுரிவோர் பாவ மெல்லா நன்னகரே தவிர்க்குமெனு மிருக்கு வேதம். (ருகூ)

அடுத்தார்க்கு நன்குசெய்யா ரிடுக்கண் செய்வா ரந்தணரை யுயிர்செகுத்தா ராவைக் கொன்றார், கொடுப்பாரை யருகிருந்து தடுப்பார் கற்பின் குலமாதர் வரம்பழித்தார் குருவைப் போற்றார், கெடுப்பார்க்குத் துணையாவா ரறஞ்செய் வார்க்குக் கேடுசெய்வார் பாவ மெலாங் கிரிக்கோ தண்ட, மெடுப்பார்க்கு வளம்பதியாந் திருக்குற்றால மிமைப்பொழுதி லொழிக்குமெனு மிரண்டாம் வேதம். (சூ0)

அன்னமிட்டார் தமக்கிரண்டு நினைக்கின் றாரு மடைக்கலத்தை வயிறெரியத் தொடுகின் றாரும், பின்னமிட்டுக் கிளைக்கூட்டம் பிரிக்கின் றாரும் பெரியாரைப் புறம்பழித்துப் பேசு வாருங், கனனமிட்டுக் களவாடிக் கள்ளுண் பாருங் காமத்தா லழிவாரு மெய்து பாவ முன்னவர்க்கு முன்னவர்குற் றால மென்று மொழிந்தாலுந் தீருமெனு மூன்றாம் வேதம். (சூக)

உலகிடத்துத் தொலையாத பாவ மெல்லா முயர்தருபுண் ணிய தலத்துத் தீர வேண்டும், பலபலபுண் ணியதலத்துந் தீராப் பாவம் பரமனுறை சிவதலங்கள் பரவத் தீருந், திலகமெனுஞ் சிவதலத்துச் சென்றார் பாவந் தீருமே தீராது சிவத்து ரோக, நலமலிசீர்த் திரிகூடத் திருக்குற் றால நன்னகரே தீர்க்குமெனு நான்காம் வேதம். ()

வேறு.

இன்னபடி மறைநாலுந் துறைதோறு முழங்குதலா லிமையோர் நீவிர், நன்னகர்ச்சென் பகவனத்துச் சென்றுதவம் புரிந்து மது நவைக டீர்ந்து, சின்னமதி புனைவேணிச் சிவபிரான் றிருவருளாற் றெய்வக் காவும், பொன்னுலகு மரம்பையர்பாற் புதுநலமும் பெற்றுமுற்றும் பொலிவீ ரென்றான். (சூஉ)

விண்ணிலுறை சதுர்முகத்து வேதியனீ துரைத்தருள விடைகொண் டேகிக், கண்ணியவா றுரைத்ததனாற் களிகூர்ந்து களிச்சுரும்பின் கணம்போல் வானோர், மண்ணிமணி யலைகொழிக்குங் கடல்.

வாவிக் குவலையமா மலர்ந்த பூமேற், புண்ணியமா மதுவூறி யுமட்டெடுகுரு திரிகூடப் பொருட்டிற் சேர்ந்தார். (கஅ)

பிரமனைக்கண் டுறுதிபெறும் பேறுரைத்தார் திரிகூடப் பிறங்கன் மேலாச், சிரமமிசைத் தவம்புரிந்து சிவத்துரோ கந்தவிர்ந்து திங்கள் சூடும், பரமனைசசெண் பகவனத்திற் பண்ணவனைக் கண்டுபதம் பரவி வானோர், புரமனைத்துங் குடியேறக் கரையேறு மகிமையினைப் புகறல் செய்வாம். (கரு)

15. தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—க௦௬.

---

## பதினாறாவது.—தேவர்கள்சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம்.

வற்றாத தேனருவி வானருவி மான
நற்றால மேவுதுறை யாடிநனி வானோர்
குற்றால மேயதிரி கூடமிசை வந்தார்
பொற்றால மேல்வினைவு புந்தியி லொழிந்தார். (க)

விண்பக வுயர்ந்தகிரி மேவுசிலை யெல்லா
மெண்பகரி லிங்கவடி வென்றறி சரித்தார்
சண்பக வனத்தநி சயத்தையெதிர் கண்டார்
வண்பகல்செய் கற்பக வனத்தையு மயர்ந்தார். (உ)

கானவர்க ளேனல்வினை கானிலெதிர் மேவித்
தானவரை யிறுபுரி சாரதரை யெய்தி
ஞானவரை யோகியர்க ணண்ணுகுகை நண்ணி
யேனவர்கண் மாதவ மியற்றுமிடை சென்றார். (௩)

வேறு.

சந்தகில் குரவ வேலிச் சண்பகச் சோலை சார்ந்து
புந்தியின் மகிழ்ச்சி கூர்ந்து பொன்னக ரமரர் முன்னாளந்தமார் தக்கன் வேள்வி யழலினாற் காய்ந்த மேனி
மந்தமா ருதத்தி னாலே வரவரக் குளிர்ந்தார் மன்னோ. (௪)

பாளையஞ் சடைகள் பின்னிப் பழுப்பிலைக் காவி தாங்கி
நீளவு மொருதா ளின்று நெய்பரிச் சீரை சாத்தித்
தாளினீர் சிரத்தி லேற்றுத் தவத்தர்போ லுயர்கள் போலு
நாளிகே ரங்கள் கண்டார் நலம்பெறு மகிழ்ச்சி கொண்டார். (ரு)

கன்னியம் பசிய பாளை கமழ்தரு பருவத் தெங்கின்
மன்னிய குரும்பை காய்த்தது மழைமுகில் பொதிந்த தோற்ற
மன்னிய வுலகிற் றெய்வ வாடவர் வந்தா ரென்று
துன்னுபார் மடவார் கொங்கை துகிலினான் மறைத்தன் மானும். (சா)

புண்ணிய தருக்க ளாகப் பொலிந்தபூஞ் சோலை வேலித்
திண்ணிய கதலீ நின்று தென்றலா லசையுந் தோற்றம்
விண்ணினி லரம்பை மாரை வேட்டவர் வந்தா ரென்று
மண்ணினி லரம்பை யால வட்டங்கள் சுழற்றன் மானும். (எ)

துருக்கமா மலரில் வீழ்ந்து சுரும்பின நறவ மாடி
மருக்கமழ் தாதி னாலே வடிவுவே றமைந்த தோற்றந்
திருக்கிளர் தழலின் மூழ்கித் திருநாளைப் போவார் மேனி
னுருக்கிளர் சைவத் தெய்வ வுருவுபெற் றெழுந்த தாமால். (அ)

பன்மலர் துளிக்குந் தேறல் பைம்பொனா டளித்தே மென்னுங்
கொன்மலி தாரை யன்றிக் குளிர்மழைத் தாரை போலுஞ்
சன்மலிச் சினைக ளேவுஞ் சண்பக மலர்கள் வானம்
பொன்மழை பொழிவ தன்றேற் பூமழை பொழிவ தாமால். (கூ)

இலவிதழ் விரியுந் தோற்ற மிவர்கொலோ தக்கன் வேள்வி
கலனவி நுகர்ந்தா ரென்ன நவிலவாய் திறத்தல் போலும்
புலனுற வடைந்தார் தம்மைப் புறஞ்சொலத் தகுமோ வென்ன
வலருமாந் தளிர்கள் கையா லமைததுவாய் புதைத்தன் மானும். ()

தேவர்கள் வந்தா ரென்னச் செண்பக வனமாங் கன்னி
மாவடு விழியா னோக்கி முருக்கின்வாய் மலர்ந்து முல்லைப்
பாவனை முறுவல் பூத்துப் பாடல்வண் டிசையா லேத்தி
யாவல்சேர் தளிர்க்கைப் பூந்தே னருக்கிய மளித்த தன்றே. (கக)

கண்டன னமரர் வேந்தன் கண்களா யிரத்தின் பேறு
கொண்டன னிமையா நாட்டங் கொண்டபே றமைந்தார் விண்ணோர்
தண்டலைக் கமுக வேலிச் சண்பக வனச்சீர் நோக்கி
லண்டர்தங் குரவன் வாய்மை யாயிரத் தொன்றே யென்றார். (கஉ)

பூவின்மேல் வண்டே டாடாப் புதியசண் பகக்கா வெங்குந்
தேவரே பூவின் மேவிச் செழுந்தவத் தீதன்வண் டானார்
மூவராய்ப் பரம மூர்த்தி முத்தொழில் புரியுந் தானம்
யாவரே வலஞ்செய் யாதார் யாவரே தவஞ்செய் யாதார். (கஙு)

கந்தர வருடஞ் சேர்ந்தான் கமழ்புனற் கிறைவன் வாரி
யிந்திர தனுவைச் சார்ந்தா னிந்திர னெழிற்பூஞ் சோலை
மந்தமா ருதத்தைச் சார்ந்தான் மருத்துமா முனிவர் வேள்விச்
செந்தழ லதனைச் சார்ந்தான் செழுங்கனற் கடவுண் மாதோ. (கச)

அந்தகன் றரும வேட மாகின னிருதி யாவான்
முந்துவேட் டுருவ மானான் முதுதவம் புரியு மேனைத்
தந்திரர் யாரேயோர் சித்தர் தவத்தர்விஞ் சையர்புத் தேளிர்
வந்தகிம் புருடர் மற்றோர் வண்மையை வகுத்துச் சொல்வாம். (கரு)

மனிதராய் வடிவு கொண்டு மாக்களாய்ப் புள்ளாய் வாசப்
புனிதமார் தருக்க ளாயும் புயல்கெழு திரிகூ டத்து
முனிவராய்ப் புதலாய்ப் புல்லாய் முற்றும்வேற் றுருவம் பூண்டுந்
தனிதராய்த் தவங்கள் செய்தார் தானவர் பயத்தான் மன்னோ. ()

ஆலயச் சங்க வீதி யண்ணலை யுன்னி வானோர்
நால்வகைச் சங்கத் தோரு நளினங்கோ முகஞ்சொத் தீகஞ்
சால்புசேர் வீரஞ் சிங்கா சனமுத்தஞ் சுகாச னங்கள்
பீலிபத் திரமா மொன்பான் பெரியவா சனத்தி ருந்தும். (கஎ)

ஆறுடற் பகையை யோட்டி யைம்புல னடக்கி யாண்டு
மேறுநாற் கரணங் கட்டி யியலுமுக் குற்ற மாற்றி
யூறுகால் வளியி ரண்டு மொருக்கியோர் வழிக டாவி
மாறிலா யோகு நீராற் றவப்பயிர் வளரச் செய்வார். (கஅ)

இயமமா சனந்தி யானந் தாரணை பிராணா யாம
நியமமே சமாதி நீண்ட பிரத்தியா கார நிட்டை
யுயருமட் டாங்க யோக முனூற்றியு மாறு தாரத்
தியல்பெறு பாந்தண் மூலத் தெழுப்பிமே லாடல் கண்டும். (கக)

காய்பல தின்றுங் கானிற் கனிபல நுகர்ந்தும் வாவிப்
பாய்புனல் பருகா நின்றும் பசசிலை கறித்துங் கல்லிற்
சாய்பல கிழங்க சித்துஞ் சருகினைப் புசித்துந் தாங்கா
வாயுபக் கணங்கள் செய்தும் வசிவறப் பசியைத் தின்றும். (உ0)

சாந்திரா யணமு டித்துந் தருதிங்க ளுபவா சித்து
மாந்தியு மயனை தோர்நாள் வருடத்தி லோர்நா ளுண்டுங்
காந்தியின் வெயில்சேர் பஞ்சக் கனலின்மத் தியிலே நின்று
நீநறுத லரிதாம் வாரி நீரிலே நிலையா நின்றும். (உக)

கல்லெனக் கிடந்து நீரிற் கயலென வாழ்ந்தும் பாரிற்
புல்லெனப் பொருந்தா நின்றும் புற்றென வளர்ந்து மேனி
வில்லென வளைந்து மாலின் வீழ்பனச சடைகள் வீழ்த்துஞ்
செல்லெனக் கலங்கு றுதுந் தீயெனப் பயமு றுநும. (உஉ)

ஊசிமே லொருகால் வைத்து மொருவிர லூன்றிக் கண்க
ளூசிகா மூலம் வைத்து நன்னிலத் தொருகை யூன்றி
யாசுவாய் முடிகீ ழாக வடியிணை மேலா நின்றும்
வீசுகை சிரமேற் கொண்டும் விடாதுமெய்த் தவங்கள் செய்தார். ()

அப்பரி சமரர் யாண்டி லாயிரப் பதிற்றாண் டெல்லா
மெய்ப்பெருந் தவங்கள் செய்து மெய்யெலாம் வருந்தித் தேம்பிச்
செப்பருங் கவலை கூர்ந்தார் தேவரே யாகி லம்மா
விப்பெருஞ் சிவத்து ரோகம் யாவரே தொலைக்க வல்லார். (உச)

அத்தனை கால மெல்லா மருந்தவம் புரிந்து மாதி
கத்தனை விடஞ்சேர் நீல கண்டனைத் திரிகூ டத்து
நித்தனை வரவு காணார் நின்றனர் திகைத்து வாடிச்
சித்தநைந் துலைந்த வானோர் சிந்தையில் வருந்திச் சொல்வார். (உரு)

வேறு.

உருகினோ முடலெலா முளமெலா மறுகினோம்
விரவினோ மனலிலே வெயிலிலே கருகினோம்
வருகிலா ரருள்கிலார் மழுவலா ருலகெலா
மருளுமோர் பரமனா ரருளிலா தவர்கொலோ. (உரு)

வரமெலா முதவுமோர் வரதனார் கருதலார்
புரமெலா மெரிசெய்தே புவியெலா நிலைசெய்தார்
பரமனார் நமதுபாற் பரிகிலார் வருகிலார்
பிரமனார் மொழியுமே பிசகுமோ பிசகுமோ. (உஎ)

வேகமே மிடையறு வேழமே யுரிசெய்தா
ராகமே லணிசெய்தே யாதிநா ளருள்செய்தார்
நாகமே யணிகுவார் நாமெலா மெலியவே
யேகநா யகர்வரா ரேழையேம் வினையிதோ. (உஅ)

செங்கைமான் மழுவினார் செண்பகா டவியினா
ரெங்குமாம் வடிவுளா ரெங்குமாம் விழியுளார்
கங்கைவார் சடையினார் கண்டுமே வருகிலா
ரங்கமே புகழ்ந்துநா மென்றுவா னவரெலாம். (உகூ)

வேறு

அவரவர்கண் மனந்தோறு மறிவென்னுஞ் சுடர்தூண்டப்
பவரமர்செஞ் சடைக்காட்டுப் பசுங்கனகத் தனிக்குன்றைக்
கவரமருந் திரிகூடக் கனவரைவாழ் கற்பகத்தைத்
துவரமரு நறுங்கனியைத் தோத்திரஞ்செய் தேத்தெடுத்தார். (௩0)

தேவருக்கும் பெருந்தேவே திரிகூடப் பரஞ்சுடரே
மூவருக்கு முதற்பொருளாய் முளைத்தருளுந் தனிமுதலே
மேவருட்கண் வாரிதியே மேலான குணக்குன்றே
யேவருக்கு முனையல்லாற் புகலுண்டோ வெம்பெருமான். (௩க)

தூயார்க்குத் தோன்றாத துணையாவா யனைத்துயிர்க்குஞ்
சேயாவா யணித்தாவாய் செண்பகப்பூங் காவுடையாய்
தாயாவா யெமதுரிமைத் தந்தையா வாய்பரவார்
நோயாவாய் பணிவார்க்கு நோய்தீர்க்கு மருந்தாவாய். (௩உ).

மண்ணுடையாய் நீருடையாய் வன்னியுடை யாய்மருத்து
விண்ணுடையாய் சங்கநெடு வீதியுடை யாய்பாகம்
பெண்ணுடையாய் சென்னிமிசைப் பிறையுடையாய் கண்களின்மேற்
கண்ணுடையா யெங்கடுயர் காணுவா றென்னேயோ. (௫௩)

நரிகூட வேடனுக்கு நந்தாத பதமளித்தாய்
பரிகூட நரிநடத்தும் பரமகா ரணமூர்த்தி
யரிகூட வயனறியா வண்ணலே யிரங்காயுன்
றிரிகூடங் கண்டவர்க்குத் தீராத வினையுண்டோ. (௫௪)

புகழ்வார்க்கு நல்குதியோ புட்பகந்த ணூர்முதலா
விகழ்வார்க்குங் கதிகொடுத்தா யல்லையோ வெங்கோமான்
றிகழ்வார்க்கு வினைதீர்க்குஞ் செண்பகா டவியுடையா
யகழ்வாரைத் தாங்காத நிலமுண்டோ வச்சோவே. (௫௫)

ஈயறியாப் பூந்தேனே யெழுந்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டுந் தாய்த்துணையே
நீயறியாச் செயலுண்டோ நிமலபரம் பரமூர்த்தி. (௫௬)

கங்கைதனைச் சென்னிமிசைக் காதலாற் றாங்கியதும்
பங்கயப்பொற் றாள்பரவும் பகிரதனுக் காவன்றோ
சங்கையற நொந்தேமைத் தாங்காயோ மானையொரு
செங்கைமிசைத் தாங்குந் திரிகூடத் தம்மானே. (௫௭)

அன்றுநர காசுரனை யந்தகனை யீடழித்துத்
துன்று முலகெல்லாந் துயர்தவிர்த்தா யல்லையோ
வின்றுநீ வாராயோ வேழையே மெய்துதுயர்
குன்றுந் திரைக்கடலுங் கொள்ளாது கொள்ளாதால். (௫௮)

நஞ்சம் பொறுத்தாய் நகுபார வெண்டலையின்
வஞ்சம் பொறுத்தாய் மழுவேந்துங் கையுடையாய்
தஞ்சந் திரிகூடத் தானுவே யெங்கள்பிழை
நெஞ்சம் பொறுத்தருளா னின்மேற் கடனன்றோ. (௫௯)

நாரா யணனுமொரு நான்முகனுங் காண்பரியா
யாரா வமுதே வருக்கைநீழ லம்மானே
வாரா யிதுசமையம் வந்தருளி நின்னருட்கண்
பாராயென் றும்பா பரிதபிக்கு மந்நேரம். (௪௦)

வேறு.

குளிர்புனற் கொழுந்தும் வில்வத் தழைகளுங் கொன்றைப் போது
மிளிர்மதிப் பிஞ்சுங் காயும் விரிசடைப் பவளக் காடு
நளிர்மறை பழுத்த வாயு நாட்டங்கண் மூன்றும் வானோர்
தெளிதர விடைமேல் வந்தான் சிவகிரி கூடத் தம்பான். (௪௧)

வாடிய பயிர்கள் கண்ட மழைமுகம் போல வாடித்
தேடிய வறியோர் கண்ட திரவியம் போலக் கங்கை
சூடிய கனகக் குன்றைச சித்திரச் சுருதி மன்றி
லாடிய பெருமான் றன்னைக் கண்டன ரமர ரெல்லாம். (௪௨)

கண்டனர் விழியு நெஞ்சுங் களித்தனர் களியாந் தேற
லுண்டனர் திருக்குற் றுலத் தொருவனைப் பரவி வாழ்த்து
விண்டனர் பரமா னந்த வெள்ளத்துட் டிளைத்து வானோர்
தெண்டனிட் டாடிப் பாடிச் சென்னிமேற் கரங்கள் கூப்பி. (௪௩)

ஒன்றாகி யிரண்டு மாவா யொன்றிரண் டாவாய் மற்று
மின்றாகி யென்று மாவா யிலதுள தாவா யெல்லா
மன்றாகி யனைத்து மாவா யாதியா யந்த மாவாய்
குன்றாகி யணுவு மாவாய் குறும்பலா வுடையாய் போற்றி. (௪௪)

படைப்பவ னீயே யாவும் பரிப்பவ னீயே முற்றுந்
துடைப்பவ னீயே மூன்று தொழிலன்றித் திரோப வங்க
ளடைப்பவ னீயே யர்வு மநுக்கிர கிப்பாய் நீயே
யுடைப்பெருந் திரிகூ டத்தா யுனையலா லுலக முண்டோ. (௪௫)

கருவியாய்ச் செயல்க ளாகிக் காலமா யிடமாய்ச் செய்யும்
பொருள்களாய்ப் புரிவா ளுகிப் புவனகோ டிகளுஞ் செய்வாய்
மருவியே கலந்து நிற்பாய் மற்றுநீ யவைக ளெல்லா
மொருவியே பிரிந்து நிற்பா யுன்னையா ருணர்தற் பாலார். (௪௬)

காணவுந் தொழவுந் தொண்டர் கருதவுந் திரிகூ டத்துப்
பூணவு முரியாய் நின்னைப் புலப்படத் தேடிக் காணச்
சேணதோ நிலம தேயோ சிவப்பதோ கறுப்ப தேயோ
வாணதோ பெண்ண தோவென் றறிகில மறைக ளின்னம். (சஎ)

அரும்பிய பொருள்க ளாவா யல்லையு மாவா யன்பர்
துரும்பெனிற் றுரும்பு மாவாய் தூணெனிற் றூணு மாவா
யிரும்பெனு மனத்தார் காண வெளியையோ திரிகூ டத்துத்
திருந்திழை பாகா வேகா சித்திரக் கூத்தா வென்றார். (சஅ)

வேறு.

நின்றுபுகழ் வானவரைத் திரிகூடப் பரன்கருணை நிறைந்து நோக்கி, யொன்றுபெரு மாதவமுந் தோத்திரமு மினிதுவந்தோ முமக்கு வேண்டும், வென்றிவரங் கேண்மினென வருளுதலு மெங்களுக்கும் வெளிநின் றாயை, யென்றுமெழு தாவேத மன்பருக்கே யன்பனென விசைப்ப தென்னே. (சகூ)

முன்னுளி லுனையிகழ்ந்து சிறுவிதிநீ மகத்தடைந்த முரணு லன்றோ, பன்னுளு மரசிழந்து பதியிழந்து வறுமையினாற் பதைக் கின் றேம்யா, மந்நாளி லெமைத்தொடர்ந்த சிவத்துரோ கந்தனை யின் றகற்றல் வேண்டு, மெந்நாளு மெங்கள்பதம் யாங்கள்பெற வேண்டுமென விறைஞ்சிப் பின்னும். (ருo)

சந்துகா ரகில்வேலிச் சண்பகா டவியொருநாட் டங்கி னோர்க்கு, மந்தமா ருதக்கொழுந்து வந்தொருகான் மெய்தீண்ட வரப்பெற் றோர்க்கு, முந்துநீர்த் திரிகூட வடவருவி யொருபொழுது மூழ்கி னோர்க்கு, மந்தவான் பிரயாகை மாகமா யிரந்தருபே றளித்தல் வேண்டும். (ருக)

என்னபா தகம்புரிந்தா ரென்றாலு மித்தலத்தி லெய்து வாரே
லன்னபாதகமவரையாதவன்முன்பனிபோல்விட்டகறல்வேண்டும்
பொன்னகர மழிந்தாலு மழியாமை வேண்டுமிவ்வூர் புலியூ ராதிப்
பன்னகரம் பிரியினுநீ நன்னகர நீங்காமற் பதிதல் வேண்டும். (ருஉ)

புல்லெனினு மரமிலைகாய் கனியெனினுந் திரிகூட புரத்து நீர் பாய், நெல்லெனினு மழுதெனினு முண்டவர்க்குங் கண்டவர்க்கு

நிலத்தில் வாய்ந்த, கல்லெனினு நிதியெனினும் பூண்டவர்க்கும் பாக
தியே காட்டல் வேண்டு, மெல்லெனினு மிரவெனினும் யாங்கள்பணி
செயவேண்டு மென்றார் வானோர். (ருங)

அவ்வரங்கள் கேட்டலுமே யமுதரங்க வாய்முறுவ லரும்பா
நோக்கி, யிவ்வரங்கள் குற்றாலத் தியற்கைநம தந்தரங்க முமக்கா
விந்தச், செவ்வரங்கள் வெளியரங்கம் பெறத்தந்தோ மினிப்புலவீர்
சேறு டெய்தி, மெய்வரங்கள் பெறுகவென்று னெழுதரங்க மிசை
நடிக்கும் விமல மூர்த்தி. (ருச)

அந்திப்பான் மதியணிவா ரவ்வரங்க ளருளிவிடை யருளப்
போந்து, சிந்திப்பாம் பொன்னுடுஞ் செல்வமுமபெற் றனர்வானோர்
சிவபி ரானை, நிந்திப்பார் படும்பாடு நினைதோறுந் தக்கன்மக நினைவார்
நாளும், வந்திப்பார் பெறும்பேறு வாழ்த்துந்தோறுந் திரிகூடம் வாழ்
த்து வாரால். (ருரு)

வேறு.

சிலம்புரி திருக்குற் றாலஞ் சேர்ந்துபா தகங்க டீர்ந்த
பொலம்புரி வானோர் செய்கை புகன்றபின் றவர்க்குச் சூதன்
சலம்புரி சிலைக்கை வேடன் சமபுவைத் தொடர்ந்து மேனாள்
வலம்புரிப் பணில வீதி வலமபுரி மகிமை சொல்வாம். (ருசா)

16. தேவர்கள் சிவத் துரோகந்தீர்ந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—சுசுஉ.

---

## பதினேழாவது:—வேடன்வலம்வந்த சருக்கம்.

தரையி னாலயம் வலமுதற் றிருப்பணி சரியை
கிரிச னெம்பிரா னருச்சனை புரிவது கிரியை
பொருமை யுள்ளுறத் தியானமுற் றிருப்பது யோகம்
பொருவி லானுட னிரண்டறக் கலப்பது போதம். (க)

அன்ன நால்வகைச் செய்கையு நாற்பத மளிக்கும்
பன்னு நான்கினும் பணியணி பரமர்பொற் கோயில்
முன்னி யேவலம் வருவது சரியைபன் முறையின்
மன்னு மோர்வகை யன்னது விரிக்கிலேழ் வகையாம். (உ)

மதிலி னுட்புறம் வலம்வரல் புறம்வலம் வருதல்
விதியி னற்கரங் குவித்தன்மெய்த் தோத்திரந் தியான
மமதிரி றைஞ்சுசாட் டாங்கமெய் வலமென வேழு
மதிக மொன்றிலொன் றுயிர மடங்கென லாமால். (௩)

நகர நாடொரு தேயநற் கண்டநற் றீப
மகர வாரிசூழ் புவனமெண் டிக்குவா னுலகம்
பகரு மன்னராய்ப் புரந்துமிவ் வெழுவகைப் பணியோர்
சிகர வில்லியா ருறைசிவ லோகமே சேர்வார். (௪)

கான வேடுவன் கொலையுங்கோ மாயுவின் களவு
மான வோடிய வலமொரு வலமெனும் பிழையு
மேன பாவமு நீக்கியெம் பரமர்குற் றால
மோன மாக்கதி கொடுத்தவா கேண்மென மொழிவான். (௫)

காலத் தாம்பிரக் கனிகள்பந் தாடுதெண் டிரைக்கைக்
கோலத் தாம்பிர வன்னியாங் கொழிதிரை நதிபாய்
தூலத் தாம்பிரக் குன்றம்வா ரிசந்தமிழ் சுருதி
மூலத் தாம்பிர மன்பெருந் தவக்குறு முனிவன். (௬)

போத னூல்விதி யாப்பெரும் புடார்ச்சுன புரத்து
வேத நாயகர் விண்டுவா யிருத்தலான் மேவ
நாத னார்திரி கூடமால் வரையொடு நறும்பார்
மாத ராண்முலை யிரண்டெனத் திரண்டது மலையம். (௭)

நடக்கும் யாவரும் வடதிசைக் குழுமலான் ஞால
முடக்கு நீக்கிடத் தென்றிசைத் தோன்றிய முனிவன்
குடக்கு நோக்கிய மதியணி வார்திரி கூடம்
வடக்கு நோக்கிமெய்த் தவம்புரி தமிழ்மலை மலையம். (௮)

இந்த மால்வரைச் சாரலின் சிறுகுடி யிருக்கும்
விந்தை வார்சிலை வீரனும் வேடுவன் றனக்கு
மைந்த னும்வல னென்பவன் கொலைத்தொழில் வலியாற்
சுந்த னுடவிச் சற்பமா மெனத்தலை யெடுத்தான். (௯)

வேறு.

செருப்புங் கானமுந் தேய்த்ததின் காலினன்
பொருப்பி னோங்கி வளர்ந்த புயத்தின
னெருப்பி னீர்பெய் நிறத்தினன் செங்கடா
மருப்பு மான முறுக்கும்வன் மீசையான். (௧0)

மைய லுங்கொடும் பாவமும் வஞ்சமும்
பொய்யு மோருருக் கொண்டன புன்மையான்
வெய்ய வூனுணத் தந்தங்கண் மேனியுங்
கையுங் காலு மொய்த் தன்ன கவடியான். (௧௧)

முயலு மான்களு மூரிக் கலைகளுங்
கயலுஞ் சேல்களுங் கானமுஞ் சேனமுங்
குயிலும் வீட்டுங் கொலைத்தொழி லேநடை
பயிலுங் காலத்தின் முன்பயில் பான்மையான் (௧௨)

தோயும் வாடை யெடுத்துச் சுவடுபோய்
நாயு நாண நடக்குந் திடத்தினன்
காயுஞ் சிந்தைக் குழிநரிக் கள்ளத்தான்
பாயும் போர்க்குப் பதுங்கும் புலியனான். (௧௩)

கோப மின்றிச் சிவக்குங் கொடுங்கணன்
றீப மென்ன வெரிசிகைப் பங்கியான்
றாப மாகி யெழுமுயிர்த் துண்டத்தான்
பாப மன்றிப் பழிக்கும் பயப்படான். (௧௪)

உடலை யேவளர்த் தூனுண்டு பல்லுயிர்ச்
சுடலை யேயெனத் தோன்று முதரத்தா
னடலை யேயெனு நஞ்சுறை நெஞ்சின
னடலை யேயறி யாமுழு முண்டத்தான். (௧௫)

மாலுந் தென்றலுஞ் சேர்மலை யாசலங்
கோலு நீள்வரைக் கொல்லி மயேந்திர
மேலும் போகி விலங்கொடு புள்ளெலாங்
காலந் தோறுங் கருவறுத் தானரோ. (௧௬)

அங்கண் வேட்டமெய் தாதயல் சூழ்வரை
யெங்கும் வேட்டம் புகுவதற் கெண்ணியே
மங்குல் வேட்ட மலையத்து ளார்க்கெலாந்
தங்கு வேட்ட மெனப்பறை சாற்றினான். (கஎ)

வெள்ளி வாரத்தில் வேலனை முன்புகூஉய்த்
தெள்ளி தாம்வரைத் தெய்வதம் போற்றுபு
துள்ளி யாடித் தொழுது வணங்கெனு
வள்ளி யீந்தன னவன மாதியா. (கஅ)

முதுபு னத்தினை யும்முலைத் தோரையு
மதுவுங் கந்தமு மற்றவுங் கொண்டவன்
கதுமெ னச்சுனை மூழ்கிக் கடிகமழ்
புதும லர்ப்பெய்து பொங்கவி தூவியே. (ககூ)

பரவி யேத்திப் பலிவைத்த சேடமும்
வரவி சேடமுஞ் சொல்லி வழங்கலும்
விரவு நல்ல நிமித்தென வேடர்கோன்
சுரவு தாங்கி யொடுதொடு தோலிட்டான். (உ௦)

அம்ம லைக்குரி யானவ னாதலால்
வெம்ம லைப்புற வேடுவர் யாவருஞ்
செம்ம லைப்புடை சூழ்ந்து செருமினார்
கைம்ம லைக்குலங் கார்மலை சூழ்தல்போல். (உக)

ஆங்கு நின்றவர்க் காதி முதியவன்
வீங்கு பல்குர லார்ந்தை விளித்தலுந்
தீங்கு காட்டிய சேதமென் றுன்மறுத்
தோங்கு மாக்கமென் றுன்மற் றொருவனே. (உஉ)

வேறு.

பரிசையுடை வரியதளாற் பரியபுலிப் போத்தானு
னரவுரிகண் முதலசக்கி யடற்கூளி யெனநின்றான்
சுரிகையெனும் படைதுளக்கி யிடிம்பனெனத் தோன்றினான்
கரடியுரிக் கஞ்சுகத்தாற் கார்மேக மெனப்பொலிந்தான். (உரு)

வளைதடியர் வளைகோட்டுப் பகடுபோன் மருங்கேற
முளைதடியர் மூரிமுருப் பிரலைபோன் முன்னடப்பக்
கொளையுடுத்த கொடுமரத்தர் வரையாட்டின் குலமேய்ப்பத்
திளைதிளைத்து நடுவருமோர் சிங்கமெனத் தோன்றினான்.(உச)

ஆளெழுந்த திரண்முழக்க மலைசுருட்டுங் கடலேய்ப்ப
வாளெழுந்த வயப்படைகண் மகரமச்ச நிரைமானத்
தூளெழுந்த படலம்போய்ச் சுடர்மறைப்பப் படரிருளால்
வேளெழுந்து தன்கரியா மெனத்திகைப்ப வெளிக்கொண்டான்.

தளிரிலையு மோலைகளும் பாளைகளுந் தானையராய்க்
கிளைகிளைவல் லயந்தரித்துத் தருக்குலம்போற் கிட்டினு
ரிளையர்கா ளையராய விறவுளரும் வனசரரும்
பழையர்களுஞ் சூனர்களும பறம்பருங்கி ராதருமே.          (உரு)

வேறு.

கொடிபி டிப்பக் குழல்கொம்பு தொண்டகத்
துடிமு ழக்கந் துவைத்தெழ ஞாளிகள்
செடிகள் சுற்றுபு வாடை தெரித்தெழத்
தடமெ டுதது வலைஞர்பின் சாரவே.          (உஎ)

சென்று கானுஞ் சிலம்பும் பதுக்கையுந்
துன்று சாரலுங் குரலங் கானமுங்
குன்றும் யாறுங் குவடும் வளாகமு
நின்று மோடியு நீடினர் தேடினார்.          (உஅ)

காடு முற்றக் கலைத்தெழு வார்சிலர்
மாடு சுற்றி வலையெறி வார்சில
ரூடு பற்றி யொடியெறி வார்சிலர்
கோடு பற்றிக் குமுறிநிற் பார்சிலர்.          (உகூ)

வேடு பாய்வ ருழுவையை வேழத்தின்
கோடு சாய்தரக் குத்துவர் மேல்வரை
யாடு பாய்வ ரறைபாய்வர் சூகர
மோடு பாய்வர் முயன்மறித் தோடுவார்.          (௩௦)

அழுங்கு கிரி யணிஎல்கவு தாரிபுள்
ளொழுங்கு காடை யுடும்புபுல் வாய்களை
யெழும்ப நாய்களைத் தேறிய திக்கெலாங்
கழுந்து போல்பவர் கைசெயுஞ் சூழல்வாய். (௩௧)

நீல மொன்றிய குன்றினை நீள்சரற்
கால மேகம் வளைந்தெனக் கானராத்
தூல மொன்றிய மெய்யெங்குஞ் சுற்றலா
லோல மென்றமேதோர் மூம்மத வோங்கலே. (௩௨)

தந்தி கூப்பிடச் சக்கரத் தானென
வந்தெ திர்ததனன் வென்ற வலனென்பான்
முந்து தாவிமுன் னேகினர் யாரையு
மந்த மாசுண மள்ளி விழுங்குமால். (௩௩)

கட்டு நாகஞ் சராமென நேமியாத்
தொட்ட வாளியி ஞற்றொலைத் தானையை
விட்ட மாலின் விடுத்தனன் மீனவ
னிட்ட கார்தனை விட்டது மென்னவே. (௩௪)

வல்லை பார்தளின் விட்டபின் வாரணஞ்
செல்லும் வேடரைச் சீறித் துரந்ததால்
வெல்லும் வல்விட மீட்ட சகாயனை
கொல்ல வேகுங் கொலைவரி வேங்கைபோல். (௩௫)

ஆனை தாக்கலு மாங்கெதிர்ந் தான்வல
னேனை வேட ரிரிந்தன ரேகினர்
தானை வேந்தைச சமரில்விட் டோடிடுஞ்
சேனை யேயன்றித் தெவ்வரும் வேண்டுமோ. (௩௬)

சோனை யொத்த சுடுசர மாரியால்
வேனில் விட்டென வேழம்விட் டேகலும்
வானி றைத்து வெறித்தது மானவே
தானொ ருத்தனுஞ் சாபமு மாய்நின்றான். (௩௭)

சேணில் வேடரைத் தேடலுங் காண்கிலா
னூணி லாம லொருபகல் வெம்பினுன்
வீணி லோடும் விலங்குபுட் காண்டலும்
பாண மொன்றிலன் பற்கறித் தேகினுன். (ருஅ)

கான மெங்கு முழுந்தொரு கார்முயல்
கூன விற்குணி லாகக் கொலைசெய்தான்
மான வேடுவன் வன்பசிக் குண்ணவே
யூனை வாட்ட வுறுகனல் காண்கிலான். (ருகூ)

கொம்பு தேடிக் கடைந்து கொடுங்கனல்
வெம்ப வீழ்த்தலும் வெண்ணெய் படாமுனம்
பம்பு தாழி யுடைந்தெனப் பாய்ந்தொரு
சம்பு வூனைக் கவர்ந்தது தாயதே. (சo)

சம்பு வோடித் தசைதனைக் கவ்வியே
சம்பு நீண்மரக் காவுந் தனிவரைச்
சம்பு வோடையுஞ் சாரலுந் தாவிப்போய்ச்
சம்பு வாழ்திரி கூடத்தைச் சார்ந்ததால். (சக)

ஓட வோடிப் பவக்கட னீந்தவோ
ரோட மேறுதல் போலுயர் மேற்கதி
கூட வோர்வழிக் கூடுத லாய்த்திரி
கூட மால்வரைச் சாரலிற் கூடினுன். (சஉ)

வேறு.

அனைய வூனவே றமைந்தபின் வினைபிரித் தகன்று
தனையும் வேறுறப் பிரித்தவ னெனத் தனித்தான்
வினைபி ரித்தபின் சம்புவைத் தொடருமெய் யனைப்போற்
றனைவி லூன்கவர்ந் தேகிய சம்புவைத் தொடர்ந்தான். (சங.)

ஊரை நோக்கல னுறுபசி நோக்கல னுடலின்
சோர்வு நோக்கல னடித்தமுட் கடித்தரு மரவம்
பார்வை நோக்கல னிகலன்மேற் பார்த்தகண் பறியான்
பூர்வ நாடியுண் ணோக்குமோர் யோகியே போன்றான். (சச)

வரியு டற்பொறி மாசுண வாய்ப்படு மதம்பாய்
கரியை மீட்டவன் கைப்படை தொலைந்தகா லத்து

நரியின் வாய்த்தசை மீட்கவும் வலியின்றி நலிவான்
பரிய கூகையை வெல்லுமே காகமும் பகலில். (சரு)

நிவந்த கானெலா நேடியு மோடியுந் தனித்துங்
கவர்ந்த வூனவாய் விடுக்கில தோரியுங் கரங்கால்
சிவந்து மெய்யெலாங் கருகியும் வேடனுந் திரும்பா
னுவந்த வூன்பொருட் டுயிரையு மதித்திடா ருலகோர். (சசா)

தொடர்வ னெட்டுவன் வாடுவ னோடுவன் றுடிப்பன்
படப டத்துடல் சோருவன் பொறிபொழப் பார்ப்பன்
குடர்கொ திப்பதும் பார்க்கல னிகலின்மேற் கொதிப்பான்
மிடல்கு றித்தபின் றமதிடர் பார்ப்பரோ வீரர். (சஎ)

முன்பு தெவ்வர்தந் திறையின்மேற் றிறைகொளு முனைவன்
பின்பு தானைவிட் டூனைவிட் டோரிபின் பெயர்வா
னின்ப மெய்துநா ளின்பமே லின்பமா மெவர்க்குந்
துன்ப மெய்துநாட் டுன்பமேற் றுன்பமே தொடரும். (சஅ)

விரைவிற் சம்புவைத் தொடர்தலால் வியன்றிரி கூட
வரையைக் கண்டனன் வரைபொரு கடல்பட வுருவித்
திரையைக் கண்டனன் சித்திர நதிப்பெருந் தீர்த்தக
கரையைக் கண்டனன் பிறவியங் கடற்கரை காண்பான். (சகூ)

இருவ லம்புரி நந்தன வனம்புகுந் திமையோர்
தருவ லம்புரி சண்பகத் தண்டலை தாவித்
திருவ லம்புரித் திரளொடு சித்திர நதிசூழ்
வெருவ லம்புரி மறுகுசூழ்ந் தனன்வினை மறுக. (ருo)

கிளரு முத்தலை யருவிபாய் முத்தலைக் கிரியின்
வளரு முக்கணு ரமுதுறை கோயில்சூழ் வரலா
னுளரும் வெம்பசி யொழிந்தது பகைமையு மொழிந்தான்
றளரும் வெவ்வினை தணந்தபோ லிகலினைத் தணந்தான். (ருக)

தணந்து தத்தம திடங்குலாய் முடிவின்மா தவரும்
வணங்க மானமேற் கயிலையி லேகிவல் வேட
னணங்கு பாகர்மெய் யருளினாற் சிவகண மானா
னிணங்கு சம்புவுங் கிங்கிர னெனப்பொலிந் ததுவே. (ருஉ)

தலைவர் சங்கமா மறுகினை வலம்வரு தவத்தாற்
சிலைவல் வேடனுஞ் சம்புவுஞ் சிவகதி சேர்ந்த
நிலைமை கூறினன் சூதன்மா தவர்க்குமே னிகழ்ந்து
முலைவில் யானைசெய் பூசையை யாசையா லுரைப்பாம். (௫௩)

17 வேடன்வலம்வந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௧௦௧௫.

---

## பதினெட்டாவது:—யானைபூசித்த சருக்கம்.

முந்து மெண்வகைப் பூதசுத்தி யமுதன் மூன்று
லைந்து சுத்தியா லாகம விதியினு லரனை
மந்தி ரத்தினல் வருபுனல் போதுமற் றவையாற்
புந்தி வைத்துமுக் குறியினிற் புரிவது பூசை. (௧)

அந்த மெய்ந்நெறி யறிகலா வடுகொலை வேழ
மிந்து வார்சடை நன்னக ரிறைவனை யோர்நாள்
வந்து பூசனை புரிந்துநற் கதிபெறு மகிமை
சிந்தை யன்பினுற் கேட்பவ ருயர்கதி சேர்வார். (௨)

அருமைப் பேடைகண் களிப்புறக் களிமயி லகவும்
பெருமைக் காரெனும் பருவமுங் குருகிளம் பெடைக
ளொருமைச் சேவலி னூடலுக் கூடல்கூர் குளிரும்
பருமைக் கூரலி னிடைவிடா தன்றில்சேர் பனியும். (௩)

பாங்கு தண்கயப் பங்கயத் தலர்முகம் வாட்டுந்
தாங்கு பின்பனிக் காலமும் வண்டுதா லாட்டத்
தூங்கு சீரிள வேனிலுந் தொலைந்திடச் சுடரோன்
வீங்கு வெய்யில்வாள் விதிர்த்தெழுந் ததுமுது வேனில். (௪)

பாரு மண்டமும் படர்கதிர் தெறுதலாற் பரவை
நீரும் வேறொரு நீரினை வேட்டுநின் றேங்கு
மூரு லாவுதண் மதியுமோர் மதியைவேட் டுருகுங்
காருங் காரினை வேட்டுடல் வியர்க்குமோர் காலம். (௫)

துள்ளு தெண்டிரைப் புலவுநீர் சுலவிய நிலமேல்
வெள்ளி வீழெனக் கார்துளி யாமையால் வெதும்பிக்

கள்ளி பாலறப் பொரிந்தது கரிந்ததா வரையும்
வள்ளி யோர்கொடை மறந்திடிற் கயவரோ வளர்ப்பார். (சு)

வருந்து கானிடை வானிடைச் சுழல்வன பருந்து
பருந்தி னீழலி லொதுங்குவ விரிபணப் பாந்தள்
கரிந்த பாந்தளின் படமிழ லொளிப்பன கருப்பை
பொரிந்த கானெறி தளிரெனப் புகுவன புனமான். (எ)

மத்தி யானமொத் திரவினும் வெதுப்பும்வன் கோடை
மத்தி யானபல் லுயிர்களை விடுக்குமோ மதம்பா
யத்தி யாயருந் தோலதாய்த் தூங்கலா மசல
மத்தி யாயருந் தோலதாய்த் தூங்கலா னதுவே. (அ)

இன்ன காலையிற் பன்னமு மிரைபெறு திரங்கிப்
புன்ன காதிகள் போற்பவ ளுசனம் பழகித்
துன்னு நீரென வானலை கானலைத் தொடர்ந்து
தன்ன மாமெனச் சுழன்றதோர் மும்மதச் சயிலம். (கூ)

கடவு திக்கெலாங் கனல்வது புனலெனக் காட்டித்
தொடர்த ரத்தர வகன்றுபோய்த் தொலைதருங் கானல்
வுடவ ரைச்சிலை வரதனைப் பொருளென மதியா
துடலும் பொய்யினை மெய்யெனுஞ் சமயமொத் ததுவே. (கo)

பருகு நீரின்றி யுணவின்றிக் குஞ்சரம் பசியா
லுருகு தாகத்தா லுலக்குமுன் னூழிநாட் புரந்த
தருமம் போலவந் தடுத்தது சண்பகத் தடங்காக்
கருது மெய்யின்முன் பொய்யென மறைந்தது கானல். (கக)

புற்ப வாவியு நதிகளும் வறந்துபா ருலகிற்
புறபல் காவெலா முலர்ந்தகா லமுங்குளிர் பயிராய்க்
கற்ப காடவி நிகர்த்தது செண்பகா டவியே
கற்ப காலமுந் தானழி யாதமை காட்டி. (கஉ)

கான வாரணம் பேடைசேர் பதுக்கையுங் கமஞ்சூற்
கூன வாரண வாவியுங் குளிர்மரக் காவு
மோன வாரணங் கார்பயின் முத்தலைப் பொருப்புந்
தான வாரணங் கண்டதோ ரதிசயந் தழைப்ப. (கங)

அடுத்தி டச்சுடுங் கடுவெயிற் கானம்விட் டகன்று
மடுத்த டங்குளிர் செண்பகப் பொதும்பரில் வரலுந்
தொடுத்த சூக்கும மெய்துபு தூலமாஞ் சுமையை
விடுத்த வாவிபோ லயர்வுயிர்த் ததுமத வேழம். (கச)

முன்னெ லாம்பசிக் குலைந்தோர் மும்மத வேழங்கல்
பன்னெ டுங்கவிப் பாணனூர் பாணியைப் பரிவாற்
சென்னி வைத்தவர் திருமுகங் கொடுத்தொரு சேரன்
பொன்னின் மாளிகை புகுந்தெனப் பொழில்புகுந் ததுவே. ()

வாழை யிற்குலை மறுகரித் தலையெனத் திருகிக்
கூழை மூக்கிமாங் கனியுண்டு கொழுநிதிக் குவைசேர்
பேழை யைத்திறந் தெனப்பல வினிற்சுளை பிதிர்த்துத்
தாழை முப்புடை நறுங்கனிச் சாறொடுந் தாக்கி. (கசு)

ஆக மான்மத முவட்டுற நுகர்ந்தத ளசலந்
தாக மானது கெடுபரி தபித்தலுந் தவத்தோர்
போக மேதரும் யோகமே நிகர்த்தது பொருப்பின்
மாக மாநதி வருதல்போல் வரும்வட வருவி. (கள)

தூபம் போன்முகில் படர்வரைச் சுடர்மணி கொழித்துத்
தீபம் போலொளி ரருவிகாண் டலுந்தழை செவிமாத்
தாபம் போய்த்துயர் தவிர்ந்தது படிந்தமெய்த் தவத்தோர்
பாவம் போய்விடப் பவத்துயர் பறிபடும் படிபோல். (கஅ)

அப்பெ லாநுக ராவவாற் கரத்துமொண் டருந்தி
வெப்பெ லாமறக் குளித்துமெய்ப் புறமெலாம் வீசி
வைப்பெ லாம்புக வலையமிட் டிறைத்தது மதமா
வொப்பில் கோளரா மதியையுண் டுமிழ்வது கடுப்ப. (கசு)

இருமை நாகமே விந்திரன் வயிரவா ளெடுப்ப
வொருமை நாகமே யெனப்புனல் படிந்தயர் வுயிர்த்துப்
பருமை நாகநீள் பணைக்கைமே லெடுத்தது படர்கோட்
கருமை நாகமென் றிருமதி யொருமதி கலங்க. (உ0)

நத்த மோர்மருப் பிருபிறை மும்மத நால்வாய்ச்
சித்த மைந்துடைச் சிந்துர மெடுத்தெடுத் தேந்தி

முத்த வாரிமொண் டெறியுநீர் நிகர்த்ததான் முழங்குஞ்
சத்த மாமுகி லெண்டிசைப் பொழியுநீர்த் தாரை. (உக)

கந்த ரத்தெழிற் கறையடிக் கவுண்மதக் கலுழிச்
சிந்து ரப்பெருஞ் சிந்தூர மெடுத்தெடுத் தெறியச்
சுந்த ரத்தன துடல்வழிச் சொரியு நீர்த்தாரை
மந்த ரத்தட வரையில்வீ ழருவியை மானும். (உஉ)

மூரி வாரண முதுபனைக் கரத்துமொண் டெறியும்
வாரி நீர்தொறும் வரையின்மா மணிகிடந் திமைப்ப
நாரி பாகர்மெய் யன்பரா நமிநந்தி யடிக
ணீரின் மேல்விடு நிரைசுடர் விளக்கினை நிகர்க்கும். (உங)

தூங்க லாமெனத் துறையில்வீழ் வாரணந் துயர்நீத்
தோங்க லாமென மதர்த்தெழுந் ததுகிழ வுருவாய்த
தேங்க லாரநீர்த் தடம்படி கில்லவேட் கோவர்
நீங்க லாதபே ரிளமைபெற் றெழுந்தது நிகர்க்கும். (உச)

குளிர்த டம்புன லருவிதோய்ந் தகன்றகைக் குன்ற
மளிய தண்டலை வண்டலைத் துருத்தகா தடித்
தளிர்ப ரிந்துபைம் போதுதூஉய்த தழைபல சிதறி
நளிர்த டஞ்சினைக் கனிகளு நனியுகுத் தனவே. (உரு)

துறும்ப லாபல மறிகலா மதகயஞ் சொரிநீர்
நறும்ப லாதிபூத் தளிரெலா நன்னதித் துறைவா
யுறும்ப லாயிர வண்டகோ டிகளுயிர்க் குயிராய்க்
குறும்ப லாவுறை குழகர்பா னிறைந்தன குழுமி. (உசு)

திமில வாரண முமிழுநீர் திண்ணனம் பரனுர்க்
குமிழு நீரதாத் தழையெலா மவன்சிகை யுகுக்குங்
கமழும் பூவதாச் சிதறிடுங் கனியவன் கனிவா
யமிழ்த மாகமென் றளித்திடு மவிகள்போன் றனவே. (உஎ)

கருது முற்பவச் சுகிர்தமோ செண்பகா டவிசோ
தருமமோவட வருவிநீர் படிந்தமெய்த் தவமோ
பருமை வேழமுய்த் தனவெலாம் பழமறைப் பலவி
னருமை நாயகாக் கற்புத மாயின வம்மா. (உஅ)

பருகி விட்டேறி புனலிபி டேகமாம் பனைக்கை
சருகு திர்த்ததுந் தழையுதிர்த் ததுமருச் சனையா
மருகி லுக்ககாய் கனிநிவே தனங்களா மயன்மா
லிருவர் பத்திசெய் யொருவர்தம் பூசையா மிதுவே. (௨௯)

இருகை மஞ்சன மாகிலு மொருகையா லெடுத்துப்
பருகு தண்புன லாகிலும் பசசிலை பசும்புற்
சருகை யாகிலு நன்னகர்ப் பரமர்தாள் சாததி
யொருமை யெய்திலார் பேதைமை யாதென வுரைக்கேன். ( )

வேறு.

கவளக்கார் மதவேளங் காவினிடை வைகியநாட்
பவளக்கான் முததளப்பார் பாண்டிவள நாடனைத்துந்
திவளக்காய் கோடையெலாந் திரிகூடஞ் சேர்ந்தார்க்குத்
துவளக்காய் கொடியவினை தொலைந்ததெனத் தொலைந்ததால். (௩௧)

அந்நெறிக்கட் சிவபெருமா னருள்போல முகில்சுரந்து
செந்நெறித்தண் டமிழ்நாடு திங்கண்மும்மா ரியும்பொழிந்து
பொன்னுமுத்துந் துறைகொழிப வெங்கும்வளம் பொருந்தியதான்
மென்னெறித்தந் தாவளமு மேயதுதந் தாவளமே. (௩௨

திரிகூடப் பெரியோன் சிவபணிசெய் மெய்யடியார்
தரிகூடப் பெருமாவனந் தனில்வாழ்வு தழைத்தோங்கி
யரிகூட வயனறியா வரன்பதமே சேர்வரென
விரிகூட விரித்துரைக்கும் வேதவாக் கியந்தழைப்ப. (௩௩)

நன்புலத்து மதவேழ நனிபோகம் பொசித்தவைமே
லன்புலப்பப் பூதலத்தி லநுபவம்விட் டொழிந்தநாட்
டென்புலத்தான் றூதர்வரச் சிவகணத்தா ரெதிரேற்றார்
புன்புலத்தின் கொலைவிலங்கு புரிதருமம் யாதெனவே. (௩௪)

கடுவன்றா துவர்வினவ நம்பர்கணத் தவர்நோக்கிக்
கடுவன்பா னுவைச்சிவந்த கனியாகத் தனிதாவு
நெடுவன்சீர்க் குறும்பலவி னேசனைப்பூ சனைபுரிந்து
கொடுவன்பா தகந்தவிர்ந்த குஞ்சரங்கா ணிதுவென்றார். (௩௫)

அற்பேறும் பூசனைக்கோ விளையாட லருச்சனைக்கோ
நற்பேறு பெறுவதெனு நமன்படர்க்குச் சிவகணத்தார்

கற்பேறுங் கொடிபாகன் கழல்கண்டோ தழைசொரிந்து
முற்பேறு பெற்றுயர்ந்தான் முசுகுந்த னெனமொழிந்தார். (௩௬)

வங்குளா ரறிந்தறியா தியற்றுகின்ற பூசனைக்குங்
கங்கைவே ணியரருளே கதிகாட்டு மென்பார்மு
னங்கசா தனமாக வரும்பாவக் கடல்கடத்தும்
வங்கமாய்த் தோன்றியதால் வானிலொரு புட்பகத்தேர். (௩௭)

கூற்றினார் விடுத்தகலக் குஞ்சரத்தைப் புட்பகத்தே
யேற்றினா ரேற்றுதலும் வேதிசே ரிரும்பதுபோன்
மாற்றினான் கரியுருவ மாதங்க வுருவானான்
போற்றினான் கயிலையிற்போய்ப் போதநா யகனடிக்கீழ். (௩௮)

சென்றடியிற் பணிதலுமே திருவருட்கண் பார்த்தருளி
யன்றுநமைத் திரிகூடத் தருச்சனைநீ புரிந்தமையா
னன்றுகெச கருணனென நந்திகணத் தினுமுயர்ந்து
முன்றிலிடைக் கிங்கிரர்க்கு முதல்வனென வாழ்கென்றார். (௩௯)

மைகொடுக்கும் பழவினைபோய் வளர்பூசைப் பலன்கிடைத்துப்
பொய்கொடுக்கும் விலங்குருவம் புத்தேளா யெவ்வுயிர்க்குங்
கைகொடுக்கும் விடையார்க்குக் கைகொடுக்கும் பணிபூண்டான்
மெய்கொடுக்குந் திரிகூட மகிமையார் விளம்புவார். (௪0)

சிந்தைசெயா நரிவேடன் சென்றதே வலமாகத்
தந்திசெயும் விளையாட்டே தருபூசை முறையாறு
லிந்திரனு மேத்தரிய திரிகூடத் தெம்மானைப்
புந்தியுடன் வலம்வருவார் பூசிப்பார் பேறெளிதோ. (௪௧)

இன்னகரி செயும்பூசை யியம்புதலு நயந்தேத்திப்
பொன்னகமா மிமயவரை போநதருளும் பெருமாட்டி
தன்னருமைப் பெருந்தவமுந் திருமணமுஞ் சாற்றுகெனப்
பின்னருமா தவர்வேண்டப் பேசுவா னுயர்சூதன். (௪௨)

18-யானைபூசித்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧0௫௭.

முதலாவது தானவைபவகாண்டம் முற்றுப்பெற்றது.



உ

கணபதி துணை.

சிவமயம்.

## இரண்டாவது சிவரகசியகாண்டம்.

காப்பு.

பெருமதத்தி னொருகரத்து மாருதமெவ் வுயிர்க்குமுயிர்ப் பிறக்கங் காட்ட, விருகரத்தங் குசபாசம் பரமதத்தி னிடைவீழா தெடுப்ப வீரந், தருகரத்து மருப்புவினைத் துரிசறுப்ப மோதகக்கை சைவத் தெய்வ, வொருமதத்தின் சுவைநிறைக்கு மும்மதச்செண் பகக்களிற்றை யுளத்துள் வைப்பாம்.

### முதலாவது:—உமைதிருவவதாரச் சருக்கம்.

தேகமார் மன்னுயிர்கள் சுவர்க்காதி போகமுண்டுசேட முண்ணும், போகபூ மியின்வரம்பு தருமமெனும் பயிர்வளர்க்கும் பொழிற் கோர் வேலி, யோகமா தவர்தவத்தின் விளைவுபனிக் காலயமூ வுலகுக் காணி மாகமார் கடவுளரும் வரநதியு நல்லறமும் வளரத் தாணி. (க)

தாருதிக்கு மணியுதித்தும் பொன்பூத்தும் புவிமடந்தை தரிக்கு மோலி, காருதிக்குந் தொறுமவட்கு வாருதிக்குங் களபமுலை கலையாய்ச் சூழ்ந்த, வாரிதிக்கு நீருதிக்கு நாலுதிக்கும் வரைகடவா மான வேலி, தேருதிக்கு மழற்கதிரைச சீதமதி யாக்குபனிச் சிகரக் குன்றம். (உ)

பொன்னிறு லயன்கமலப் பொகுட்டாகும் பசுந்தழையாற் பொதுளுஞ் சோலை, துன்னிநாற் றிசைநிரம்பி மால்வளர்பச் சால்போலுந் துகினத் தோய, மன்னலாற் பரமனுறை வடகயிலை வரைநிகர்க்கும் வடிவு மூன்று, முன்னினார் பனிச்சிமைய வுயர்வரைமுத் தேவியரு முறமு மாதோ. (௩)

வேறு.

அறைகு திக்கும்வெள் ளருவியை யானைமத் தகமேன்
மிறைவ ருத்தும்வா ளரியெனக் கரியினம் வெருவும்
பிறைவ ளைப்பெருந் துண்டத்துப் பெரும்புயல் வரையைச்
சிறைவி ரித்தசிம் புள்ளென முழைபுகுஞ் சீயம். (ச)

யாவ ரம்பையர் கண்ணினர் நண்ணின ரிவரைத்
தேவ ரம்பையர் பணிவது சிறுகுடிச் சிறூர்பாற்
காவ ரம்பையில் கனியளித் திமையவர் ககனந்
தாவ ரம்பையின் கனிகொளு நனிகொண்மாச் சயிலம். (ரு)

சமைய மந்தர மத்திம தாரம்வண் டிசைக்கு
மமைய மந்தரத் தசுணமா வலமரு மடவிச்
சிமைய மந்தரத் தவருறை குலவரை தெரிப்போ
ரிமைய மந்தர மென்னலான் முதல்வரை யிதுவே. (சா)

வேறு.

மேருவார் மந்தர நிடத வெற்புளார்
பாருளார் திசையுளார் பாத லத்துளார்
சூருளார் கற்பகச் சோலை யார்முதல்
யாருளா ரவர்தவத் தெய்து மால்வரை. (எ)

கடும்புலி முழையிடைக் கலைகள் காறிமிர்த்
தொடுங்குமே யரிகளுங் கரியு மோருழைப்
படும்பணி மயிற்சிறை யடையும் பானுவு
நடுங்குறப் பொழிபனிச் சிசிர ஞாட்பினால். (அ)

அகலிடம் விசும்புதொட் டமூன்று காய்கதிர்ப்
பகலவன் றேர்ப்பரி பச்சை யாயது
முகநிகர் மதிக்கலை முடங்கு பான்மையுஞ்
சிகரவெம் பனிவரைச் சீதத் தாலன்றோ. (கூ)

தடவரைத் தென்றிசை சார்ந்த வெய்யவன்
வடபெருந் திசையினும் வருந்திச் செல்வது
குடமுறு பனிவரைக் குளிர்பொ றுதுபோய்
மிடல்வட வனலின்மெய் வெதுப்ப வேகொலாம். (க0)

கற்பக மிசைப்படர் காம வல்லிகள்
வெற்பக மெறிபனித் திவலை வேய்ந்தன
நற்பகக் கொடிச்சியர் நாணிற் கோத்திடும்
பொற்பக நித்திலக் கோவை போலுமால். (௧௧)

தமையர மடந்தையர் தணப்ப வானவ
ரமையன தோள்பிரிந் தலக்க ணெய்துவார்
சிமையமார் தவத்திறற் சேர்வ ராதலா
லிமையவர் துதிசெயு மிமய மால்வரை. (௧௨)

வேறு.

அந்தமலைக் கரசானு னலான சிற்றுதரக்
கந்தமலை மலர்க்குழலாண் மேனகா வலன்வானோர்
வந்தமலை புரிகோட்டு மைந்நாகன் றனைமகவாய்த்
தந்தமலை தனைப்பெறுவா னெடுங்காலந் தவம்புரிந்தான். (௧௩)

அக்கண்ண னொருகண்ணை யடிசாத்த வருள்புரியு
முக்கண்ணன் முடிசாத்து மறுகண்ணன் முளரியந்தாண்
மெய்க்கண்ணன் புறநோக்கி விரதமுயல் வெற்பனுக்கே
யெக்கண்ணு மெய்தாத தவப்பயன்வந் தெய்தியதால். (௧௪)

வேறு.

மன்னவன் றவமதோ மண்ணும் வானமு
முன்னர்செய் சுகிர்தமோ முதுவெற் போர்சுனைப்
பொன்னவாங் கமலமென் பொகுட்டி லீன்றதா
லின்னபே ருலகெலா மீன்ற செல்வியை. (௧௫)

சேயிழைக் கவுரியைத் தெய்வப் பங்கயக்
கோயிலிற் காட்சிகண் குளிரக் காண்குற
வாயிர நயனமோ வனந்த நாட்டமோ
மேயின னற்றைநா ளிமய வேந்தனே. (௧௬)

அடுத்தன னுவாமதி கண்ட வாழிபோ
லெடுத்தனன் பொன்னையீன் றெடுத்த வாரிதி
கடுத்தனன் கயிலையார் வாழ்வைக் கண்ணுறீஇக்
கொடுத்தனன் மேனையாங் கொம்ப னுள்கையில். (௧௭)

வாங்கினள் செல்வியை வாங்கி வாழ்வுபெற்
றோங்கினள் பால்சுரந் துகள வார்முலை
வீங்கினள் களித்தனண் மேனை வானெலா
மேங்கின குரவைக ளெழுந்த பல்லியம். (கஅ)

வேறு.

இச்சை கூர வெடுத்தனண் மார்பணைத்
துச்சி மோப்பப் பசுநரம் போடியே
கச்சை மீறு கனகவள் ளத்தின்பால்
பச்சை வல்லி பவளத்திற் பாய்ந்ததே. (கசு)

புவன கோடியைப் போகசு வரவெனுங்
கவன வூசலிட் டாட்டிங் கவுரியைப்
பவன வானவர் தச்சன் பணித்ததோர்
சுவண மாமணித் தொட்டிலிட் டாட்டினள். (உ0)

சிலம்பு தண்டைகள் சில்லரிக் கிண்கிணி
யலம்பு கின்றதை யன்றடி நோமெனக்
கலம்பு லம்புற வோகடுந் தானவர்
தலம்பு லம்புற வோதவழ்ந் தாளரோ. (உக)

இறைய ளந்த படியிரண் டாற்சக
முறைய ளந்து வளர்ப்பவண் முந்துசெய்
யறம்வ ளர்ந்தது போலருண் மாமனப்
பொறைவ ளர்ந்தது போல்வளர்ந் தாளரோ. (உஉ)

வேறு.

வானநாட் டன்னமு மருள மால்வரைக்
கானமாப் பிடிகளுங் கண்டு நாணுறத்
தானமுந் தருமமுந் தவமுஞ் சைவமு
ஞானமு நடைபெற நடைகற் றுளரோ. (உங)

துற்றிய புவனங்க டுதையும் பேரண்ட
முற்றிலுஞ் சிற்றிலா முறையி லாடுவா
ளெற்றிலு மமைவதோ ரியைபு காட்டவோ
சிற்றிலு மாடினள் சிமைய முன்றில்வாய். (உச)

பாவையுங் கழங்குபொற் பந்துங் கிள்ளையும்
பூவையும் பயிற்றுதல் புந்தி செய்கலாள்
யாவையும் படைத்தளித் தழிக்குஞ் செய்கைதன்
றேவையும் பயிற்றுதல் சிந்தை யுன்னியே. (உரு)

வேறு.

பேதையார் பருவந் தன்னிற் பேருல குடையார் கொன்றைக்
கோதையார் சடில ஞானக் கொழுந்தையார் வத்தான் மேவ
மேதையார் விரதம் பூண்டு மேனையார்க் குணர்த்த மேனை
தாதையா ரலங்கன் மோலித் தந்தையார்க் குணர்த்தி னாளே. (உசு)

அழகின துறையுள் போல்வா யருந்தவங் கூடு மோநின்
மழலையம் பருவத் தென்று வழங்கின னிமவான் முக்கட்
குழகனை நினைவார்க் கென்று நினைத்தவை கூடு மென்றுள்
பழமறைக் கிழவி நோற்பப் பசும்பொனூற் சாலை செய்தான். (உஎ)

திலகமா மலைக்கு வேந்தன் றிருமக ளொருபெண் வாலை
மலர்கொய்யாள் சுனைபந் தாடாள் வல்லியர் குழுவிற் கூடாள்
குலமெலா மிழும்பூ தெய்தக் கொழுந்தவத் தனிமை பூண்டா
ளுலகெலாம் பரவு முக்க ணொருவனைத் தனிமை நீக்க. (உஅ)

சங்கநீர் படியுந் தோறுந் தவளமெய் வாணி போல்வாள்
பங்கயா சனத்தின் மேவிற் பதுமையை நிகர்வாள் சூலச்
செங்கையார் தம்மை நீங்காச் சிந்தையாற் கவுரி யாவாள்
மங்கைமெய்த் தவஞ்சேர்சிந்தை வயிரத்தால்வரைப்பெண்ணாவாள்.

அலைபுனற் றடஞ்சேர்ந் தன்ன மாகுவாள் கூல மேவி
மலைமிசைப் பிடியை நேர்வாள் வனத்திடை நிற்குங் காலை
நிலைமலர்க் கொம்பு போல்வா ணிட்டையி லிருந்தா லம்பொற்
சிலையினை நிகர்வா ளன்றிச் சித்திரம் போல்வா ளன்றே. (௩௦)

வேறு.

புலன்களைந்தையும் பொருத்திநாற் கரணமேற் புகட்டி
யலங்கு நாற்கர ணங்களை யுள்ளமு டமைத்துப்
பலன்செய் யுள்ளத்து ஞானமாம் விழியினைப் பதித்தாங்
கிலங்கு சோதியை நோக்கியேற் கண்முகிழ்த் திருந்தாள். (௩க)

மேனை யாரும்வெற் பரசனும் வியப்பவின் ணவரோ
டேனை யார்தொழ வெம்பிரான் றிருவுள மேற்ப
மோனை யார்வமே கொளுகொம்பா முதுதவப் பயிரை
வானை யோங்குற வளர்த்தனள் பனிமலை வல்லி. (௩௨)

வேறு.

உண்ணிலா வியபே ரன்பா லுளமெலா நிரம்பி ஞானக்
கண்ணிலா னந்த வெள்ளக் கடல்பரந் திமய மீன்ற
பெண்ணிலா ரமுதார் செய்யும் பெருந்தவப் பெருக்க மேறித்
தெண்ணிலா மதியம் வேய்ந்தார் திருவுள நிறைந்த தன்றே. (௩௩)

உடையநா யகியார் செய்யு முயர்தவப் பரிவு காண்பான்
சடையினின் மதியஞ் சூடித் தடங்கையின் மழுமா னேந்தும்
விடையினூர் கயிலை யாதி வெற்பினூர் பொற்பி னூழிப்
படையினூர் முதலோர் சூழப் பனிவரைச் சாரல் சார்ந்தார். (௩௪)

வந்தவா னவரை யெல்லாம் வரைப்புற நிறுவித் தாமோ
ரந்தண முதியோ ராகி யணிந்தமா மதிபோற் கூனுஞ்
சந்தமா நரையுந் தோன்றத் தவப்பொறை சுமந்து மேனிப்
பைந்தளிர் வாட நின்றாள் பணிதவச் சாலை சார்ந்தார். (௩௫)

சென்றபி னெழுந்து தாழ்ந்து சிவமறை யவரைப் போற்றி
யன்றவர்க் கியைவ நல்கி யாசனத் திருத்திக் கீழ்போய்
நின்றன ளிமயப் பாவை நேரிழை வதன நோக்கி
மன்றலங் கோதாய் மேனி வருந்திய தென்னே யென்றார். (௩௬)

தோழியர் பரவித் தூய வுணவொடு துயிலு நீக்கி
வாழியங் கயிலை மேய வரதனை மழுவ லானை
யூழியு முலகு நீத்த வொருவனைக் கருத்தி லுன்னி
யாழியி னமுத மன்ன ளருந்தவ முயன்றா ளென்றார். (௩௭)

பிடியன நடையும் வாலப் பிறையன நுதலும் வாய்ந்த
கொடியன விடையாய் மேனி குழைந்தபூங் கொம்பு போல்வாய்
வடிவமு மழகுந் தேம்ப வண்ணமும் வருந்த நோற்றல்
கடிமணப் பிலைய மேற்றுக் கடுநுகர்ந் தார்க்கோ வென்றார். (௩௮)

வியன்மறைத் தலைவர் கூற மெல்லியர் மொழித லாற்றார்
சயிலமா னருளான் மற்றோர் தலைமையாம் பாங்கி நோக்கி
யயன்முத லமரர் வீறு லடற்பலி கொண்டா ரண்ட
ருயிர்நிலை நிறுத்த வன்றோ வுண்டனர் விடத்தை யென்றாள். (௩௯)

அலைபொரு தடங்கட் பேதா யருமணம் புரிந்தா லம்பொன்
மிலைதரு நகர்நா டின்றி வெற்பிலோ புகுவா னென்றார்
கலைதெரி மறைநூல் வல்லீர் கல்வியின் பெருமை யீதோ
மலைமக ளாகத் தோன்றி யிகழ்வதோ மலையை யென்றாள். (௪0)

இப்படி யநேக கால மிமையவர் தவங்கள் செய்தார்
மைப்படி விழியா யீசன் வந்திலன் வருமோ வென்று
ரப்படி யிரங்கா ரல்ல ரடியவர்க் கெளியார் சித்த
மொப்பிலா தொழிந்தா ரேனு மொழிகல முயிரோ டென்றாள். (௪௧)

மறைவலீர் போந்த வாறு வழங்கிநீர் போமி னென்ன
வறைதலு மமலர் நோக்கி யணங்கியாம் போந்த வாறு
பிறைநுதற் கருங்கட் செவ்வாய்ப் பெய்வளைத் தைய லாளை
நறைமலர் மாலை சூட்டி நன்மணம் புரிதற் கென்றார். (௪௨)

கறையணி கண்டத் தண்ணல் கன்னிதன் பொருட்டாற் கொண்ட
மறைவடி வுணராள் சொல்லு மறைமொழி யென்ப தோரா
ளிறைமக ளிதய மாழ்கி யிருசெவி புதைத்து வெட்கி
நறைமலர் வதனங் கோட்டி நாணமுற் றகன்று போனாள். (௪௩)

மடவர லகன்ற காலை மற்றுமோர் விளையாட் டாக
விடமணி மிடறுங் கங்கை வேணியுங் கரந்து போந்த
கடவுள்வே தியனார் தாமுங் கரந்தனர் திகைத்தாள் வல்லி
யிடம்வலந் தேடிக் காணா ளிறைவனென் றிரங்க லுற்றாள். (௪௪)

வேறு.

ஒன்றே பலவே யுலகெலா மோங்குகுணக்
குன்றே கடலே கொழுங்கருணைப் பேராறே.
நன்றே யரிதேடு ஞானமலர்த் தாள்சிவப்ப
வின்றே தமியேற் கெழுந்தருள வேண்டிற்றே. (௪௫)

பொன்னே மணியே பொருளே பொருண்மறையின்
முன்னே நடுவே முடியா முழுமுதலே

மின்னே யெனத்தோன்றி விண்ணிலே போய்மறைந்தா
யென்னே தமியே னியற்றும் பிழையேயோ. (சசு)

காரா யழகொழுகு கந்தரத்தா யந்தரத்தா
யாரா வமுதேயென் ஞானந்த மாகடலே
நீராய் வெளியாய் நெடுங்காலாய் வெங்கனலாய்ப்
பாரா யொளியாய்ப் பரந்தாய் பரமேட்டி. (சஎ)

என்றாள் புகழ்ந்தா ளிமயவரைப் பூம்பாவை
நின்றா ளயர்ந்தா ணெடுநீல முத்துகுத்தாள்
சென்றாள் பலதிசையுந் தேடி யலமருங்கான்
மன்றாடும் பாதர் மழவிடைமேற் றோன்றினார். (சஅ)

பனகமணி திருமார்பும் பவளம்போற் படர்சடையுந்
தினகரோ தயவடிவுந் திருநுதலின் மேல்விழியு
மனவரத நடம்புரிவா ரபயவர தமுங்காட்டிக்
கனவரையின் றிருமகளார் கண்களிப்ப முன்னின்றார். (சகூ)

பூணார் நகிலவரைப் பூம்பாவை நோன்பிருந்து
நாணாளு மேனி நலிந்தாண் மெலிவகலச
சேணார் கயிலேச செழுந்தேனை மாலயனுங்
காணாத தெள்ளமுதைக் கண்ணான் முகநதுண்டாள். (ருo)

தாராற்றுங் கொன்றைச் சடையா யெனையுடையா
யாராற்று வார்நின் னடியா ருனைப்பிரிந்து
காராற்றுங் கண்டா கரையேற்றாய் நின்காதற்
பேராற்றில் வீழ்ந்தேன் பிரிவாற்றேன் யானென்றாள். (ருக)

வேறு.

கொந்துதா ரிமயச் செல்வக் கோதையாள் பயந்த கோதாய்
முந்துநீ தவங்கள் செய்த முறையெலா முவந்தோ நின்னை
வந்துநாம் வதுவை செய்வோம் வருந்தலென் றயன்மால் சூழ
விந்துநா தாந்த மானார் வெள்ளியங் கிரியிற் போனார். (ருஉ)

உமைதிருவவதாரச் சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது:—திருமணச் சருக்கம்.

தனிவரைச் சாபத் தார்சொற் சாபத்தா ரெழுவ ராய
முனிவரை வரித்து நோக்கி முகிழ்முலை யிமய மாதை
நனிவரை வதுவை சூட்ட நயந்தனம் விரைவி னீவிர்
பனிவரை வேந்தன் முன்போய்ப் பகருதிர் வருதி ரென்றார். (க)

ஆங்கவ ரிமவான் பக்க லணைதலு மெழுந்து போற்றித்
தேங்கமழ் மலர்க ளேவிச் சிறந்தவா சனத்தி ருத்திப்
பாங்கெழு வரையைச் சூழும் பரிதிபோல் வலம்வந் தேத்தி
யீங்குமெய்த் தவத்தீ ரெய்த வெத்தவம் புரிந்தே னென்றான். (உ)

பின்னரு மவரை நோக்கிப் பிரமனே ழுருக்கொண் டன்னீர்
பொன்னகர் கழிப்பி யீண்டுப் போந்தவா றென்னே யென்னக்
கன்னலங் கனியை நின்பாற் கற்பகக் கொழுந்தன் னானை
நன்னர்பூங் கயிலை யார்க்கு நல்குதி நயப்பா லென்றார். (௩)

தந்தையா மிமவா னிற்பத் தனையன்மைந் நாகன் போந்து
முந்தையார் குலமே தென்ன மொழிதலு முனிவர் நோக்கி
யெந்தையா ருலக மெல்லா மீன்றுகாத் தழிப்பார் யார்க்குந்
கொந்தையார்கொன்றைவேய்ந்தார்கொடுத்ததுகுலங்காணென்றார்.

மேனையா ரதனைக் கேளா வியன்மகட் கொடுத்தார் தம்மைத்
தானையா லரிந்து ளார்க்கோ சம்பந்த மெனலு மோனர்
தேனையார் மொழியாய் தத்தந் திகழ்மனைத் தீப மேனு
மோனையாய் முத்தங் கோடற் கிசையுமோ மொழியா யென்றார். ()

தன்பெரு மனைக்குஞ் சேய்க்குந் தகவுரைத் திமய வேந்த
னென்பெருங் குலத்தில் வந்த வெழின்மலர்க் கொம்ப னானை
நன்பெருங் கயிலை யாதி நாதனே வேட்ப தானான்
முன்பெருந் தவமே யென்றான் முனிவரர் மகிழ்ந்து நோக்கி. (௬)

பூளையார் கரந்தை வேணிப் புனிதர்க்கும் பொருப்ப னீன்ற
வாளைநேர் விழியி னாட்கு மங்கலத் திதிநாள் வாரம்
வேளையே யோரை யாவும் விதிமுறை யுரைத்து மேலோர்
காளையே முகுர்த்த மென்ன நயந்தனர் நவின்று போனார். (௭)

போந்தனர் முனிவர் வெண்பொற் பொருப்புறை செம்பொற் கோயில்
சேர்ந்தனர் நந்தி யுய்ப்பச் சிவபிரான் சன்னி தானஞ்
சார்ந்தனர் நிகழ்ந்த வாறு சாற்றின ரிமவான் செல்வி
மாந்தளிர்ச் செங்கை பற்றி மணக்குநா ளுனை யென்றார். (அ)

பண்ணவ ருரைப்ப நாதர் பசுந்துழாய் முகுந்தன் வேதா
விண்ணவர் தலைவன் மேலை யுருத்திரர் முனிவர் சித்த
ரெண்ணரு முலகத் தாரு மேந்திழைக் குழாத்தோ டங்கு
நண்ணுதற் கருள நந்தி நம்பிரான் மனனஞ் செய்தான். (கூ)

அங்கவ ரிமய மீன்ற வமுதனை யானை நாளைத்
திங்களங் கண்ணி வேய்ந்த தெய்வங்கண் மணுளர் வேட்கு
மங்கல மென்று தோன்ற வகைபெறும் புவனந் தோறும்
பொங்கொலி முரச மார்ப்பப் பொருக்கென வெழுந்தார் மன்னோ. ()

வேறு.

பங்கை யாசனத் திருவுறை மார்பினன் பங்கையா சனச்செல்வ
னங்கை வாரணத் திந்திரன் பாவக னந்தக னிருதேசன்
பொங்கு வார்கடற் கிறைபவ னாதிபன் பொருவிடை யீசானன்
றிங்கண் மாதஙகள் வருடங்கள் வாரங்க டிதிகணாள் கரணங்கள். ()

அண்ட மூலகா லாக்கினி யுருத்திரர் பதின்மர்மற் றவர்போல்வார்
கொண்ட பூதநாற் கணத்திர ளாடகர் குறட்படைக் கூர்மாண்டர்
மண்டு நாலெழு கோடியா மிருணிலம் வளர்க்குமட் டகராவார்
கண்ட பாதலம் புரக்குமா மணிமுடிக் கணபணத் தூரகேசர். (கஉ)

அண்ட கோளகை யுச்சிய ருருத்திர ரைந்துநூற் றுவராவார்
கொண்டல்வண்ணனை விரிஞ்சனைப்பணிகொள்வார் குரகதமாசாத்தர்
சண்ட மால்விடைப் பசுபதி யுருத்திரர் தரிக்குமீ ரைஞ்ஞூறுங்
கண்ட பேரணி கத்திர ருருத்திர கணப்பெரும் படைவீரர். (கங)

நூறு கோடியர் பதினொரு கோடியர் நூற்றுவர் நூதற்கண்ண
ராறு கோடியி னிரட்டியர் நடத்துதே ராதவ ரவர்மேலும்
வீறு கோடியி னிரட்டியர் மருத்துவர் வசுக்களாம் விழுச்செல்வர்
கூறு நாலிரு கோடியர் மூன்றரைக் கோடிய பெருந்தீர்த்தம்.

மூல நான்முக னடங்குற வவன்முரி புருவத்தி னிடைத்தோன்று
நீல லோகிதர் முதலினோர் மூவிலை நெடியவேற் கங்காளர்
சூல பாணியர் கேத்திர பாலர்மெய்ச் சுவாவினர் நிருவாணக்
கோல மேயவர் பசிளங் கஞ்சுகக் கொற்றவ ரிருநால்வர். (கரு)

கருது பாற்கட லுண்டுதன் னருட்கடல் கண்ணனுக் கருள்செய்தோ
னரிய மாமறை வியாதமா முனிசுகன் றதீசியத் திரியென்பான்
பிருகு ரோமசன் கண்ணுவன் பராசரன் பெருந்தவத் துருவாசன்
சரத நாரதன் கபிலன்மா சத்தியன் சதாநந்தன் பரத்வாசன். (கசு)

கித்த மாதவர் தந்திரர் கருடர்கிம் புருடர்கின் னரர்போகர்
வித்தி யாதரர் சாலக டங்கடர் நிசிசரர் வேதாளர்
சித்தர் விண்ணவர் மாகசா ரியர்தயித் தியர்கட வுளர்யோகர்
சத்த நாரிய ரட்டமா சித்திகள் சத்தமா முகில்வேந்தர். (கஎ)

அனக நீள்சடை யகத்தியன் புலத்திய னங்கிரா மார்க்கண்டன்
மனநி லைப்பெருங் காசிபன் கவுதமன் வசிட்டனு மெழுவோர்கள்
சவக னேச்சனற் குமாரனே சனுதரன் சனந்தனென் பவர்நால்வர்
பனக நீண்முடிப் பதஞ்சலி கால்கையிற் கண்பெறு புலிப்பாதன். ()

ஒருதி னம்பொழு திரண்டுமுக் காலநான் குயர்மறை யைம்பூத
மிருது வாறுட னெழுபெரு நதிக்குல மெண்கிரி நவகண்ட
மருமை யெண்டிசை யெழுதடம் புவனமா றங்கமைம் புலனான்கு
கரண முக்குண மிரண்டற மொருபெருங் கதிர்மதி விதிமாதோ. ()

சரிதை யாதிய சதுட்டய மந்திரந் தத்துவம் புவனங்கள்
வருண பேதங்கள் கலைகள்வன் பதங்களா மத்துவா வகையாறுந்
திரும டந்தைபா ரதிபுலோ மசைமுதற் றெய்வமங் கையர்யாரு
மிரத மூர்திக ளுகைத்தனர் கயிலையி லெய்தினர் விசும்பாரு. (உ0)

புவனம் வானமும் புதைபட மீமிசைப் புடைபரந் தாகாய [ர்
கவன ரேமுதல் யாவருந் தாழ்ந்தெழீஇக் கயிலைமால் வரைசூழ்ந்தா
குவலை யந்தொடுத் தண்டகோ ளகையெலாங் கோத்தெழு முகவாரி
சிவபிரான்பெருந் திருமலைபணிந்துபோய் வலஞ்செயுஞ்செயன்மான.

ஒத்தெ ழும்பதி ஞன்குபே ருலகமு மொருமுகங் கொடுபோந்து
மத்து ணைக்கெலா மவரவர்க் கிடங்கொடுத் தண்ணலார் கயிலாயம்
பத்தி முத்தமிழ்ப் புலவருக் கருள்சங்கப் பலகையொத் ததுமேலுந்
தத்தி யண்டமும் பூண்டதோர் பாரிடத் தலைவனைத் ததுமாதோ

எயில்சி தைத்தவில் லாதலா லெம்பிரான் றிருக்கடை யினின்
மேருச், சயில நிற்றல்போ னின்றபொற் கோபுரந் தனைத்தொழு தெ
ழுந்தேகிப், பயின்ம ணப்பெருங் குழுவெலா நிறைதலாற் பரம்பர
னுடன்மேவிக், கயிலை நற்கிரி யுலகெலா மீன்றருள் கவுரியு நிகரா
மால். (உா)

உவரி மாலய னுருத்திர கணமுத லுயர்ந்தவர் குழுவெல்லாஞ்
சிவபி ரான்றிரு வாய்தலின் மொய்த்தனர் தேன்குடத் திரளீப்போ
லவர்கள் பூதர்பா லவர்கண நாதர்பா லறிவிப்ப வவரேகி
மவுன நந்திபா லுணர்த்தலு மாங்கவன் வள்ளலார்க் கறிவித்தான்.()

தருகவீண்டென வருளலும் வேத்திரத் தனிப்பெரும் படையோச்சி
வருக வென்றவன் மரபினு லுய்த்திட வந்திறைஞ் சலும்வாக்கா
லருமை நோக்கின லருட்குறு முறுவலா லவரவர்க் கருள்செய்தா
னொருவ னகிமற் றுலகெலா மாகிநின் றுயிர்க்கெலா முயிராவான்.()

எம்பி ரானிடத் திவ்வண நிகழ்தலு மிமயமால் வரைவேந்தன்
கொம்ப னண்மண வோலையுய்த் தலுங்குல வரைக்கிறை யவர்யாரு
மம்பு ராசிகட் கதிபர்தங் கணங்களு மருண்முனிக் கணம்யாவும்
பம்ப யால்வரைத் தெய்வதக் குழாங்களும் பரவைபோற் பரந்தன்றே.

கமலை பூமகள் பாரதி வயிணவி காடுகொள் பிரமாணி
குமரி ஷ்ரீமந் தாகினி யோகினி கொற்றவை யயிராணி
யமல மேனகை யுருப்பசி திலோத்தமை யரம்பையர் குழுவெல்லா
முமையை வந்தடி தொழுதெழீஇத் திங்கள்கு ழுடுக்குல மெனச்சூழ்ந்தார்.

நகர மாடங்கள் கூடங்கள் கோயில்கண் ஞாயில்கள் செய்குன்றஞ்
சிகர கோபுர மாளிகை சூளிகை தெற்றிசித் திரகூட
மகர தோரணங் காவணம் பூவண மன்றநா டகசாலை
யகர மாயிர கோடிகள் வகுத்தன னமரர்கம் மியன்மேலும். (உஅ)

மேடை மேனிலை யுபரிகை வேதிகை விரவுசா ளரங்கோடி
மாடை மாமதி மணியினு லரமிய மலரினுன் மணப்பந்த
ராடை நீள்கொடி படங்குசா மரைகுடை யணிகொள்பூ ரணகும்ப
மோடை மாகரி யாளிகண் மீளிக ளுருக்கள்பற் பலகோடி. (உகூ)

இரச தத்தபூ கதம்வயி டூரியத் தெழிலரம் பைகணட்டி
மரக தத்தினுற் பாசடை காய்க்குலை வகுத்துநற் பசும்பொன்னுல்
விரவு மென்பழுக் காய்பழுத் தாறுவெண் ணித்தில விரிபாளை
புருட ராகத்தாற் பவளமா மணியினுற் பூங்கொத்து மமைவித்தான்.

மண்ட பங்களு மாளிகைப் புறங்களு மாடகூ டமும்வான்மேற் [றம்
கொண்ட கோபுர நிரைகளும் வரைகள்போற் குழுமலாற் பணிக்குன்
பண்டை யாதியம் பரனைவேட் டவனுறை பரைதிரு விளையாட்டா
லண்டம்யாவையுமெடுத்தெடுத்தடுக்கியசிற்றில்போன்றதுமாதோ. ()

தெருக்கள் பற்பல வமைத்தன புவனமாத் திரள்வகுத் தன போலு, முருக்கள் பற்பல வகுத்தன வுயிரெலா மொருங்குதித் தன மானும், பொருப்பி லிங்கிவை வகுத்தவான் கம்மியன் பூவின்மே லயன்போன்று, னருத்த வீதியி லணியினுக் கணிசெய்வா ரயன் கொடித் திரள்போன்றூர். (௩உ)

வல்லை தோரணந் தழைதொடுத் தியற்றுவார் மாத்தழை வன மாக, முல்லை மல்லிகை சண்பக நாற்றுவார் மொய்ம்மலர்ப் பொழி லேய்ப்ப, வெல்லை மொய்த்தெழு கொடிபல நிரப்புவா ரெங்கும்வா னதிமானத், தொல்லை மீனெளிர் தூய வானகமெனச் சுடர்விளக் கணிசெய்வார். (௩௩)

அரியபூ நாண்மலர்த் தேன்களாற் குறிஞ்சிமேற் குறிஞ்சியா ன துசாந்தான், மருத மானது முல்லையே நிகர்த்தது மாதர்மெய் விளை யாட்டாற், பரவு மாமணித் திரள்களாற் பாலைப்டு பாலையொத் தது பன்னீர், நிரவி வீசலா னீர்வளர் நெய்தலே நிகர்த்தது பணிக்குன் றம். (௩௪)

மலரி னுற்கரும் பாற்சுரும் பான்மட மாதரா னடைக்காவாற்;
குலவு தென்றலாற் கொடிநிரைத் திருண்டதாற் கோமத னுயிர்மீட்

பான், சிலையு நாணும்வெங் கணைகளும் வேழமுஞ் சேனைதேர் படை
வீடு, முலக நாயகி திருமணச் செவ்விபார்த் ,தொருங்குநிற் பனமா
னும். (ந.ரு)

இறைத்த சுண்ணமுஞ் சிதறும்வெண் பொரிகளு மெடுத்தெறி
விடுபூவு, நிறைத்த மாலையி னுகுத்ததண் மலர்களு நிரைத்துவீழ் பூந்
தாது, நறுக்கி யொப்பிடு சரங்களிற் சிதறிய நவமணி களும்பொன்
னுங், குறித்த குப்பையாற் பனிவரை யனந்தமாங் கொடுமுடி யுடை
த்தம்மா. (நசு)

இமநெ டுங்கிரி காவல னின்னண மெழில்வரை யணிசெய்யக்
கமழ்ப சுந்துணர்க் கொன்றையந் தொடைபுனை கபிலையம் பெருமா
னைத், தமனி யப்பணி கொடுமண வணிசெயச் சதுமுக னெதிர்வே
ண்ட, வமரர் தம்பிரா னணிந்தமை காண்கென முறுவல்பூத் தருள்
செய்தான். (நஎ)

புலவு நாறுகோட் டாம்பல்வெம் புலிதரு போர்வையு முட்சாத்
துங், கலிகொள் பாரெலா மொருபணத் தேந்திய கணபணு டவிக்
கச்சு, மொலிய லாகிமே லொளிறுபீ தாம்பர வுத்தரி கமுமாகி, வலி
ய காஞ்சனப் பட்டிகை யாகவு மலிந்துதோன் றியவன்றே. (நஅ)

காதிற் குண்டல மார்பணி சரப்பணி கண்டிகை திருத்தோளின்
மோது பொன்வளை கங்கணம் பவித்திர மோதிரங் கணையாழி
போதிற் பொங்கிய வாசிகை கரோடிகை புனைதிரு வரைநாண்கள்
பாத நூபுரப் பொற்பணி யாயின பணுமுடிப் பணியெல்லாம். (நகூ)

தாம ருப்பொடு மீனலோ சனம்புடை தொடுத்தவெண் டலைமாலை
காமர் பொன்னணி சன்னவீ ரம்பல காசணிப் பணியாக
மீம யானத்து வெண்டிரு நீறுவெண் கருப்புர நறுஞ்சாந்தா
வாமை யோடுபொற் பதக்கமா வென்பெலா மாரமா யினமாதோ. ()

கண்ணின் மேற்றிகழ் கண்ணெளிர் தருங்குறி கவினுதற் குறி
யாக, வண்ணன் மேறகுழை மகரகுண் டலத்தொடு மணிவளைத் தி
ருத்தோடும், விண்ணின் மேற்பொலி கதிரென நிலவென விளங்கு
பே ரொளிவீச, வண்ண மாமணித் திருமுடி யானது வளர்சடை
முடியம்மா. (சக)

வேறு.

மணிப்பணி யங்கதப் புயமும் வாய்ந்தபொன்
னணிப்பணி யகலமு மகலங் காண்குறத்
தணிப்பணி தகைமையாற் சலித்திட் டான்சகம்
பணிப்பணி யகிலமும் பார்த்த பார்வையான். (சஉ)

பூதநா யகன்முடி தொடுத்துப் பூணெலாம்
வேதநான் முகன்விழி குளிர்ப்பக் கண்ணுறீஇப்
பாதமேற் பணிந்தெழீஇப் பண்டு தானுந்தன்
றாதையும் பெறவொணுத் தவம்பெற் றேகினன். (சங)

வேறு.

கொம்ப னுள்பெரு மணநிறை வேறவா னிமையவர் குறைதீர
வெம்பி ரானெழுந் தருளுக தருணமென் றிமயவெற் பிறையேகித்
தம்பி ரான்றனக் குணர்த்தலுங் கயிலையஞ் சயிலநின் றடலேற்று
நம்பி ரான்புறத் திவர்ந்தன ருயர்கண நாதர்போற் றியநாதர். (சச)

நீல லோகித ராடக ரட்டகர் நிமலர்நூற் றுவரண்ட
மேலை யுச்சிய ரண்டமூ லத்துறை விமலருத் திரர்யாரு
மாலும் வேதனுஞ் சயசய சயவென வரதனைப் புடைசூழ்ந்தார்
கோல மேருமால் வரையினைச் சூழ்தரு குலவரைத் திரண்மான. ()

பிந்து பல்கண நாதரும் பூதரும் பெருந்திரைக் கடலேய்ப்ப
வைந்து பல்வகை வாத்திய முழக்கொலி யந்தர வெளிபோர்ப்ப
விந்து வைத்தவர் திருமணப் பெருங்குழா மெண்டிசைக் கடங்காதே
தந்த மைத்தெளிந் தவர்பிரா னருளெனச் சகமெலாங் கடந்தேக. ()

மோத கம்பணைக் கோடுபா சாங்குசந் தரித்துமூ டிகமேறித்
தாதை தன்மணத் தங்குர மெனமுனர்த் தந்திமா முகனேக
வேத பாரகர் வாழ்த்தொலி முழங்கிட விஞ்சையர் புகழ்பாடக்
கீத கின்னரர் தும்புரு நாரதர் கிளரிசை யமுதூற்ற. (சஎ)

இந்தி ரன்குடை நிழற்றிடப் பாவக னெடுத்திட நறுந்தூப
மந்த கன்படை தாங்கவீ சானன்வன் றடைப்பைகைக் கொளவூதை
முந்து மாலவட் டங்கொடு சுழற்றமுந நீர்க்கிறை துளிதூவச்
சிந்து பல்கொடைத் திரவிய மெடுத்தெடுத் தேந்திட வளகேசன்.()

நிருதி பாதுகை சுமப்பமா நாகங்க ணிரைமணி விளக்கேந்தப்
பரிதி சோமரிரி வர்த்திகை பிடித்திடப் படிவுர்பல் லாண்டோதச்
சுருதி யாயிர நாமமேத் தெடுப்பவான் சுரர்கள்பூ மழைதூவ
விருது நாள்களுங் கோள்களு நிமித்தமு மேவிய பணிகேட்ப. (௪௧)

பனிவ ரைக்கிரி பொழிதல்போ லிமசலம் பண்ணவர் புடைதூற்றக்
கனிமொ ழித்திர ளரம்பையர் தமனியக் கவரிகா லசைத்தேக
வினிய மாலய னிருபுடை காப்பமற் றிமையவர் புறங்காப்பப்
புனித நந்திதன் கணத்தொடும் வேத்திரப் படையொடு முன்போத.

அருமை நாயகன் வருகின்றா னடிமுடி யரியய னறியாத
பெருமை நாயகன் வருகின்றா னுலகெலாம் பெற்றருள்பெருமாட்டி
திரும ணஞ்செய வருகின்றா னுதல்விழித் தெய்வங்கண்மணவாளன்
வருகின் றான்வள நிறைவொடு குறைவிலாவாழ்விறன்வருகின்றான்.

அமரர் நாயகன் வருகின்றா னலமுண் டமரர்தே வியர்க்கெல்லாந்
தமது மங்கலந் தத்தமக் கருளிய தனிமுதல் வருகின்றா
னிமல நிட்கள நிராமயன் வருகின்றா னினைப்பவர் மலமாயைத்
திமிர பாற்கரன் வருகின்றா னெனப்பல சின்னங்கள் பணிமாற. ()

படவி சூழ்தரு பெருந்திரைக் கடலெலாம் புறக்கட லொடுந்தாவிப்
படரு காந்தநாள் வெள்ளியங் கிரியினமேற் பானுவா யிரகோடி[ளத்
சுடர்தழைத்திடத் தோன்றியதெனமணத் தொகுதியாம் பெருவெள்
திடைநி லைத்துமால் விடையின்மே லெம்பிரானெழுந்தருளியவேலை.

வடபெ ருங்கிரிக் காவலன் மந்தர மன்னவன் வடவிந்தத்
தடவ ரைக்கிறை கந்தமா தனத்திறை சக்கரக் கிரிவேந்த
னிடத வெற்பின னேமகூ டத்திறை நீலவெற் பினனாதி
யடல்வ ரைக்குல வேந்தரு மெழுகடற் கரசரும் புடைசூழ. (௪௫)

அம்ம லைச்சிலை வளைத்தவர் புயமலை யதிசயந் தனைக்காண்பா
னெம்ம லைக்குலங் களுமெதிர் போந்தென விமயமா மலைவேந்தன்
மைம்ம லைப்புர வலரொடு மருகனுக் கெதிர்கொடு மலர்தூவிச்
செம்மலைப்பணிந் தினியனமொழிந்துதன் செழுமலைப்பதிசேர்ந்தான்.

ஈசர் நற்றிரு மருமக ளுகவந் தெய்துறத் தவஞ்செய்தான்
பாச னத்தொடு மெதிர்பணிந் தேகலும் படர்விடைக் கொடியாட
நாச மில்லவ ரிமவரை வீதிவாய் நகர்வலஞ் செயப்போந்தார்
வாச நற்பதி னுல்வகைப் புவனமுந் தமைவலஞ் செயமாதோ. (ருசு)

வேறு.

பண்க ளித்த பணிமொழிச் செய்யவாய்
வண்கி ளிக்குலம் போல்பவர் வள்ளலார்
விண்க ளிக்கு மிடற்றெதிர் நோக்கினர்
கண்க ளித்தனர் கார்கண்ட தோகைபோல். (ருஎ)

கார்த்த பூங்குழல் கட்டழ குக்கெலா
மோர்த்த பேரெழி லாள ரிவரென்பார்
தீர்த்தன் மேனியுஞ் சேயிழை மேனியும்
பார்த்த கண்கள் பறிப்பரி தாமென்பார். (ருஅ)

அண்டர் நாத ரழகினுக் கோர்குறை
கண்ட மீது கறுப்புள தாலென்பார்
வண்டு வார்குழன் மாதெழில் பார்க்கினு
முண்டு சிற்றிடை யாற்குறை யொன்றென்பார். (ருகு)

மண்ணின் மேற்புனன் மேல்வன்னி மாருதம்
விண்ணின் மேலடங் காவுரு மேவினர்
பெண்ணின் மேலவள் பேரெழில் காணவோ
கண்ணின் மேலொரு கண்படைத் தாரென்பார். (சுo)

சங்கு சோர்வதுந் தாழ்குழல் சோர்வதுந்
தொங்கன் மேகலை சோர்வது நோக்கலா
ரங்க ணெழி லாரா வமுதினை
நுங்கு வாரென நோக்குவர் நோக்கினல். (சுக)

காய்த ரும்பிறை மாமுடி காட்டியே
மோய்த ரும்பெரு மோகத்தை நல்கினர்
சாய்த ருந்தொடி கொண்டனர் தக்கவோ
வாய்தி றந்தொரு வார்த்தைசொல் லாரென்பார். (சுஉ)

சுழிகு லாமுழுந்தித் தோகையன் னீர்நமைக்
கழிவி லாதுயிர் காத்தலு மோனமோ
விழியி னுன்மத வேளையும் வென்றுளார்
மொழியி னுற்சக மூன்றும்வெல் வாரென்பார். (கா௩)

தூய சோதி யருள்சுரக் கின்றகண்
காயு மோவிவர் கட்டெழில் காணவே
போய மாரன் பொறுமையின் மாய்ந்தனன்
வேயுங் கண்ணழல் வெந்தமை போலென்பார். (கா௪)

ஆர மாதவஞ் செய்ய வயர்கின்றோம்
வீர மாதவிர் வெம்புயத் தண்ணலைச்
சார மாதவன் றங்கைநற் கங்கைபோற்
சேர மாதவஞ் செய்திலம் யாமென்பார். (கா௫)

நுதலைக் கண்டு நுடங்கிய கூன்மதி
மதலைத் தார்முடி வந்தெமைக் காயுமான்
முதலைச் சேர்ந்து கலுழனை மோடனம்
விதலைப் பாந்தள் விளைத்தமை போலென்பார். (கா௬)

வஞ்சி கைவளை போம்வழி மற்றுமோ
ரஞ்சொ லாளை வினவ வவளுந்தன்
னெஞ்சு போம்வழி தேடவு னேடிப்போய்த்
துஞ்சல் போக்கினின் றுளொடு சொல்லுவார். (கா௭)

போது சாந்தமும் பூரண கும்பமு
மாதர் தாங்குபொன் மாடம்பு காமலே
மீது நாதனை யுங்கொடு வீதிபோ
மீது மால்விடை யென்பது மெய்யென்பார். (கா௮)

அஞ்ச லென்ற கமலமெய் யாரருட்
கஞ்ச மாம்பொதுக் காட்சியைத தம்மன
முஞ்ச லாட வுமக்கெமக் கென்னவே
விஞ்சு பூசல் விளைத்துநிற் பார்சிலர். (கா௯)

அகிலுண் கோதையா ராயிர கோடியர்
துகிலு மாரமுஞ் சோர்வது கண்டுநீர்
முகிலுண் கூந்த லொருத்திமுன் னேகுவார்
நிகிலம் நாதர்க்கு நீதியி தோவென்பார். (எ0)

பரவு மால்வரை வீதியிற் பாவைமார்
சுரத வாள்விழி வண்டினஞ் சூழ்வர
விரத யோகர் விழித்தும்பி யார்தலால்
வரதர் மேனி மதுரத்தின் மானுமே. (எக)

வேறு.

உரகர் தானமுங் கீழ்ப்பட வெண்மர்வா ழுலகமுந் திகைத்தேங்க
விரவி மாமதி புகர்குரு வாதிய ரிடங்கள்கோ ளிடமாக
விரவு கின்னரர் தந்திரர் வாழிடம் வீணையெய் திடவோங்கிப்
பரமர் மாமணப் பெருக்கொடும் பொலிந்ததாற் பனிவரை வளமூதூர்.

விந்தை வானவர் வருதலாற் பவனமும் வெறுக்கையெய் திடவாணி
யந்த ஞானனுங் கணத்தொடு வருதலா லவனுலகலரெய்தப்
பைந்து ழாயனுங் கமலையு மேவலாற் பாற்கடல் சலமேவ
நந்தி நாயகன் வருதலாற் கயிலையு நணிவிளர்த் ததுமாதோ. (எரு)

மேவு விஞ்சைய ருலகமென் பார்சிலர் விரிஞ்சன்வா ழுலகென்பார்
தேவ லோகமா வுலகமென் பார்சிலர் சிவபுர மிதுவென்பார்
தாவி லேழுட னேழுமே ருலகமுந் தந்ததிந் நகரென்பார்
யாவு மீன்றவ டன்னையின் றருள்பதிக் கிதுகொலோ வரிதென்பார்.

வேறு.

பூதர் சங்கமும் வானவர் சங்கமும் புவன
நாதர் சங்கமு முருத்திரர் சங்கமு நான்காம்
வேதர் சங்கமு மாமுகிற் குலத்தொடு மிடைந்த
மாதர் சங்கமா மின்னெடும் பொலிவன மறுகு. (எரு)

கொடிக ளும்பெருங் குடைகளு நிரைத்தகோ வேந்தர்
தொடிக ளுந்திரண் முடிகளு முகுத்தபொற் சுண்ணப்
பொடிகள் சிந்திட மிமசலச் சேறுகால் புதைந்து
பிடிக ளுந்துடி யடிகொளுங் களிறொடு பிளிறும். (எசா)

தெருவ டங்கலாப் பெருந்திர ளாகினுஞ் செகத்தோர்
பொரு வினைப்பயன் பொருத்திடு நியதியே போல
மருவு ஞாயிலின் றிருக்கடை நெருக்குற வருவோர்
பெருமை கீழ்மையி னமைத்திடு நந்திகைப் பிரம்பு. (எஎ)

குன்று ளார்திசை வேந்தரு நாரியர் குழாமும்
வென்றி மாலய னுருத்திர கணத்துமே லவரு
மன்று ளார்மழ விடையுமா முனிவரு மல்லா
னின்று ளார்பதம் பெயர்த்திலர் மறுகெலா நிரம்பி. (எஅ)

தவமு னிக்கண மரசிலை தருப்பைநீர் தெளிப்ப
வவர்தி ருக்குல மாதாநீ ராஞ்சன மமைப்பத்
துவச நற்குடை மணிகொடி முரசுபூந் தோட்டி
கவரி தீபமா மெண்வகை மங்கலக் கலங்கள். (எகூ)

எண்கு லக்கிரி மடந்தைய ரிவைமுறை யெடுப்ப
வண்க ருப்புர தீபமோர் மேருமால் வரையிற்
பெண்கை யிற்கொடு வலஞ்செயத் தெய்வதப் பிணாக்கள்
கண்க ளிப்புற வேந்துமா லத்திகள் களைல. (அ௦)

வேறு.

முருகையார் தழையா னீரான் முதுவரைத் திரிகூ டத்தி
லொருகையாற் பதம்பூ சித்த வுயர்கய கருண னென்பா
னிருகையாங் கமலம் பற்றி விடையினின் றிழிந்து நந்தி
தருகையா லமரர் மோலி சாத்துபா துகைதாள் சாத்த. (அக)

இடம்வல மயன்மால் செங்கை பற்றிமுத் தொழிலுக் கென்று
முடைமைதோன் றிடவ சுக்கள் சுவத்திக முரைப்ப மாதர்
நடைபடம் விரிப்ப வானோர் நாண்மல ரிறைப்பச் சென்றார்
வடவரை வளைத்த வள்ளல் பணிவரைக் கோயில் வாயில். (அஉ)

ஈசனே மருகா வெய்த வேழுல கீன்ற டன்னை
வாசமா மகவாப் பெற்று மரபெலாம் புனிதம் பெற்றா
ளாசறு புனலா லண்ண லடியிணை விளக்கிச் செய்யும்
பூசனை நீரா லுள்ளும் புறத்தினும் புனிதஞ் செய்தாள். (அ௩)

வாழ்ந்தநா ளடுத்த வீடு வாழ்வுற வாழ்ந்தே னல்லேன்
சூழ்ந்துள கிளையை யூட்டிச் சுற்றமும் வளர்த்தே னல்லேன்
றாழ்ந்துள குடும்ப மேனுந் தாங்கினே னல்லேன் முன்னோர்
வீழ்ந்துள தரும மேனு மேலுற வளர்த்தே னல்லேன். (௫௮)

ஓலத்தண் மறைக்கார் கால மொதுக்கிடங் கொடுத்தே னல்லேன்
காலத்திற் பொருளில் லார்க்குக் கன்னிகா தானஞ் செய்யே
னாலத்தை யுண்டார் கோயில் விளக்கிட்டே னல்லே னாற்றிற்
பாலத்தை முகித்தே னல்லேன் படித்துறை செய்தே னல்லேன். ()

தேசிகர்க் கிந்தே னல்லேன் சிவபிரா னடியார்க் கேனும்
பூசுரர் தங்கட் கேனும் போசனங் கொடுத்தே னல்லேன்
பாசநோ யொழிக்குந் தில்லை குற்றாலம் பாவ நாசங்
காசிசேதுவிற்செல்வார்களுக் கைப்பொருள்கொடுத்தேனல்லேன். ()

தூசிலார் தமக்குத் தூசு சொன்னமில் லார்க்குச் சொன்ன
மாசறப் பசித்தோர்க் கன்ன மாயினு மளித்தே னல்லே
னூசியில் வாசி பார்த்தே னொருபிடி யமுதென் றானும்
பேசுமென் மனது கூடிப் பிச்சையிட் டுண்டே னல்லேன். (௬௧)

கட்டினே னல்ல னேனுங் கடவுளா லயங்கள் போற்றி
யொட்டியோர் வலம்வந் தில்லே னுண்ணுநீர்க் குளங்கள் கூவல்
வெட்டினேனல்லேன்பொல்லேன்வீண்பொருள்விளைத்தே னிப்பால்
முட்டினேன் குனிந்தென் செய்கேன் மொழியநா வெழும்பா தந்தோ.

நிலையிலா வுடலும் வாழ்வு நிச்சய மென்றே யெண்ணி
யலகிலாக் கொடுமை செய்தே னவத்தைவந் தடுத்த தந்தோ
விலகவோர் தரும மென்னு மெய்த்துணை யில்லாப் பாவி
பலப்படச் செய்த பாவம் பலித்ததென் றயர்ந்து சோர்ந்தான். (௬௩)

வேறு.

ஏங்கினான் கடுகளவு மீயாதான் மலையளவும்
பாங்கினோர் பொருள்கவரப் பார்த்திருந்து பதைத்தாவி
நீங்கினா னுயிர்க்குறுதி நீங்காத துணைகாணான்
றூங்கினான் பாவமெனுந் தாங்கரிய பெரும்பாரம். (௬௪)

மன்கிடக்கை யூர்கிடப்பப் பேர்கிடப்ப மனைநிறைந்த
பொன்கிடப்பத் தேடிவைத்த பொருள் கிடப்ப மனைமாதர்
முன்கிடப்ப வொருவருக்கு முதவாத முடையுடலம்
பின்கிடப்பத தனிபோனான் செய்தவினை பிடர்பிடிப்ப. (சரு)

வீக்கினார் பெரும்பாசம் வெருட்டினார் பொருபடையாற்
றாக்கினார் நெருப்பாற்றிற் றள்ளினார் மயிர்ப்பாலம்
போக்கினார் கொடியமுள்ளிற் புரட்டினார் முரட்டுடல்புண்
ணாக்கினார் கொடுந்தூத ரந்தகன்முன் கொடுபோனார். (சசு)

காலபட ரலைப்பதனைக் கண்டிரங்கிக் கையமைத்து
மேலசைத்த கொடும்பாசக் கட்டவிழ்த்து வியந்திருத்திக்
கோலநகை யமுதளித்துக் குணநிறைசெங் கோற்கடவுள்
சூலமொடு பாசமொடு நின்றதூ துவர்க்குரைப்பான். (சஎ)

பன்னாளும் பாவியிவன் பாவமே புரிந்தாலுங்
கொன்னாரு மதிச்சடையார் குற்றாலந் தனிலேகி
முன்னாளிற் பெற்றிருந்தான் மூன்றுநாட் டலவாச
மெந்நாளிற் புண்ணியமோ விமையவர்க்குங் கிடையாதால். (சஅ)

நன்னகர்வை கியமூன்று நாளிலொரு நாட்பலனே
முன்னமிவன் செய்தபெரும் பாவமெலா முடித்ததாற்
பின்னரொரு நாட்பலன்றான் பிரான்கயிலை தனிற்சேர்க்கு
மின்னமொரு நாட்பலனு மிறைவன்மேற் கடனாமால். (சகு)

என்றியம னியம்பியகா லெண்ணரிய கணநாதர்
மன்றலுயர் விமானமொடுந் தோன்றினார் மலர்மாரி
நன்றிவா னவர்பொழிந்தார் நமன்றூத ரதிசயித்தார்
சென்றவனுஞ் சிவபெருமான் கயிலைவரை தனிற்சேர்ந்தான். (ருo)

இந்தவகை தலவாசத் தியற்கையென வுயர்சூத
னந்தணருக் குணர்த்திவட வருவியொரு தினப்பலனாற்
றந்தைநர கினைப்புதல்வன் றவிர்த்தகதை யவர்கேட்ப
முந்தைநா ரணர்க்கரனார் மொழிந்தபடி மொழிகுவான். (ருக)

10-கண்டகசேதனச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கசஎ.

## பதினொராவது :—கவுற்சனச் சருக்கம்.

கொண்டையுறு நீலவிழி கொண்டையுறு நீலங்
கெண்டையொடு பாணியுகு கேணிசெறி சோலைக்
கண்டையல ராடுகிளி கண்டையலர் சொல்வாய்த்
தொண்டைவள நாடுமுயர் தொண்டைவள நாடு. (க)

நாஞ்சிலுழ வர்க்கெதிர் நடந்துவெடி தாவி
மாஞ்சினை கிழித்துவரி வாளைவிரி பாளைப்
பூஞ்சினை திளைத்துமது ரேசர்கொடி போலுங்
காஞ்சிநக ரத்திலழ காஞ்சிநக ரத்தில். (உ)

ஆரமுதை முக்கணழி யாநிதியை மாவின்
சீரமுத வைப்பையிரு செங்கைகொ டணைத்து
வார்பொரு முலைக்குறி வளைகுறி யமைத்த
வோர்பரை யறஞ்செயு நகர்க்கொரு மருங்கில். (ங)

வேறு.

ஆனக மொலிக்கும் வீதி யணிகெழு நாட்டி லங்கோர்
தேனகன் சோலை மாலைச் செழித்தசெஞ் சாலி வேலிக்
கோனக ரந்த ணாளன் குற்சர்கோத் திரத்தில் வந்தோன்
மானகஞ் சுகத்தான் வேதம் வடகலை பயின்ற நாவான். (ச)

மரபுசேர் குற்ச னென்னு மறையவன் றனக்குப் பாப
ரிருவரு முச்ச மேறச் சுபரெலா நீச மெய்த
வுரகருங் காரி சேயு முதித்திட வுதித்தான் மன்னோ
கரவடன் கவுற்ச னென்பான் கரும்பினி லரும்பு போல்வான். (ரு)

மடமெலா மொன்றாய்ப் பாலமை வடிவெடுத் தெனவே தோன்றிப்
புடவியி லொழுக்க மாதி புண்ணிய நெறிகள் யாவுங்
கிடைபடக் கிடந்து பாவங் கிளர்வுறத் தவழ்ந்து பொல்லா
நடலையுங் கொலையுஞ் சூது நடைபெற நடைபெற் றானே. (சா)

அழுதொறுஞ் சீவ கோடி யழுதிட வழுவா னஞ்சொன்
மொழிதொறும் படிறுங் கோளுங் குறளையு மொழியாக் கற்றான்
யழிபுரிந் துயிர்கள் வீட்டும் பயிற்சியே பயின்றான் மாரி
மழைவளர் விழல்போற் காமம் வளர்ந்திட வளர்ந்தான் மன்னோ. (எ)

முப்புரி நூலுந் தாங்கி முன்சிகை நடர்போற் பூண்டு
குப்பமுந் திரங்க ளெல்லாங் குமந்திரம் புகல்வ தானுன்
விப்பிர ரோதும் வேதக் கிடையெலாங் கிடையா விட்டான்
செப்புநூல் சிறிது கற்றான் சிறுபுலி கொலைகற் றாற்போல். (அ)

குரவர்நா லுணர்த்துங் காலை தருமமார் குலநூல் விட்டுக்
கரவடம் பலிக்குங் காலங் கணித்துமே லறிய வேண்டிப்
பரவுசோ திடமே பன்னிப் பயின்றன னாத லாலே
புரவலன் பேரத் தாணிப் புரோகிதத் தலைமை பூண்டான். (கூ)

தேர்ச்சிபோற் பிறன்கோள் கூறித் திரவியந் திரளா யீட்டுஞ்
சார்ச்சியா லரசன் றன்னைத் தன்வயப் படுத்துத் தானுஞ்
சோர்ச்சிசேர் மடவார் சேரித் தூர்த்தர்தம் வயத்த னானன்
கூர்ச்சிவா யரவம் வீழ்த்திக் கொம்பிவாய் வீழும் புட்போல். (க௦)

வளர்ந்தநாட் பிரமசாரி யெனும்பெயர் மறுக்க வேண்டிக்
கிளர்ந்தபங் கயத்தின் மீதிற் கிளருமா வடுவை நேரே
பிளந்துவைத் தனைய வுண்கட் பேதையோர் மறையோன் மாதை
யிளம்பிடிக் கயம்போற் பற்றி யிராக்கத விவாகஞ் செய்தான். (கக)

வேட்டக மதுவே காம வேட்டஞ்செய் கான மாக
நாட்டக மணஞ்செய் கோல நாடுவான் புகுந்த மாதர்
கூட்டமான் குலங்க ளாகக் குவைநிதி வலையாத் தானோர்
காட்டக வேட னாகிப் படுப்பதோர் கலையு மானன். (கஉ)

மனுவுக நாளு வாநாண் மாளயஞ் சங்கி ராந்தி
வினவுமட் டகைகண் மேலை விதிபாதந் திருதி யாய
புனிதநாட் டொண்ணூற் றாறும் புணர்மூலத் தடமே யன்றி
யினியநீர்த் தடமுந் தோயா னியன்றதென் புலத்தோர்க் கீயான். ()

பிறந்தநாண் முன்னு வாநாட் பெருநிசி பகலீ ராந்தி
யுறந்தரும் விரதநாட்க ளட்டமி தந்தை தாய
ரிறந்தநா ளிருவ ராயு மிறைவர்நாட் பதினென் காதி
யிறந்தபுண் ணியநா ளெல்லாந் தேனனூர் புணர்ச்சி நீங்கான். (கச)

தையலார் புணர்ச்சிக் கேகுஞ் சந்தியே சந்தி யாக
மொய்யமைை விலங்கு புள்ளின் முறைகளே முறைக ளாக
நையுநுண் ணிடையார் யார்க்கு நலங்களே குலங்க ளாக
மையலே நியம மாக மதனமே யொழுக்க மானுன். (கரு)

சந்திகண் மறந்து சாதித் தருமங்க ளொருவி வேதச்
சிந்தையு மொழிந்து காயத் திரிமுத லயர்த்து மாத
ருந்தியந் தடத்து மூழ்கி யுயர்முலைச் சாந்தம் பூசி
மந்திர மவர்பா லோதி வணங்குவான் மதனைத் தெய்வம். (கசு)

காலையிற் புனலின் மூழ்கிக் கடன்கழித் தனலு மோம்பி
மேலையிற் கரும முற்றி விதிமுறை தருமம் பேணிச்
சாலையில் விருந்து போற்றித் தன்கிளை யூட்டி யுண்டு
மாலையில் வளர்வார்க் கெல்லாங் களையென வளர்ந்தான் மன்னே. ()

வேந்தனைச் செங்கோல் செய்யும் விரகினைக் கரவான் மாற்றி
மாந்தர்மேற் கொடுங்கோல் செய்ய மந்திரக் குடிலஞ் செய்துங்
காந்தனைப் பிரியா மாந்தர் கற்பினைப் பிரித்துந் தன்பாற்
போந்தமா மறைச்சி றூர்க்கும் புன்மைபோ திப்ப தானுன். (கஅ)

பூவையர் செய்யும் பாவம் புருடர்மேற் புருடர் பாவங்
கோவின்மேற் சுமையா மந்தக் கொற்றவன் புரியும் பாவ
மேவுமே புரோகி தன்பால் வீண்புரோ கிதத்தா லின்னேன்
மூவர்பா தகமுந் தாங்கு முழுச்சுமை தாங்கி போன்றான். (கக)

வேறு.

மனத்தி லொன்றவ னுரைப்ப தொன்றினை மறுத்து மொன்றினை நடத்துவா, னினத்து மங்கையர் முறைத்திறம்பினை னிழித்த வஞ்சியர் கலப்பினுன், முனைக்கொடுஞ்சமர் மறக்கு றும்புகண் முடித்து நின்றுயிர் வதைத்துளா, னினைத்து நம்பினர் தமக்கு வஞ்சக நிகழ்ச்சி தங்கிய விகழ்ச்சியான். (உo)

வருத்து தம்பன விதத்தி னும்புலை மருத்தி னும்பிறர் மனைக் குள்வாழ், பருத்த சொங்கையர் முயக்கி னன்பகை பழிக்கு நெஞ்சி

டை பயப்படா, னருந்து தண்புனல் குளித்த றிந்தில னலத்த கங்கை
யின் மூழ்க்கருன், முருக்கி லங்கிதழ் மதுக்க ளன்றியு முதுக்குடங்
களின் மதுக்கொள்வான். (உக)

அடுத்தி டுங்குடி கெடுக்கும் வஞ்சக னருக்கி யம்பலி கொடுத்
துனு னெடுத்த தன்குல முறைக்கு முன்சொலு மியற்கை யொன்
றினு நடப்பிலா, னடிச்சொ லுஞ்சுவை வழக்க ழிந்திட நடத்து நிந்
தனை யிடத்தினன், மிடுக்கு டன்கண சிவத்த லங்களை மிகுத்த தொ
ண்டரை யலைத்துளான். (உஉ)

கொலைபுரி பாவங் கோடி குருநிந்தை முதல கோடி
புலைமது நுகர்ந்த பாவம் பொய்கள வனந்தங் கோடி
நிலையிலான் காமக் கொள்ளை நிகழ்த்திடில் விண்ணின் மீனை
யலைகடன் மணலை யெண்ணி யறியினு மறியொ ணாதால். (உங)

தரும்பெரும் பாவ மன்றித் தருமமே யறியான் வேட்ட
மருந்துபோன் மனையா டன்னை மணந்தநாட் கண்டா னேனு
மருந்ததிக் கற்பின் மிக்கா ளரும்பெருந் தவத்தி னாலே
பொருந்துகாற் றடிப்பத் தாழை பூத்தென வயிறு வாய்த்து. (உச)

ஓதமா ருவர்நீர் வேலை யொளிர்சுங்கி னுதரம் வாய்ப்ப
மேதகு குலத்துத் தோன்றும் விலையிலா முத்தம் போலப்
பாதகன் றனக்கோர் சேயாச் சுகுற்சனைப் பயந்தாள் வேறு
மாதவம் வேண்டுங் கொல்லோ தாரமுங் குருவும் வாய்த்தால். (உரு)

மைந்தனைப் பயந்தா ளென்று மனக்கொளான் மனையா டன்னை
நிந்தனை புரிவா னன்றி நேர்படான் பரத்தை மாதர்
தொந்தனைத் துவட்சி நீங்கான் சுவைதரு கரும்பின் மேலுஞ்
சிந்தனை புரிவ துண்டோ வேம்பினைத் தின்னுங் கீடம். (உசு)

கற்புடை மாதர் தம்மைக் கண்ணினாற் பார்த்த பாவ
நற்பொருள் கவர்ந்த பாவம் பிறர்மனை நயந்த பாவம்
யற்பல குடிக்குந் தீமை நாவினாற் பகர்ந்த பாவ
மிற்பிழை புரிந்த பாவ மிவையெலாம் விளைந்து சுற்றி. (உஎ)

காமனைக் குரிமை யாட்டி மனங்கொதி கொதித்த வெல்லாந்
திமையோ னுடலாம் பஞ்சிற் செந்தழற் பொறியாய்ப் பற்றிக்
காமமே வினையாய் முற்றி நாளிலே கழிந்து மேனி
தேமுரம் புழுவார் நாஞ்சிற் கொழுவெனத் தேய்ந்து மாய்ந்தான். ()

ஆங்கவ னிறந்த காலை யந்தநாட் டுள்ள மாந்தர்
தீங்கறு பாலின் மூழ்கித் தீவினை தீர்ந்தார் மாதர்
தாங்களு நறுநெய் யாடிச் சருக்கரை வழங்கி யார்த்தா
ரோங்கின வறங்கள் யாவு முயர்ந்தது தாழ்ந்த பூமி. (உகூ)

அன்னவன் றன்னைக் கால னடுங்கொலைத் தூதர் தாக்கிப்
பின்னுற வலையால் வீசிப் பிடித்தன ரிடித்துத் தண்டான்
முன்னுறப் புடைத்துச் செங்கை மூட்டொடும் பொருந்தச் சேர்த்துப்
பன்னெடும் பாசம் வீக்கிப் பரட்டிடைக் குணிலாற் கொட்டி. (௩0)

நடந்தன னிருகால் சோர நலிந்தனர் நூறு காதந்
தொடர்ந்தனர் வெருவி யோடத் துரந்தனர் நூறு காதங்
கிடந்தன னுருண்டு வீழக் கிளர்முடி செடிதொட் டீர்ப்ப
விடந்தொறும் புரியிட் டீர்த்தா ரீரிரு நூறு காதம். (௩க)

தூர்த்தன்வா யெறும்பு மீயுந் துதைந்திடப் பரதா ரங்கள்
பார்த்தகண் குடைந்து காகம் பருந்தினங் குருதி மாந்த
வேர்த்துட லயர்ந்து சோர மெய்யெலா நிணங்கள் சோர
வீர்த்தனர் கொணர்ந்து தூத ரியமமா புரத்தி லுய்த்தார். (௩உ)

வரைபொரு புயமும் பாரத் தண்டமும் வடவை போல
நிரைதரு சிகையுஞ் சீறி நெருப்பெழ விழித்த கண்ணும்
பொருகழற் காலும வீர தந்தமும் பொலியச் செங்கோ
லரசுவீற் றிருக்கை கண்டா னச்சமுற் றயர்ந்து வீழ்ந்தான். (௩௩)

விழுந்தவன் சிகைதொட் டீர்த்து விடுத்தனர் தொழுதார் நிற்பத்
தொழும்பரைத் தரும ராசன் சுறுக்கொள வெறித்து நோக்கி
யெழும்படர்க் கொடியோன் றன்னை யெற்றுமி னெறிமின் வாளா
லழுந்துறத் தடிமி னென்ன வசனியே றஞ்ச வார்த்தான். (௩௪)

சண்டனீ துரைப்ப வோடித் தருக்கினர் கொண்டு போந்தார்
கொண்டல்போ னிறத்தார் பாரக் கூளிபோன் முகத்தார் தீப்போல்

விண்டெரி சிகையார் விண்போல் வெடித்தெழு குரலார் கோபக்
கண்டக ருறுக்கும் வாயார் கனற்பொறி பறக்குங் கண்ணர். (௩௫)

கொட்டுகோல் கட்டு பாசங் குணில்பெரு முசலந் தண்டம்
வெட்டுவா ளிழுக்குந் தோட்டி தெறிக்கும்வில் குறைக்கு மீர்வாள்
கிட்டிமத் திகைவெஞ் சூலங் கிழிபட வெறியுங் குந்தங்
கட்டழ லிருப்புப் பாவை கப்பண மழுக்க ளன்றி. (௩௬)

ஆட்டிய செக்கும் பூட்டி யரைக்குமெந் திரமுங் குத்தி
நாட்டிய கழுவுங் கவ்வு ஞாளியுங் கடிக்கும் பாம்பும்
பூட்டிய வடமுந் தூக்கும் விட்டமும் பொறியுந் தீயில்
வாட்டிய குறடுங் கோக்குந் தூண்டிலும் வலையுஞ் சூழ. (௩௭)

உறுக்குவார் பதகர் தம்மை யுடலிடைப் பாசம் வீக்கி
யிறுக்குவார் சினப்பா ரவ்வா றெற்றுவா ரெறிவார் செங்கை
முறுக்குவா ரடிப்பார் தண்டான் மோதுவார் கந்து கந்தர
நொறுக்குவார் கொடுமை யெல்லா நோக்குவான் புலம்ப லுற்றான்.()

இத்தனை கொடிது கால தண்டமென் றுணர்ந்தே னல்லேன்
கொத்தலர் குழலார் மோகக் குறும்பனேன் குரவன் வாக்குஞ்
சித்தமென் றுணரேன் றீமை செய்தன னெண்ணில் கோடி
யத்தனை பாவ மல்லா லறஞ்செய்து மறியே னந்தோ. (௩௯)

கழுவுக்கோ முறுக்கி வீசுங் கவணுக்கோ தறிக்குங் கோர
மழுவுக்கோ துணிக்கும் வீர வாளுக்கோ நரக வாதைப்
புழுவுக்கோ படைக ளோச்சிப் பொருக்கென வளைத்த தூதர்
குழுவுக்கோ வைய கோவென் னுயிர்ப்பலி கொடுப்பே னென்றான்.()

சிந்தனை கலங்கி யேங்கித் திடுக்கிடக் கையுங் காலும்
புந்தியும் பதறக் கண்ணீர் பொழிதரப் புடைநின் றானை
யுந்தினர் பதைப்பத் தாளா லுதைத்தனர் தடிக ளோச்சி
முந்தின ருறுக்கி மீசை முறுக்கின ரொறுக்கு நீரார். (௪௧)

அந்தணர் குலத்தே வந்து மரும்பலி கொடுத்துண் ணுமற்
பொந்தெனப் பொசித்தான் வாயிற் புழுக்களை வாரி யிட்டார்
சந்திகள் குளியான் மேனி தழலிடைக் குளிக்கச் செய்தார்
மந்திர மோதா வாய்க்கு மட்டறுப் புலப்பம் வைத்தார். (௪௨)

குலமனை மாதர் நெஞ்சங் கொதிகொதித் தயர் வோடிப்
பலர்மனை தொறுஞ்சென் றூனைப் பலமுனைக் கழுவில் வைத்தா
றுலகினிற் றந்தை தாயர் பசித்திட வுண்ட வாயின்
மலமொடு புழுவும் வாரி வயிறெலா நிரம்ப விட்டார். (௪௩)

வரைநிகர் கற்பு மாதர் வடிவினை நோக்குங் கண்ணி
னிரைநிரை யாக வூசி நிறுத்தினர் பெரியோர் தம்மை
யுரையினு மிகழ்ந்த வாயி லுதைந்துபல் லுகுத்தார் பின்னுங்
குரைதரு குருதி சோரக் கொடிறுகள் கிழித்தார் மன்னோ. (௪௪)

பிறர்மனைக் கேகுங் காலைப் பிணித்தனர் துணித்து வீழ்த்தார்
மறுமனைக் கொடியைத் தீண்டு மணிக்கரந் துமித்தார் மாதர்
முறைகெடத் தழுவு மெய்யை முசலத்தால் வயிரத் தண்டா
லிறவிற வடித்து வீழ்த்தி யென்பெலா நொறுக்கி னாரால். (௪௫)

வேறு.

எறிவ ளாக்கை யெளியவன் பாரியை
முறிப டுத்தி முயங்கிய மூடனைத்
தறித றித்துத் தசைதசை யாகவே
நெறியில் விட்டுத் தெறித்தனர் திக்கெலாம். (௪௬)

மறுவில் காவலின் மாடத்துக் கன்னியை
வெறிம ருந்திட்டு மேவிய பாவியைக்
குறிது ணித்துக் குருதியும் வாய்ப்பெய்து
கறியும் பானமும் போற்கலந் தூட்டினர். (௪௭)

அத்தி ரத்தைப் பொருவிழி யங்கலார்
நித்தி ரைக்குட் கபடஞ்செய் நீசனைப்
பத்தி ரத்திற் பதைப்ப வுறுப்பெலாஞ்
சித்தி ரத்துணி யாக்கினை செய்வித்தார். (௪௮)

வருகை பார்த்தயன் மாதரைச் சோர்வுகண்
டிருகை யோச்சித் தழீஇயவன் யாக்கையைச்
சுரிகை யாற்கண்ட துண்டங்க ளாக்கியே
திரிகை யன்றியுஞ் செக்கிலிட் டாட்டினர். (௪௯)

அநித்த போக மெனாதயன் மாதரைத்
தனித்த கானிற் றழீஇயிதழ்த் தேனுணா
மனித்த னாணை மிருகனை வாய்கொளீஇத்
துனித்த மீனெனத் தூண்டிவிட் டாட்டினார். (௫௦)

நம்ப ருக்கடி யாரைநல் லோர்தமை
யம்பி ருக்குங்கண் ணாரைமற் றாரையும்
வம்பு ரைத்த கொடியவன் வாயிடைச்
செம்பு ருக்கிச் சொரிந்தனர் தீயெழ. (௫௧)

கண்ட வூர்மனைத் தீயிட்ட கள்வன்மெய்
துண்ட மாக்கித் துகில்சுற்றி நெய்கடேய்
மண்டு கார்த்திகை வான்பனைத் தீபம்போற்
கொண்ட மேனி யெரியக் கொளுத்தினார். (௫௨)

நடுக்கு ழுப்பிய நாவரிந் தார்சிலர்
வடுக்கள் பேசிய வாய்கிழித் தார்சிலர்
கொடுத்து ணாத குடர்துமித் தார்கொடை
தடுத்த கையைத் தறித்தெறிந் தார்சிலர். (௫௩)

புண்ட ரும்பொறிப் போகத்தைப் பொய்யெனக்
கண்டி டாது கணிகையர் காமத்தின்
மிண்ட னாகி வெறிமது வூனுட
னுண்ட வாயிற் சிலரெரி யூட்டினார். (௫௪)

தாயுந் தந்தையும் போற்பர தாரத்தை
யாயு மாறின்றிச் சேர்ந்தா னவாவறக்
காயும் வெங்கனற் பாவைகள் காட்டினார்
தோயுந் தோறும் பொறியெனத் துள்ளினான. (௫௫)

உறுப்பு றுப்பென வீர்ந்து முடலெலா
மறுத்த றுத்துத் துணித்து மவலனை
மறுத்து மேனி யிசைத்துவ்வன் றாதுவர்
கறுத்து மோய்ந்தனர் கன்மங்க ளோய்ந்தில. (௫௬)

கண்டஞ் செய்யுங் கருவிக டேய்ந்தன
துண்ட கால படருஞ் சலித்தனர்
மிண்ட ஞவியை மீளவுய்த் தாரரோ
கொண்ட நாலெழு கோடி நரகர்பால். (ருஎ)

மகுட வெற்றி மறலிதன் னேவலால்
விகட பத்திரன் வெம்பாச பாணியுந்
துகளி லுக்கிரன் றன்முக ஞதியா
முகடு முட்டிய தூதுவர் முன்னிஞர். (ருஅ)

கோடி கோடி நிகாதக் கொடுமையு
மாடி யோடித் தவிப்பவ ராவியுந்
தேடி யோடித் தருமஞ்செ யான்கண்டு
வாடி யோடி மறுகலுற் றனரோ. (ருகூ)

நம்பி னோரைச் சதித்துநல் லோர்களை
வம்பி யற்றி யடைக்கலம் வஞ்சித்தான்
பம்பி யாவி பதைக்கப் பதைக்கவே
கும்பி பாகத்திற் குப்புறத் தள்ளிஞர். (௬௦)

சிவத்த லந்திரு மால்வள ராலயந்
தவத்தர் வாழ்மடம் புண்ணிய சாலைக
ளவத்த மாக வலைத்தவ ஞவியைக்
கவற்று பாழ்நர கத்திடை வீழ்த்திஞர். (௬௧)

தேவ தாயங்கள் வேதியர் செய்கண்மேற்
கோவி ஞனிறை கூட்டிக் கொடுமைசெய்
பாவி யாவி பதைபடக் குத்தியே
யேவி ஞரெரி வாய்நர கத்திடை. (௬௨)

அக்சி வாலய மாறு படித்துறை
மச்ச வாவிகள் சார மலம்விடுந்
துச்ச ஞவி துடிக்கத் துடிக்கவே
மிச்சில் வாய்நர கத்திடை வீழ்த்திஞர். (௬௩)

ஆளும் வேந்தர்க் கநீதிக ளோதியு
மீள மீளக் குடிக்கிறை மேல்வைத்துங்
கோளு ரைத்துங் குறும்புசெய் கோளனைக்
காள கூட நரகிற் கவிழ்த்தனர். (சுச)

கூட நின்று குளிர்தரப் பேசியே
கூட கத்தொழில் செய்யுங் கொடியனைக்
கூட சன்மலிக் கும்பியிற் றள்ளியே
கூட மத்திகை கொண்டறைந் தாரரோ. (சுரு)

முழுக்குஞ் சந்தியு மோனமு மந்தண
ரொழுக்க முந்தவிர்த் தூணுண்ட மூடன்மெய்ப்
புழுக்கள் சோர்தரப் புள்ளினங் குத்தவே
கழுக்கு கோர நரகி லழுத்தினார். (சுசா)

வீழும் புள்ளும் விலங்குங் கொலைசெய்து
வாழுங் காவின் மரங்குறைத் தான்றனை
யாழுங் கும்பி யசிபத் திரமெனும்
போழும் பூழி நரகிடைப் போக்கினார். (சுஎ)

வேறு.

விரகினாற் பிறர்பொருள் வலிதின் வெஃகிய
கரவடக் கவடனைக் கால சூத்திர
நரகிடை வீழ்த்தினார் நன்றி கொன்றதா
விருளெனு நரகிடை யெறிந்திட் டாரரோ. (சுஅ)

வேறு.

மட்டறுத் தண்டந் தோறு மாமுனைக் கழுக்க டோறு
நட்டதா துவரு மேய்ந்தார் நரகமுஞ் சலித்த தன்றிச்
சட்டமார் நமனுங் கூற்றுஞ் சலித்தனர் கவுற்ச னென்பான்
பட்டபா டெளிதோ வம்மா பாவமுஞ் சலித்த தன்றே. (சுகூ)

ஈங்கிவை நிகழுங் காலை யிவன்பெறு சுகுற்ச னென்பான்
பங்குறு மன்னை சீரார் பழமறைக் குழாத்திற் சார்ந்து

தேங்குநீர்ப் பழனஞ் சூழுந் திருநகர்க் காஞ்சி நண்ணி
யாங்குல வொழுக்கம் பூண்டா னவரியி னரும்பு போல. (எo)

மானமா மறைக ளோதி மறைச்சிறூர் கணைத்து நூல்கள்
ஞானமார் சுகுற்ச னென்பா னவில்கின்ற நாளி லவ்வூர்த்
தானமா மறுகு தோறுஞ் சவைதொறுந் தாதை செய்த
வீனமாம் பழிபா வங்க ளிருசெவி யுளையக் கேட்டான். (எக)

கோதிலா மறையோ னாகிக் குற்சர்கோத் திரத்தில் வந்தும்
பாதகம் புரிந்தா னந்தோ யாற்கடல் விடம்போற் றோன்றித்
தாதைமுன் புரிந்த பொல்லாத் தவறெலாங் கேட்கி லென்றன்
காதையும் வெதும்பச் சுட்டுக் கருத்தையுங் கருக்கு மாதோ. (எஉ)

பகரரும் பாவஞ் செய்தான் பவர்க்கம்வீழ் படரை மாற்றச்
சகரரை மீட்ட சேய்போற் றவஞ்செய வல்லே னல்லேன்
மகவென வவன்பாற் றோன்றும் வன்பழி கழுவ வீதே
திகழுறு நெறியென் றுன்னித் தீர்த்தயாத் திரைமேற் சென்றான்.

குளிப்பவர் பாவஞ் சீக்குங் குரைதிரை வார ணாசி
தெளிக்குநீர்ச் சோணை வாணி சிந்துநன் மதைகா ளிந்தி
விளித்தெறி தரங்கக் கோதா வரியுங்கா விரியு மாடி
யளிப்புனற் சேது வைகை யரும்பெறற் பொருநை மூழ்கி. (எச)

தவமது கங்கை யெய்திச் சராசர மான வானோர்
பவமது கங்கை நீத்த படிமையு மாகத் திங்க
ணவமது கங்கை யாதி நதிகள்சேர் கதியு நோக்கிச்
சிவமது கங்கை பொங்குந் திரிகூடச் சாரல் சார்ந்தான். (எரு)

தருமமே முதல நான்குந் தரணியில் வேட்டோர் யாரும்
வருகெனத் திரைக்கை காட்டி வந்தவர் பவங்க ளோடப்
பொருசிலை யம்பு பூட்டிப் புண்ணியத் திரிகூ டத்தி
லருளொரு வடிவாய்த் தோன்று மருவிகண் குளிரக் கண்டான். ()

வேறு.

நாடினான் வடவருவி நண்ணினா னதிமகிமை நயந்து பாடி
யாடினா னகங்குளிர்ந்தா னஞ்சலித்தான் விஞ்சுதவ மனந்தும் கொடி

தேடினான் மதுமலர்கள் சிந்தினான் கரமலர்கள் சென்னி மீதிற்
சூடினான் றிரிகூடச் சிவக்கொழுந்தைத் தொழுதாடித் துள்ளி னானால்.

ஆங்கமறை பலவோதி யங்கமுறை பயில்கேள்விச் சுகுற்ச னென்பா, னங்கமர்ந்து வடவருவித் துறையாடி வருநாளி லவனை யின்றோன், பங்கமுற நரகினிடைப் படுந்துயரு மவனையிடர் படுத்துந் தூதர், தங்கள்பெருஞ் சலிப்புமெதிர் காண்டோறும் யாழ்முனிவன் சலித்து நோக்கி. (எஅ)

மானமார் புலனொடுக்கிக் கண்முகிழ்த்து யோகிருந்து மனதுக் கெட்
ஞானமார் விழிதிறந்து பார்த்திடலு மவனழுந்து நரக வாதை [டா
யானமா பிரமகற்பந் தொலைந்தாலுந் தொலையாதா லதுவா னனு
மீனமார் மறையவனோர் மகவீன்று னரவமணி யீன்ற தேபோல். ( )

சிவநாமம் புகழ்ந்தமரர் திரண்டாடுந் திரிகூடஞ் சென்று சேர்ந்து
புவனதி களிலுயர்ந்த புடார்ச்சுனமா புரமேவிப் புனித ரோடு
நவநாத சித்தரொடும் பததரொடுந் சித்திரமா நதிதோய்கின்று[ன்
னவனலேயிவன்பாவமகலுமெனத்தெருள் கூர்ந்தா னருளான் மிக்கா

பெரியபிரான் றிரிகூட மிவனலே யாமுமெய்தப் பெறுவோ மென்று, புரிசடிலம் புறத்தசைய மகநியாழ் பிடித்தகுமுனி போத வோடுங், குருநிலைமைக குற்சர்பெருங் குலதீபங் கண்டுமனங் குழைந்து தாழ்ந்து, பரிவினுட னருக்கியபாத் தியங்கொடுத்து மலர்தூவிப் பணிந்தான் மன்னே. (அக)

எம்பிரா னெழுந்தருளி வந்தவா றென்னையென வியம்புமேல்வை, நம்பிநீ யினிதிருப்ப வுந்தைநர கிடைக்கிடக்கை நன்றோ வென்று, தும்புருவி னெதிர்பாடற் சுருதியாழ் முனியுரைப்பச் சுகுற்சன் போற்றி, வெம்புபெருந் தாதையுயர் தீர்க்குமா றருளுகென விளம்ப மேலோன். (அஉ)

யாகமா மறைப்புதல்வ நரகார்விடுந் துந்தைகரை யேற வேண்டிற்
பாகமாம் வடவருவி படிந்தவோ ராண்டிவிரு பாகந் தன்னில்
யோகமா முத்தரபா லயனத்தின் மதியாறி லுயர்ந்த மாசி
மாகமாடி யபலனிற்பன்னிரண்டாந் திதிப்பலனைவழங்காயென்றான்.

என்னநா ரதனுரைப்பச் சுகுற்சனெனும் பாலனெழுந் திதயங் கூர்ந்து, நன்னகர்ச்சித் திரநதிமே தா யோராஸ்டி வீரபன நடப்பில் வாமேனுர், மன்னுமுத்த ராயணத்தின் மதியாறின் மாகமா மதியின் முன்னும், பன்னிரண்டாந் திதிப்பலனேச் சனகனுக்கென் றுதகமுடன் பரிவா லீந்தான். (அ௪)

வேறு.

சுமுக வேதியன் சித்திர நதியிலோர் தினப்பலன் சொரிதாரை
சமர பாதகக் குறும்பெறி புண்ணிய தாரையோ வவன்றுதை
திமிர தாரைதீர் செங்கதிர்த் தாரையோ தீவினை விடந்தீர்க்கு
மமிர்த தாரையோ வாருயிர்த் தாரையோ யாதென வுணரேமால்.

சுவர்க்க நாடரும் விமானமோ டெழுந்தனர் சுகுற்சனைப் பயந்தானைப், புவர்க்கம் யாவையுங் கரைமிசை விடுத்தன பயந்தனர் நமன்றூதர், கவுற்ச னுகிய வேதியற் கொணர்கெனக் காலனுய்த் திடவோடி, யவற்கொ ணர்ந்தனர் தூதுவர் தருமனு ரணிவட திசைமார்க்கம். (அ௬)

தந்தை தாயரைப் பூசனை புரிந்தவர் தனயரைப் பயந்தோர்கண்
முந்தை மாதுலர் முன்னவ ரியம்பிய முறைமையி னெறிநின்றோர்
சிந்தை வாக்கினுந தீமையி லாதவர் தெய்வத மிகழாதோ
ரந்த மில்பெருஞ் செல்வரா யுறைதரு மரசவீ திகள்கண்டான். ()

கணவ னைத்தினந் தொழுதெழு மடந்தையர் கணவனோ டுறைவாருந், துணைவன் மாய்தலி னவனுட னிறந்தவர் துணைவனோ டுறைவாரும், பிணையி யம்பியுந் துணைவரா யுதவியும பிறர்பயந் தீர்த்தாரு, மிணையில் செல்வராய் மாடகூ டந்தொறு மினிதுறை தெருக்கண்டான். (அ௮)

தடங்கள் கூபங்கள் கல்வினோர் பலன்படு தருக்கள்சோ லைகள் வைத்தோ, ரிடங்க ளில்லவர்க் கில்லிடங் கொடுத்தவ ரெழுமழைக் குளிர்காலம், படங்கள் போர்வைக ளளித்தவர் கோடைநாட் பாதுகை குடையிந்தோர், மிடைந்த செல்வரா யுபரிகை தொறுந்தொறும் விற்றிருப் பனகண்டான். (அ௯)

மானங் காத்தவர் வன்பிழை பொறுத்தவர் மறையவர்க் கிடர் தீர்த்தோர், தீன முற்றவர்க் கஞ்சலென் றுதவினோர் செல்லல்கூர் சிறைமீட்டோர், பான பாத்திரங் கொடுத்தவர் நிறைதண்ணீர்ப் பந்தர்பா தையில்வைத்தோர், சேனை காவல ராய்வளர் மன்றமுஞ் செச்சையும் பலகண்டான். (௬௦)

தடந்தொ றுந்தமர் பிதுர்ப்பலி யிடுதலிற் றழைப்பவர் பதங் கண்டா, னிடந்தொ றும்பொலி வளத்தினுல் யமபுர மிதுகொலோ வெனச்சென்று, னடர்ந்த மாநகர் வீதிகள் பலகடந் தந்தகன் றிருக்கோயின், மடங்கள் சாலைகள் வைத்தவர் தலைமைசெய் வாய்தலின் வழிக்கொண்டான். (௬௧)

அன்ன தானமிட் டையமிட் டுண்டவ ராதுலர் மிடிதீர்த்தோர் சொன்ன தானமுந் துலங்குகோ தானமுஞ் சுருதிவே தியர்க்கீந்தோ ரென்ன தானமு மேற்பவர்க் களித்தவ ரிமையவர் பதமேய்க்கும் பொன்னின் மண்டபந் தொறுந்தொறுந் தலைவராய்ப் பொலிந்திருப் பனகண்டான். (௬௨)

தருமம் வாழ்த்திட முறைமுறை யிருதுவின் றகுதிகள் பணிகேட்பக், கரண மேலவர் புண்ணியம் பகர்ந்திடக் கானவிஞ் சையர்பாட, வரம டந்தையர் கவரிகா லசைத்திட வமரர்தா னவர்சூழ நிருபர் போற்றிடத் தென்புலக் கோமக னிறைந்தபே ரவைகண்டான். (௬௩)

தேவர் தாபதர் சயசய சயவெனத் திரள்புயத் தடமேருத்
தாவுங் குண்டலங் கதிர்செய முகமதித் தளிர்நகை நிலவூரப்
பூவின் பொன்னரி யாசனத் துறைநமன் புண்ணிய வுருநோக்கிக்
காவ லன்றனக் கிதுகொலோ வடிவெனக் கண்களிப் புறநின்றான். ()

பாவர் சங்கமும் பாவர்வே டமுங்கொடு பாவர்தண் டனஞ்செய் வான், றேவர் சங்கமுந் தேவர்வே டமுங்கொடு செம்மையோர்க் கருள்செய்வான், யாவர் பண்பினு நடுநெறி யியற்றலாற் றருமனென் றிடுநாம, மாவ தென்றனர் தூதுவர் துதிசெய வதிசயித் ததிர்சென்றான். (௬௫)

கண்டு போற்றலு நமன்முக மலர்ந்துளங் கனிந்துநின் மகவாலே
தண்ட நீங்கினை சித்திர நதிப்பலன் றருசையா லெனுமேல்லை
யண்ட ரார்த்தனர் துந்துபி யார்த்தன வார்த்தன மலர்மாரி
கொண்டபொன்மணிமானமேலேற்றினர்குற்சர்கோத்திரத்தானை. ()

வேறு.

புகப்பெற்ற நரகமெலாங் கரைவிடுப்பத் தென்புலத்தார் புகழ நீங்கி, யிகப்புற்றான் மறலியும்பின் சென்றுவழி விடப்பெற்றா னிறுமாப் பெய்தி, புகப்புற்றான் றிரிகூட மெதிர்தொழப்பெற் றான்மறையோ னுணர்வான் மிக்க, மகப்பெற்றார் பெறும்பேறு மற்றொருவர் பெறுவாரோ வைய மீதில். (௯௭)

அண்டரொடு வானமிசை மானமிசை வருவானை யவன்சீர் மைந்தன், கண்டுநா ரதற்பரவித் தென்றிசையி லுதிக்குமொரு கதிரோனென்ன, வொண்டொடிக்கற் புடையவள்வா யுனைப்பெற்றான் றனக்குநீ யுவப்பா லீந்த, மண்டுபுனற் சித்திரமா நதிப்பலனின் மகிமையதோ வருவ தென்றான். (௯௮)

அந்தமொழி நிகழ்வரமு னந்தரவி மானமிழிந் தந்த ணாளன், வந்துமுனி தாள்பணிந்தான் மைந்தனெழீஇத் தந்தையடி வணங்கி வீழ்ந்தான், சந்ததியை யெடுத்தணைத்து வலந்துடிப்ப மெலிந்தபுயந் தடிப்ப மேலும், புந்தியெலாங் களிகூர வுசசிமோந் துடலமெல்லாம் புளகம் போர்த்தான். (௯௯)

துன்றுதுயர் நெடுங்கால மியமபுரத் துழந்தவெலாஞ் சொல்லி யாங்கு
நின்றுகரை யேற்றியதுந் தருமனுப சரித்ததுவு நிகழ்த்தி யேகி
யன்றுரிமைப் பாலனொடு சென்றருவி படிந்துகட னனைத்து முற்றி
மன்றுலாவார் திரிகூடத் திருக்கோயில் வலமாக வணங்கிப் போந்தான்.

தொந்தனைசேர் நரகவா தனையொழித்துத் தொலையாத சுவர்க்க போகந், தந்தனையே வடவருவி படிந்தபலன் றநதெனச்சீர் தழைப்ப வாழ்த்தி, மைந்தனைவாழ் கெனநிறுவி யார்முனிவன் றனைப்பரவி மான மேற்கொண், டந்தரபல் லியங்கறங்க வருமறையோன் கற்பக நா டணைந்தான் மன்னோ. (௧௦௧)

பெட்பகந்தன் வயமார்கு மொருமைநா ரதனுரைப்பப் பெருமையேனிக், கொட்பகந்த நிரையமெலா மகன்றுதை தனக்கொழிந்த

கொள்கை கூறித், தட்பகந்த மலர்ச்சோலைத் திரிகூடந் திசைநோக்கித்தாழ்ந்து வாழ்ந்த, புட்பகந்தன்சீர்கேட்ப வரிக்கரன்போன் முனிக்கணத்துப் புகல்வான் சூதன். (கOஉ)

11-கவுற்சனச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—எசுக.

## பன்னிரண்டாவது:—புட்பகந்தச் சருக்கம்.

ஆடக மாட வீதி யணிகள்பே ரணிக ளாகக்
கோடணை முரச மார்ப்பக் கொடிகொடிப் படையாக் கோலி
நீடல்வா னரசைத் தன்பா னிருபனே வென்று னென்று
வீடமாப் பொன்னி னாட்டை வென்றது கன்னி நாடு. (க)

மாகமார் மாட கூடம் வரைத்திரள் சேனை மான
மேகமார் கொடிக ளீட்டம் விசைத்தெழு சிறக ராக
நாகமார் படங்கு நாட்டி ஞாயிலாஞ் சிகரி வேந்தன்
பாகசா தனன்மே லீட்டும் பாசறை போலு மூதூர். (உ)

பொற்கையார் புலிமா னேந்திப் பொருகையார் குருகை யார்க்கும்
விற்கையார் புற்கை யாராய் விடவடன் மீன மேந்தி
நிற்கையார் நடத்துஞ் செங்கோ னிருபன்வாழ் பேரத் தாணிக்
கொற்கைவா ழந்த ணாளன் குசலனென் றொருவன் மாதோ. (ங)

ஆறங்க மைந்து வேள்வி யொழுக்கநான் கனன்மூன் றோம்பி
நூறங்கு மிருமை பூண்டு நுவல்கருத் தொருமை வாய்ந்த
பேறங்கி குலத்தோ ரோடும் பிறங்குநூல் பயில்வ தானு
னாறங்க மறிபா லூட்ட நாகமுங் குதட்டு மாபோல். (சு)

உயர்தரு மறைநூ லோதி யோங்குசீர்ப் பிரமஞ் சைவம்
வயிணவங் காந்த மாதி வகைபல புராணம் பன்னி
யயநுகர் குளகு போல வத்திரி மனுவா சிட்டப்
பெயர்தரு சிலநூல் கற்றுச் சமயநூல் பிதற்று நின்றான். (ரு)

வேறு.

மாவிரதம் பாசுபதம் வருகாளா முகஞ்சைவ
மோவில்வயி ரவம்வாம மெனவாறு முட்சமய

மேவுநூல் பயின்றேயு மெய்யொழுக்க நெறியஞ்சித்
தாவுபர மதம்பூண்டான் வைதிகமுந தழுவானல். (௬)

புறச்சமைய நூல்பொருந்திப் பொருந்தாவை சேடிகமும்
பறத்துமீ மாங்கிசமும் பவுத்தமா ருகமதமு
மறத்துலோ காயதமும் வரையறுமை யாயிகமும்
பிறர்க்கெலாம் வகைதெரியப் பேசுதற்குங் குருவானன். (எ)

வேறு.

நூல்பல பயின்று ளேனு நுவலுறு பொருளைத் தேரான்
மேலுறு சமைய நோக்கான் மெய்ப்பொரு ளிதுவென் றோரா
னால்வகைப் பண்டஞ் சேர்ந்த நனிகரு கூலம் புக்கும்
பாலளை கரும்பு வீழ்த்தி வேம்புகொள் பாலன் போன்றான். (அ)

ஓதியு முணர்ந்து மேனோர்க் குரைத்துந்தா னுணர்க லாத
பேதையுட் பேதை யாகி மறைக்குலப் பெருமை தீர்ந்தா
னீதிநூ லுணர்ந்தோ ரோது நெறியினு நில்லா னுதி
வேதவாக் கியங்கள் சொல்லு மெய்யெலாம் பொய்யென் பானல். (௯)

பூதல மன்றி வேறோர் புவனமு மில்லைப் பூமேல்
யாதுமங் குதிக்குஞ் செய்கை யியற்கையே படைப்போ னில்லைத்
தீதற நிற்ற றானு மியற்கையே திருமா லில்லைச்
சாதலு மிதுவே யன்றிச் சம்புவு மில்லை யென்பான். (௧௦)

இங்கிவன் கிழக்கு வேறு மெனக்குமேற் காத லாலே
யங்கமர் திசைவே றில்லை யத்திசைத் தேவு மில்லை
துங்கமுன் வினையு மில்லை தோற்றிடுஞ் செயல்க ளிங்கே
யங்கமாய்க் கழித லாலே பாவபுண் ணியமு மில்லை. (௧௧)

கறந்தபால் முலைபு காது கழிகனி மரம்பு காதா
லிறந்தவர் பிறப்ப தில்லை யிறந்தவ ருயிர்கள் கீழ்மேற்
பறந்திடக் காண்ப தில்லை பவர்க்கமு மதனு ளில்லை
இறந்தபோர் சுவர்க்க மில்லை தெய்வமு மில்லை யென்பான். (௧உ)

அந்தணர் முதலோர் நால்வ ரவர்களிற் றாழ்ந்தா ரென்ன
வந்தபல் குலமும் வே றில்லை யடிவுமே வே றிலதா லாறுங்

தந்தமக் கிசைந்த போகந் தாமநு பவித்தன் முத்தி
நந்துறத் துறவு பூண்டு நலிவது நரக மென்பான். (௧௩)

அறநெறி யுடலுக் கேற்ப வுண்டுடுத் தநுப வித்தன்
மறநெறி புரியா லாகம் வருந்திநோன் பிருத்த லென்று
திறநெறி போலக் கூறிச் செந்நெறித் தலைநின் றாரைப்
புறநெறி யுந்த காரம் புகுத்துதல் கருமமானான். (௧௪)

பெருங்குல மறையோர் தம்மைப் பெருமைசேர் தரும நீதி
யொருங்கலைப் பயிற்சி மாற்றி யநங்கநூல் பயிலச் செய்தும்
பரந்துநீர் காலை மாலை படிந்துநீ றணிவார் தம்மைத்
திருந்திள வெந்நீ ராடிச் செஞ்சாந்து புனையச் செய்தும். (௧௫)

ஓமமேற் சொரியு நெய்யை யுண்டிமேற் சொரியப் பண்ணி
யாமள வருந்தச் செய்து மாடவர் மடவார்க் கென்றுங்
காமமே வினையா மூட்டிக் கன்மமு நெறியு நீக்கித்
தாமவே தியரை யெல்லாந் தான்விழும் படுகர் வீழ்த்தான். (௧௬)

அங்கணர் செங்க ணார்தம் மாலயந் தேவர் கோட்ட
மெங்கணும் பரவச் செல்வார்க் கெதிரெதிர் தடையாச் செல்வான்
கங்கைகோ தமிகா ளிந்தி கன்னிதண் பொருநை யாடத்
தங்களின் விரும்பிச் செல்வார் தம்மெதிர் தும்மா நிற்பான். (௧௭)

எந்தையார் திருக்குற் றால மிறைஞ்சுவா னேகு வாரை
யந்திகள் சந்தி தோறு மரும்பெருந் தினங்க டோறுஞ்
சந்திக ணியமந் தோறுந் தடுப்பது நியம மானான்
புந்திமே லறிவாம் பாலைப் புலமெனுங் கமரில் வீழ்த்தோன். (௧௮)

பாவனை செயலி ரண்டிற் பத்தியாற் பயத்தான் மற்று
மேவரும் விளையாட் டாலு மேலவர் யாரோ ரேனுந்
தேவர்கோன் றிரிகூ டத்தைத் திசைநோக்கிப் புகழ்ந்து போற்றில்
யாவரு முத்தி சேர்வ ரென்றுநூ லுணர்ந்து மோரான். (௧௯)

புக்குள நகரத் தாரை விலக்குறல் புரிவா னன்றி
மிக்குள புறநாட் டுள்ளார் விண்ணுளார் மண்ணி லுள்ளார்
திக்குளார் திரிகூ டத்திற் செல்வது விலக்க லாற்றான்
ஒக்குளார் மறைக்க வல்லார் ககனமேற் கதிரோன் றன்னை. (௨௰)

புரிதரு சந்தி யோமம் புண்ணிய வொழுக்க நீக்கிப்
பரிவொடு வினவு வாரைப் பரமத நூலால் வென்று
திரிதலா லெதிர்வே றின்றித் தீமையோ னவ்வூர்க் கெல்லா
மொருவனு யுயிர்கட் கெல்லா முறுகண்செய் கலிபோ லானான். (௨௧)

வாரணி தனத்தார் மோக மடமைமையோ னிவவா றாகக்
காரணி பொழிற்சோ ணாட்டுக் காவிரி வடதீ ரத்துத்,
தாரணி புகழு மேன்மைச் சைவமா மறைவல் லாள
னாரண மிருதி யங்க மாகமம் புராண மோர்ந்தான். (௨௨)

கவனமார் மக்கண் மாதர் கைப்பொருள் சுற்ற மாதி
புவனமேல் வாழ்க்கை யெல்லாம் பொய்யென வுணர்ந்த மெய்யான்
பவநெறி யுலக மாயைப் படரிரு ளொதுங்க வுண்மைச்
சிவநெறி விளக்கு ஞானச் செங்கதி ருதயம் போல்வான். (௨௩)

காயிகம் வாசீ கஞ்சேர் கருதுமா னதமென் றோது
மாயமுப் பாலுண் மேலா மரும்பெறற் செயல்க ளுன்னிப்
பாயுநீர் நதிக ளாடல் பரமனைப் பணிதல் வாழ்த்தன்
மேயசீர்த் தியான மென்னும் விதிமுறை மதியி னோர்ந்து (௨௪)

கங்கையே முதலாந் தீர்த்தங் கடவுளா லயங்கட் கேக
லங்கதிச் சயமி லாதா லரிதெனை வுணர்ந்து ஞாலந்
தங்குமெய்த் தீர்த்த மெல்லாந் தருபவந் திரிகூ டத்திற்
பொங்குசித் திரப்பூங் கங்கை தருமெனும் புராண முன்னி. (௨௫)

தக்கசீர்ப் புதலாய்ப் புல்லாய்த் தருக்களாய் விலங்காய்த் தேவாய்
மக்களாய்த் தவங்கள் செய்பு மாதலந் திருக்குற் றால
முக்கட வுளரு மான மூர்த்தியே பலவின் மூர்த்தி
யொக்கமூ வகையி னுலு முயர்ந்ததத் தலமே யென்று. (௨௬)

புனிதமார் தலத்துக் கேகும் புண்ணிய விரதம் பூண்டு
கனைபுனற் பொன்னி யாடிக் கடவுளர்ப் போற்றி வையை
குனிதிரைச் சேதுமூழ்கிக் குமரவேள் செந்தூர் போற்றி
மனுநெறிக் கொற்கை மேவி மறையவர் வீதி சார்ந்தான். (௨௭)

சார்தலுஞ் சைவ வேடந் தனைப்பொருக் குசல னென்பான்
வார்தரு வெண்ணீ றுடி மணியுக்க வடங்கள் பூண்டாய்

கூர்தரு மறையோன் போல்வாய் கோலம்வே றெடுத்த வாற்று
லோர்தரு சுருதி யங்க முணர்ந்திலை போலு மென்றான். (உஅ)

நீதிநூ லுணர்ந்தார் செய்கை நிகழ்த்திடில் வெளியா மென்ன
வோதினான் சைவ வேத னோதலுங் குசலன் சீறி
வாதியேல் வருதி யென்றான் வருமவர் தருக்க நோக்கி
வேதியர் திரண்டா ரங்கோர் விசாலமண் டபத்து நாப்பண். (உகூ)

நாதனைப் பரவா வண்ண நாதனை நெறிவே றாக்கும்
போதனைக் குசலன் வாய்மை புகல்வது புணர்ப்போ வென்பார்
சாதனைக் கள்வர் சோரந் தனைவெளிப் படுத்த வந்த
சோதனைக் கணிதர் போலத் தோன்றினன் மறையோ னென்பார்.()

காதிய மறையோன் கல்விக் கடலென்பார் குசல னென்பா
னோதிய நாவாய் வீறின் றடைகவு முரியோ னென்பா
ராதலி னிரண்டு மின்றே யவையகத் தறிவோ மெனபார்
நீதிநூ னெறியில் வென்றார் நெறியில்லா நிற்போ மென்பார். (௩க)

அந்தண ரிவ்வா றாக வருமறைச் சைவ வேதன்
வந்தன னிருந்தா னோர்பால் வைதிகச் சவையி னூடே
கொந்துசேர் சமைய வாதர் குழாத்தொடுங் கங்குற் கூட்ட
மிந்துவை யெதிர்ந்தா லென்ன வெதிர்ந்தனன் குசலன் மாதோ. ()

இயம்புதற் கெதிரா விட்டா னெண்ணிலா மதத்தோர் தம்மை
நயம்பெறு சைவ வேத னன்கென வவரைக் கூவிச
சயம்பெறு மறைநூ லாலே சமையநூல் பலவும் வென்று
வியன்பெறு மறிவி லாதீர் வெறுவிதி னெழுக வென்றான். (௩௩)

ஆங்கவ ரெழுந்த காலை யரியமா மறையோ ரெல்லாம்
பாங்குசேர் சைவ வேதன் பரிவுசே ருரையி னாலே
தாங்குப தேசம் பெற்றுச் சைவவை திகங்கள் சார்ந்தார்
வாங்குசீர்த் தமிழ்நா டெல்லாம் வாய்மையா லுயர்ந்த வன்றே. ()

வளர்ந்தது திருவெண் ணீறு வஞ்சகர் வெருவி யோடத்
தளர்ந்தது சமைய பேதஞ் சைவவை திகங்க ளோங்கிக்
கிளர்ந்தது மேலோர் சங்கங் கிளைத்தது நியதி நீதி
யளர்ந்தது புவன மூன்று மண்ணலஞ் செழுத்தின் செல்வம். (௩௫)

அண்ணினா ரிவ்வா றுக வ விலாக் குசல னென்பான்
கண்ணினாற் கண்டா லன்றிக் கடவுளைக் கருதே னென்றான்
புண்ணிய நூலாற் காணப் பொறியிலாய் மறலி தூதர்
நண்ணுதீ வினையிற் காண்டி நாளையென் றெழுந்தான் மேலோன். ()

சைவமா தவர்கள் சூழச் சங்கமா மறையோர் போற்ற
மெய்வளர் சுருதி யார்ப்ப விறற்சிவ மறையோ னேகிப்
பொய்வளர் மனத்தார்க் கெட்டாப் புனிதனைத் திரிகூடத்துத்
தெய்வநா யகனைப் போற்றித் திருவருள் பெற்றுப் போந்தான். ()

வேறு.

கேழ்பெருகுஞ் சிவமறையோன் றனைவணங்குங் கேள்வியினார்
வாழ்வுபடைத் தினிதுயர்ந்தார் வணக்கவணங் காக்கழைபோற்
றாழ்வுபடைந் தான்குசலன் செல்வம்போய்த் தடுமாறி
யாழ்கடலிற் கலங்கவிழ்த்த நாய்கன்போ லலமந்தான். (௩௮)

ஏயுநான் மறைப்பொருளைத் தெய்வத்தை யிகழ்ந்துரைத்த
வாயிலூறு சுவைக்கலந்து வறுமையாற் பசியுழந்து
நோயினா லுருவழிந்து நோக்குவார் புறம்பழிப்பத்
தாயனார் புறந்தள்ளச சந்தியிறபந் தாயினான். (௩௯)

ஏற்பதற்கோர் சவியின்றி யையமிடு வாருமின்றி
யூர்ப்புறமா மம்பலத்தி லுழன்றுபிணி யாற்சுழன்று
தீர்ப்பதற்கோர் செயலின்றித் தெண்ணீரென் றேதவித்துப்
பார்ப்பதற்கோர் துணையின்றி யாவிபதை பதைத்திறந்தான். (௪0)

இறந்தானைக் காலபட ரிரும்பாசத் தாலிறுக்கிப்
பறந்தாடக் காலதண்டங் கொடுபுடைத்துப் படிவமெலாந்
துறந்தாட மூவிலைவேல் கொடுசுழற்றிச் சுழல்விழியை
மறந்தாவுங் கருங்காகம் வளைந்துகுத்தக் கொடுபோனார். (௪௧)

இவ்வாறு கொடுபோங்கா லிவன்புரிந்த கொடுவினையு
மவ்வாறு மறையவன்சொற் சூளுநினைத் தயர்காலைச்
செவ்வாறு திரிகூடத் தெல்லையதோ வடுத்ததென
வெவ்வாறு கொடுதிருப்பி நமன்றூதர் விலக்கினரால். (௪௨)

அருண்மறையோன்மொழிக்கிணங்கானலைந்திடுந்தூதுவர்மொழியாற்
பொருவிலிளமையிற்பயின்ற காந்தத்தின் பொருளுணர்ந்து
கருகரியார் திரிகூடங் கதிதருமென் பதுகுறித்தான்
குருமொழியை யிகழ்ந்தார்க்குத் தண்டமே குருவாமால். (சங)

சுறுக்கினுற் பணிவதற்கோ தூதர்வரிந் திடுகயிற்றி
னிறுக்கினல் விழிபிதுங்கி யிருகரமுங் கூடாதா
லுறுப்பயர்ந்து வீழ்வார்போல் வீழ்ந்தொருக்காற் றிரிகூடங்
குறிப்பினுற் றிசைநோக்கிக் குற்ருல மெனத்தொழுதான். (சச)

குற்ருல மென்ருெருக்காற் கூறுதமிழ்ச் சுருதிமொழி
நற்ருலந் தனிற்பெருகி நாலுதிக்கி லும்பரந்து
பொற்ருலந் தனைநிறைத்துக் கயிலாயப் பொருப்புறையு
முற்ருல நிழலமர்ந்தார் திருச்செவியின் முழங்கியதால். (சரு)

ஒருக்கான்முன் பணிவதற்கா வீழ்ந்தானை யுடனுறக்கி
யிருக்காலும் வீழாம லெழுவயிரங் கொடுபுடைப்பார்
செருக்கான்முன் பிணித்தவடந் தெறிகதோடச் சிவபெருமா
னருட்பாலின் முழங்கியதா லந்தரதுந் துபியோசை. (சசா)

தேவமுர சதிர்தலுமே தென்புலத்தார் விடுதகன்ருர்
பாவமெலா மெங்கோடிப் பறந்ததோ பதகனுக்கு
மேவரிய புண்ணியங்கள் விளைந்தவா றென்சொல்கேன்
யாவரே திரிகூடத் தெந்தைபிரா னருளறிவார். (சஎ)

தூசினுற் பொன்னணியாற் சூழ்மலரான் மறையோனைத்
தேசினு லலங்காரஞ் செய்தார்கள் சிவகணத்தார்
வீசினு ரரமகளிர் வெண்கவரி சாமரைக
ளாசிகூ றினர்முனிவோ ரண்டர்பூ மழைபொழிந்தார். (சஅ)

மாவாசத் தொடைமலரு மானமிசைச் செறிமலருங்
காவாணர் சொரிமலருந் திசைதோறுங் கமழ்வதனுற்
பூவாணர் புகழ்குசலன் புட்பகந்தப் பெயரினனுய்த்
தேவாதி தேவனுறை கயிலாயஞ் சேர்ந்தணைந்தான். (சகூ)

போந்துசரண் பரவலுமே புத்தேளி ரிப்பதவி
நீந்தரிய கொடும்பாவிக் கென்னனவே நிகழ்த்துதலுங்

காய்ந்துகொடுந் தூதருயிர் கொடுபோங்கா லகரங்குவித்துச்
சேர்ந்ததிசை குறித்தெமது திரிகூடந் தொழுதனுல். (ருo)

அச்சத்தால் விளையாட்டா லார்வத்தா லாரேனுஞ்
செச்சைத்தார் கமழ்தருநந் திரிகூடந் திசைநோக்கி
நிச்சத்தாற் பணிவாரேற் பாவமெலா நெரிந்தோட
வுச்சத்தா லுயர்கயிலை யெமதுபதத் துறைவாரே. (ருக)

ஆதலாற் பெறுவதிவ னழியாத பதவியென
நாதனு ரருளுஞ் தனு நண்ணுசிவ கணமாகிப்
பூதநா யகர்கயிலைப் புனிதர்பதம் பிரியாமல்
வேதன்மால் பெறவரிய பதமபெற்றுன் வியன்மறையோன். (ருஉ)

விதுவுண்டார் புனைசடையார் விறலரிக்குச் சித்திரப்பூம்
பொதுவுண்டார் திருநடத்துப் புகன்றநிது வெனப்புகன்று
மதுவுண்டா னுயிர்மீட்ட மகிமைகூ றெனச்செவிகட்
கிதுவுண்டாட் டெனமுனிவன் யாகமுனி வர்க்கிசைப்பான். (ருங)

12 - புட்பகந்தச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - அoஉ.

---

## பதின்மூன்றுவது :—தருமசாமிச் சருக்கம்.

மாப்பழுக்கும் பொதும்பர்தொறு மலைபழுத்த தெனத்தோன்றிக்
காப்பழுக்காய்க் குலைசிதறிக் கண்ணேணி கடித்தசினை
மீப்பழுக்கண் மிசைத்தாவும் வெய்யவன்றேர்க் கால்வழுகத்
தேப்பழுக்கு முயர்பெருமைத் திருவழுதி வளநாடு. (க)

தொழுதிவள நாட்டணியாந் தொகைமணிக்கு முகமணியா
யெழுதிவள நாட்டுமுலை யிந்திரைமந் திரமாகிக்
கொழுதிவள நாட்டமெனக் கோமடந்தை முகமெனவாழ்
வழுதிவள நாட்டுறையு மறைவாணர் குலதிலகன். (உ)

அந்திபகற் புனலாடிக் கடன்கழிப்ப தறமாகப்
புந்திபுற வாச்சிரமம் போற்றுவது பொருளாக
விந்துவணி சடையாரை யேத்துதல்பே ரின்பமதா
முந்துநெறி யிவைமூன்றுந் தரித்தனைய முந்நூலான். (ங)

ஒருநெறியு மிருபிறப்பு முத்தழலு முயர்நான்கு
சுருதிகளு மைந்துவகை வேள்வியுஞ்செய் தொழிலாறுங்
கருதுமெழு பவமுணர்ந்த காட்சியுமெண் டிசைமதிப்பும்
பெருகுநவ தாரணையும் பெற்றசிவ சாமியென்பான். (௫)

பன்னமடைக் காயெதிரிற் பாலர்போற் பழவடிசின்
மன்னிடத்தில் விருத்தர்போன் மான்றோற்கு மாமுனிபோற்
பொன்னனையா ரிதழ்த்தேனிற் பூந்தேனிற் புனவேங்கை
முன்னுறுதேன் போற்பிரம சரியமுடித் தொழுகுநாள். (௬)

கோதிலா நிறைகேள்விக் குரவனடி யிணைபரவி
யாதியா மறைவகுத்த வாச்சிரம மொருநான்கி
னாதியங்க ளிம்மையினு மறுமையினு முதவுமது
யாதுபுக லெனக்கேட்ப வாங்கவனு மெடுத்துரைப்பான். (௬)

பேதையர்பான் முகம்பாரா தோதல்பிர மசரியங்
காதலியை மணம்புணர்ந்து வாழ்தல்கா ருகத்தியமா
மாதரொடு வனத்துறைந்து நோற்பதுவா னப்பிரத்த
மோதுமிவை மூன்றுமொழித் தொன்றுணர்தல் சந்யாசம். (எ)

முன்னிரவி யுடன்மடவார் முகம்பார்ப்பார் மறைபாரார்
நென்னலமு தடைக்காய்கைந் நெகிழார்செந் தேனிகழார்
முன்னுசிகை முஞ்சியுடன் மான்றோலுங் கைவிடுவார்
துன்னுபிர மசரியத் திருந்தாலுந் தூர்த்தரே. (அ)

பதித்துணைவி நீராடிற் பன்னிருநாட் படிகடவார்
விதித்தகுல தருமம்விடார் பிறர்மனையை விரும்பலுறார்
துதிப்பமனை யறத்திருந்துந் துறவோரே துறவோராய்க்
கதித்தமனஞ் சுழிபட்டா ரிருவகைக்குங் கழிபட்டார். (கூ)

இத்தகைய நால்வர்களின் மூவருக்கு மிறந்தார்க்கு
மதந்தமுத லற்றோர்க்கு மாதார மாதலினு
முத்தமமா மில்லறமே வாழ்வினுக்கு முயர்கதிக்கும்
வித்துமாந் துறவறத்தின் வேருமா மெனும்வேதம். (௧௦)

தருமமெனும் பண்டமிடுஞ் சகடமா மனைவாழ்க்கை
கருமநுகம் பிணித்தமனைக் காதலியுந் தானுமென

விருவராய் முறைசெலுத்தி னெத்துணைந்தா ரமுஞ்செல்லு
மொருவராய்ப் பூண்டிழுப்பி னேரிறையுஞ் செல்லாதால். (கக)

விறல்பூண்ட வுயிர்க்குறுதி யிம்மைமறு மையும்வீடு
மறமூன்றும் பொருளிரண்டு மின்பமொன்று மளிக்குமவை
துறவேலா தில்லறத்தின் றெக்காகு மெனமறையோன்
பொறைபூண்ட மனைக்கிசைந்த மாதரிலக் கணம்புகல்வான். (கஉ)

வேறு.

தோடலர்பங் கயமிருதாள் புறவடிபுத் தகம்பரடு துணைத்த ராசா
மாடல்பெறு குதிகனகப் பரதுகணை கால்ரவ மலவன் சானு [நாபி
நீடரம்பை தொடைகுறங்கு கரிக்கைகொடி யிடைமணித்தேர் நிதம்ப
நாடுநீர்ச் சுழியுதர மாலமயி ரொழுங்குமுலை நாளங் கஞ்சம். (கங)

விரல்பலவங் கிளிமூக்கு வள்ளுகிர்செங் கரங்காந்தள் விலை
முன்கை, •வரையிருதோள் வளைமிடறு வள்ளைகுழை குமிழ்மூக்கு
வதனந் திங்க, ளிருகவுள்கண் ணடிநாட்டங் கருங்குவளை முல்லை
நகை யிதழ்செவ் வாம்ப, லொருபிறையு மிருசிலையு நுதல்புருவம்
பருவமுகி லுயர்மென் கூந்தல். (கச)

கருமைசூழ் தருமோதி கண்ணகச் செம்மையுகிர் கால்கை நா
வாய், பொருவருகட் கடையாக வெண்மைமணி முறுவல்பொறி
பொன்மை யாக, வொருமைமயிர் நுதிநாடி நாவாக விருமையுயர் புரு
வ மாக, மருவுகடி தடமுலைகண் பெருமைநகை சிறுமையிடை வறு
மை யாக. (கரு)

கால்விரல்க ணிளரூது குறுகாது நெருங்காது கலந்தி டாது
சேல்வரைசங் கழுங்கொடியு நடுவிரனேக் கியவரையுஞ் சீரி தாகு,
மேலிருகை விரனெடிதாய் நேரியதாய் நெருங்கிவிரி கமலந் சங்கம்
போலவரை கிடந்துதுரும் பிடைகிடவாப் பொம்மன்முலைப் பூவை
யாமால். (கசு)

எண்புநரம் பெழலாகா வெவ்வுறுப்பு மூரோமமைம்பா லின்றி
யாகா, மென்கடிநா லாறுகள நானநுதன் மூன்றிரண்டு விரலா
நாடி, நன்குபெறு மளவாகிக் கூந்தலிரு குழைமூக்கு நாட்ட நீண்டு
பொன்பொலிவு நிறைபொறையும் பணிமொழியு முடையளெனிற்
பூவை யாமால். (கஎ)

இன்னவகை யிலக்கணங்கள் குறையாமல் லொன்பதின்மே லாண்டே ழுமற், பன்னிரண்டு பகர்குணத்தின் முறைமேவி நிறைமேவும் படிமை வாய்ந்த, கன்னியே மணம்புரிதற் குரியளா முலகுதனிற் கடிசேர் மன்றன், முன்னர்மறை யொருநான்கும் வகுத்துரைத்த விருநான்கு மொழியக் கேண்மோ. (கஅ)

வேறு.

இருவரு மிரைங்கு களவுகந் தருவ முனந்தரி விணங்கல்லை சாசம், பெருவலி யதனுன் மருவுத லரக்கம் பேசிலக் கெய்தலே யசுரம், பொருளுகந் தளித்த லாரிடம் பிரசா பத்தியம் பொருள்கொளா தளித்த, லருமகம் வேட்பித் தளித்தலே தெய்வ மழைத்தெதிர் கொடுத்தலே பிரமம். (கக)

வேறு.

ஆதலாற் பிரமமதே யதிகமெனப் புகல்குரவ னருளைப் போற்றி, யோதலான் டறுநான்கி னிரட்டிபிர மச்சரிய முனுற்றி ஞானவேதபா ரகனொருவ னிலக்கணஞ்சேர் தன்மகளை மிளிர்பொன் பூட்டிக், கோதிலா மூவேழு குலமுமுய்ய விதிமுறையிற் கொடுத்தான் மன்னே. (உ0)

வேறு.

மின்னினிடை யன்னநடை விம்பவிதழ்க் கும்பமுலைக்
கன்னன்மொழிப் புனிதவதி காதன்மணம் வேட்டுவந்து
முன்னவனுஞ் சிவசாமி முப்பொழுதுங் குறைமுடித்து
மன்னியமுத் தழல்வளர்த்து மனையறஞ்செய் துறையுநாள். (உக)

பெருவாரி சூழுலகிற் பிறர்தன்னைப் பேணுங்கா
லருநாணம் பழிநாண மறிவுகொடை மடமென்னு
மிருநானு மிருமடமு மிசைவானை வசமாக்க
வொருநாண முதலமருந் தோரைந்து மெனவுணர்வாள். (உஉ)

மடநாண மெனுமியற்கை மாறுமலருட் கணவ
னுடனாக வுவந்துறைத லூநாண்மை யெனநான்கு
மடனாக வுறப்பெற்றுள் கணநாணு மலர்க்கூந்தல்
விடநாணும் வரிவிழியாண் மேலொன்றுன் மனந்தளர்வாள். (உங)

பதியின்வாழ் புனிதவதி கொழுநனடி பணிந்தொருநா
ணிதியிலா தவரிளமை நீரிலா நெடுவாவி
நதியிலா வளநகர நரபதியி லாநாடு
மதியிலா வுயர்வான மக்களிலா மனையென்றாள். (உ௪)

பைந்தொடிகூ றலுமறையோன் பண்டைநாண் முனிவர்கடன்
முந்துபிர மச்சரிய முயன்றுகழித் தோமனையாற்
செந்தழன்மா மகம்புரிந்து தேவர்பெருங் கடன்கழித்தோ
மைந்தனாற் பிதுர்க்கடன்கள் கழிப்பதினி வழக்கென்பான். (உ௫)

மெய்ந்நெறிசேர் மகவேண்டின் மிக்கதவஞ் செயல்வேண்டு
முன்னெறிமெய்த் தவம்புரிதல் சிறுபொழுதின் முடியாதா
லிந்நெறியே யெய்துகமென் றியன்மறையோன் மனைவியுடன்
சென்னிமிசை யாறணிந்தார் தலம்பரவச் சென்றணைவான். (உ௬)

கூடல்பூ வணம்புதுவை கொடுங்குன்றம் புனவாயி
லேடகந்தென் கானப்பே ரிராமேச துச்சுழிய
லாடானை பரங்குன்ற மாப்பனூர் நெல்லைமுதற்
றேடரிய தலம்பரவிக் குற்றாலஞ் சென்றணைந்தான். (உ௭)

சீதமுகில் கண்படுக்குந் திரிகூடத் தெய்வவரை
வேதம்போ லாகமம்போன் மெய்ப்பொருள்போன் மேலான
போதம்போன் மந்திரம்போற் புண்ணியம்போற் பூதலத்தோர்
மாதவம்போற் பொலிந்தோங்கும் வடவருவித் துறைகண்டான். ()

தருப்பைவலக் கையிலேந்திச் சங்கற்ப முறைபோற்றிப்
பருப்பதத்தை முதல்வணங்கித் தடாகத்திற் படிந்தேறி
யுருத்திரமா மனுவோதி யோங்குநூல் விதிமுறையே
திருத்தகுபூ சனைபுரிந்து சித்திரகங் கையைப்பரவி. (உ௯)

அறையோசை யணங்கோசை யந்தரபல் லியங்கறங்கு
முறையோசை வலம்புரிகண் முழக்கோசை முகிலோசை
மறையோசை மாதவர்கள் வானவர்க ளுவந்தாடுந்
துறையோசை செவிகுளிர்ப்பத் தொழுதருவித் தடங்குளித்தான்.

அருவிநீர் படிந்திடுங்கா லரும்பாவங் கழுநீராய்
வொருவிப்பிரிந் தோடுதலால் வெவ்வினைவென் றவனுஞன்

தருபுலனென் றியநிலையாற் றன்னையுணர்ந் தவனா
னுருவிலொளி தெரிசனந்தா லொருபொருள்கண் டவனானான். (௩௧)

அங்கருவிப் புனலாடி யருநியமக் குறைமுடித்துப்
பொங்குசீ ரக்கமணி புண்ணியவெண் ணீறணிந்து
திங்களணி திரிகூடச் சிவபிரா னடிவணங்கி
மங்கலஞ்சேர் திருவாக்கான் மனவரம்பெற் றேகினான். (௩௨)

பதிமேவிச் சிலநாளிற் பதுமைநிகர் புனிதவதி
கதிமேவுந் திருவயிறு கருப்பமுற விருப்பமுற
மதியாறு புகுந்தவுடன் மதியாறு புனைந்தசடை
முதியார்பொன் னடிபரவிச் சீமந்த முறைபுரிந்தான். (௩௩)

பங்கயமா முகம்வெளுப்பப் பசுநரம்பு தளதளப்பத்
துங்கநடை தளர்ந்துவரத் துடிமருங்கு வளர்ந்துவரப்
பொங்குமுட லயர்ச்சிவரப் புளித்தவூண் முயற்சிவரத்
திங்களது நிறைந்துவரத் திருவயிறு நொந்துவர. (௩௪)

நிற்குமுயர் சாதிநெறி நீதிவரம் பும்பெருக
நற்கவிமா லவனுதிப்ப வமரர்குரு நனிபார்ப்பச்
சற்கரும வைதிகமுஞ் சைவநெறி யுந்தழைப்பக்
கற்கர்கோத் திரம்விளங்கக் காதன்மக வைப்பயந்தாள். (௩௫)

பிறந்தநா ணீராட்டிச் சாதகன்மம் பெரிதியற்றி
நிறைந்தபதி னொருதினத்து நாமகன்ம நிறைவேற்றிச்
சிறந்தபெருந் தருமமெலா நிறைவேறு செய்கையினா
லறந்தழைக்கும் பெயர்தரும சாமியென வறைவித்தான். (௩௬)

வேண்டுமதி யொருநான்கின் மறுகினிடை மிதிப்பித்துத்
தாண்டுமதி யிருமூன்றில் வாயுறையின் சடங்கியற்றி
யாண்டுமூன் றினிற்சவுள மையாண்டின் மூன்றாலுங்
காண்டகைய முறையியற்றிக் கலைபலவும் பயில்வித்தான். (௩௭)

இருக்கினொடு தயித்திரீயஞ் சாமமதர் வணமென்னும்
பெருக்கமறை நான்கோதி மந்திரஞ்சந் தோபிசிதி
நிருத்தஞ்சோ திடநிகண்டு வியாகரண மெனநிகழ்த்து
மருத்தியா றங்கமுணர்ந் தாகமத்தின் வகைதெரிந்து. (௩௮)

வாராகம் வாயவிய மச்சம்வா மனம்பதுமங்
காருடமாற் கண்டேயங் காந்தம்வயி ணவஞ்சைவங்
கூர்மமே பாகவதங் குலவுபவி டியமிலிங்கம்
பேர்பிரம கைவர்த்தம் பிரமாண்ட மாக்நேயம். (௩௯)

இன்னவகை யாயபதி னெண்புரா ணம்பயின்று
மெய்ந்நெறிசேர் மிருதிகளும் விரித்தோதி மறைச்சிறுவன்
சொன்னகலை மதிகொழுந்து நெய்சொரியுஞ் சுடர்க்கொழுந்தாய்த்
தன்னையன்றிப் பிறிதொருவர் தனக்குநிக ரிலையானான். (௪0)

பொன்னழகு குண்டலமும் புயத்தழகு புரிநூலு
முன்னழகு நிறைந்தமதி முகத்தழகு முடித்தசிகைப்
பின்னழகுங் காணுதொறு மடவாரைப் பேசுவதென்
கன்னலெனுஞ் சிலைபிடித்த காமனுங்கா முறவளர்ந்தான். (௪௧)

ஆளையாண் மதிமருட்டு மடங்காத மெய்வடிவு
நாளைநா ளதிசயிப்பக் கற்றநல வும்பார்த்துக்
காளையாம் புதல்வனுக்குக் காதலா லருமறையோன்
வாளைநேர் விழிமாதை வதுவைமணம் புரிவித்தான். (௪௨)

நாட்டகத்தி லுயர்குடியா யுயர்குடியி னனிவேட்டு
வேட்டகத்தும் பிறந்தகத்து மேன்மேலுஞ் சிறப்பெடுப்பத்
தோட்டகத்து வனருகமு நீலமுமோ தூவ றபூத்த
கோட்டகத்து வெறியாடுங் கோலமதுகரபானான். (௪௩)

அழகினு லுயர்குலத்தா னுலும் பெருங்காமக்
குழகினாற் சீருணத்தின் குடப்பால்போற் குணந்திரிந்து
பழகிடா மூர்க்கரொடும் பழகினான் கல்வியெனுங்
கழகமாம் பெரும்பயிர்க்கு மூடமெனுங் களைமூட. (௪௪)

முதியமறை நூல்விடுத்து மோகமத நூல்பயிற்றி
யதரமுதற் பதினொன்று மமுதநிலை பதினைந்து
மிதமுறுமா லிங்கனமு மெண்ணில்கர ணமுந்தெரிப்பான்
பதுமினிசித் தினிமுதலாம் பாவையரைத் துருவுவான். (௪௫).

அந்நாட்டி லொருமடந்தை யனங்கமோ கினியாவாண்
மின்னான துருவெடுத்து மேகமெனுங் குழன்முடித்துத்

தென்னாடு வளம்பார்க்க வந்ததனை யாடிரும்பப்
பொன்னாடு தனிற்போகாள் பொம்மன்முலை கனத்ததனால். (சசு)

பிடியிருக்குஞ் சிறுநடையாள் பெருங்காம னபிடேக
முடியிருக்குங் கனதனத்தாண் முத்திருக்குங் குறுநகையா
டொடியிருக்குஞ் சிற்றிடையாள் சூதுபெருங் குடிலமெலாங்
குடியிருக்கும் படைவிழியாள் குமரிருக்குஞ் சசிபோல்வாள். (சஎ)

முலைவேழ முன்காப்ப மூரிமதன் பின்காப்ப
வலைவீசுங் கலகவிழி வாள்களிரு புறங்காப்ப
வலையாழி சூழுலகை யாணைவசத் தாலடக்கிக்
கலைவேலிக் குள்ளாக வரசிருக்குங் கடிதடத்தாள். (சஅ)

தூயசிலை கரும்புருவந் தோளிணைகள் கரும்புருவந்
தேயுமிடை தடித்துவருந் திரளுமுலை தடித்துவருங்
காயுமத னொடுபிறந்தாள் கமடமுது கிருபுறந்தாள்
சாயலொரு மேனகையா ளவரும்பு மேனகையாள். (சகூ)

பாடலாற் கருங்குயிலைப் பணிகொண்டாள் பரிமளப்பூங்
காடெலாம் பூங்குழலாற் கைவிலைகொண் டாள்கடல்சூழ்
நாடெலாம் பணிகொளவோ நாகநாட் டரம்பையரை
யாடலாற் பணிகொளவோ வரங்கேறத் தொடங்கினாள். (ருo)

கங்கர்சோ னகர்கலிங்கர் துளுக்குடகர் கருநாடார்
சிங்களர்சா வகர்கொல்லர் தெலுங்கர்கோ சலர்சீனர்
வங்கர்கூ விளர்மகதர் வார்பொழிற்க டாரர்முதற்
கொங்கணரு நிறைந்ததமிழ்க் கொற்கையார் பெருஞ்சபையில். (ருக)

அன்னமோ வானாட்டி லரம்பையோ முனிவோரை
யின்னமோர் முறைமயக்க வெழுந்தமோ கினிதானோ
சொன்னமோ மந்திரதி தோற்றமோ சிலைக்காமன்
சின்னமோ மடமாதர் தீபமோ வெனப்புகுந்தாள். (ருஉ)

புட்படுக்குங் கொலைவேடர் புதலூடு மறைவதெனத்
திட்டமுறுஞ் சதிபார்த்துச் சமரிக்கைத் திரைமறைந்து
மட்புலத்தா டவரிதய மச்சமெலாங் கண்வலையா
லிட்டபடிக்கச் சிலைக்காம னொளிபிருப்ப வெளிப்போந்தாள். (ருங)

பத்தியிசைக் காம்போதி தோடிபயி ரவிபாடத்
தித்திசிறு முகவீணை சீங்குழலின் னரம்பிழற்ற
மத்தளங்க ளிருபுறமும் பரதமுறை வகுத்தியம்பத்
தத்தளங்க தளங்கவெனத் தாளமுறை முறைமுழங்க. (௫௪)

பிள்ளையார் கவித்துவமும் பேரணியு மஞ்சலியுந்
தள்ளரிய சலாந்தருவுஞ் சவுதவிகற் பமுங்காட்டித்
தெள்ளியசெக் கணியாடிக் குச்சரா திகள்சேர்த்துக்
கள்ளவிழி போராடக் கையிலபி நயமெடுத்தாள். (௫௫)

மண்ணின்மேற் பெயர்ந்தாளோ வானின்மேற் குதித்தாளோ
கண்ணின்மேற் கலந்தாளோ கருத்தின்மேற் புகுந்தாளோ
பண்ணின்மேல் வரிச்சுரும்போ தும்பியோ படர்மயிலோ
விண்ணின்மே லுருப்பசியோ மேனகையோ வெனநடித்தாள். ( )

தாள்வீசும் பவுரிதொறுஞ் சதிவீச மணிச்சிலம்பு
வேல்வீசும் பொருகணைக்கு வில்வீசுங் குனிபுருவந்
தோள்வீசுந் தொறுங்கனகத் தொடிவீசு கதிர்ப்பிரபை
வாள்வீசுங் கலகவிழி வலைவீசுந் தவத்தோரை. (௫௭)

கொட்டமிடு மன்னரெலாங் கொம்பனா ளிச்சைவலையிற்
பெட்டலைபு மிருசெவியா மசுணமாப் பிறிததாலுங்
கட்டழகா மதுவீழ்ந்த கண்வண்டு பிறித்தாலும்
வட்டமுலைக் கிடைநுழைந்த மனம்பிறிக்க மாட்டாரால். (௫௮)

அச்சிருந்த தேவரம்பை யனங்கமோ கினிபார்வை
நச்சிருந்த கணைகாதிற் கோப்பிருந்து நனிதடுப்ப
வெச்சிருந்த கொடியிடையை யிடையவருத் தியமுலையைக்
கச்சிருந்து தடுத்ததனாற் பிழைத்தனர்கா வலரெல்லாம். (௫௯)

மின்னுடைய சிற்றிடையாள் வியந்தாடு மவைக்களத்துத்
தன்னுடைய தோழரொடுந் தருமசா மியுமிருந்தான்
பொன்னுடைய திதலைமுலைப் பூவுலகின் மடவார்க்கு
ளென்னுடைய மனங்கவர்ந்தா ளிவளொன்றே யதிசயித்தான். (௬௦)

பேசசியிலும் பார்க்கையிலும் பேரனங்க மோகினிக்கு
மாசையிவன் மேலிருக்க மானாலுந் தன்மனத்தை

வேசையெனுங் குலத்தொழிலால் விலக்கினா டகம்புரிந்தாள்
காசையும்பொன் னையுநயந்தார் காமனையு நயப்பாரோ. (௬௧)

வேறு.

சென்றகா லெனவே யாடல் செலுத்தியெண் டிசையு ளோரை
வென்றன ளுலகை யெல்லாம் வெல்லுவ ளெனவே வேந்தர்
நன்றென வரிசை கோடி நல்கினர் பூரை பூரை
யென்றன ரெழுந்தார் மேலோ ரேங்கினர் காமப் பாலோர். (௬௨)

வேறு.

கொட்டுறுநா டகக்கணிகை கூத்தொழிந்த வவைக்கூட்டம்
விட்டிடையுங் குளநீர்போல் வீற்றுவீற் றாயேகி
யிட்டுணர் வளம்போன்ற தேந்திழைபோய் மனைபுகுந்தாண்
மட்டறு மயல்பூண்டார் வலைபுகுந்த கலைபோன்றார். (௬௩)

அரங்காடல் கூடியபின் னவள்காமக் குளிர்பிடித்துக்
குரங்காட லெனச்சுழல்வார் குழாநோக்கிக் கொடுங்குழையாள்
வரங்காணுஞ் சிவசாமி மைந்தனுக்கே யெதிர்கொண்டா
டரங்காணு மீன்பார்த்துத் தப்பவிடாக் குருகதுபோல். (௬௪)

வேறு.

மெல்லெனச் சிலம்பு தண்டை கிண்கிணி மிழற்றப் பாவை
யொல்லென வெதிர்கொண் டேகி வருகென வுருகப் பேசுந் [திக்
சொல்லெனுஞ் சுவையைத் தூண்டிற் சுவைகொளு மீன்போன் மாந்
கல்லெனும் வளைக்கை பற்றிக் கணிகைதன் மனையிற் போனான். ()

ஆடக மனைகை வேவி யணையொரு கொப்ப மாகச்
சேடியர் வேட ராகச் செழுமறைக் களிறு சேர்ப்ப
நாடகத் தாயோர் பாகாய் நாமெனுந் தோட்டி பூட்ட
வாடிய மருங்குல் வல்லி தளையிடும் வல்லி போன்றாள். (௬௬)

பொன்னொளிர் வாரை மீறிப் புணர்முலை பிதுங்கிப் பாதித்
துன்னொளி தோன்ற நின்றாள் சுடரொளிப் பதங்கம் போன்றான்
மின்னொளி விண்ணில் வீழ மீனொளி விரக வேசை
தன்னொளி நோக்கு வாரோ தமதொளி வளர்க்கு மேலோர். (௬௭)

விரைமல ரனிச்சப் போதின் மெல்லிய வுனது பாதந்
தரைமிசைத் தரித்து நிற்கி லென்னுளந் தரியா தென்பா
னுரைதனிற் குறிப்பு நோக்கி யொருவினர் சிலதி மார்க
ளரியபொற் கபாடம் பூட்டி மெல்லிய லணைமேற் சேர்ந்தாள். (௬௮)

நறைமலர்த் தாமஞ் சூட்டி நானமும் புழுகு மாட்டி
முறைமுறை சுருள்க ணல்கி மோகன நயங்கள் செய்வாள்
பிறையுகிர்க் குறிக ளாதி புறத்தொழிற் கலவி யெல்லாந்
துறைபயில் காம நூலின் சூத்திர வுரைபோற் கொள்வான். (௬௯)

மங்கைதன் மதனப் பார்வை வழிச்சென்று மலர்த்தா ணீவித்
தங்கிய வுதர ரோமச் சங்கிலி சார மாக்கிக்
கொங்கைமால் வரைமேற் றாவிக் குழலிசைத் தேனீ யோச்சிச்
செங்கனி யிதழ்த்தே னீட்டி வேட்டுவச் சிறுவன் போன்றான். ()

கடிகமழ் கனிவாய் வள்ளக் கள்ளுண்டு மயங்கித் தேங்கி
வெடிதரு புழுகு நானம் விரைகமழ் சேற்றுற் கொங்கைத்
தடவரை வழுக்கி ரோமச் சாரமுந் தரியா துந்தி
மடுவெனுஞ் சுழிவீழ்ந் தாசை மாப்பெருங் கடலி லாழ்ந்தான் (௭௧)

முத்தரிச் சிலம்பு கொஞ்ச முகிண்முலை குழைய மோகம்
வித்தரிக் கின்ற தெல்லாம் வியன்பொருட் பங்கி வாங்குங்
கத்தரி யென்ப தோரான் கன்னியென் னுயிர்நீ யென்றான்
புத்தரி விழிகள் சேப்பப் புலந்தன ளுடல்வே றென்று. (௭௨)

அலத்தக மலர்த்தா ணீவி யாடலா லூட னீக்கி
நலப்பெருஞ் சுவைகண் மாந்தி நடக்குநாள் மறையோன் றன்னைக்
கலத்தலி னிடங்க டோறுங் களிதரு புலவி மூட்டிப்
புலத்தலி னிடங்க டோறும் பொருள்பல கவர்வ தானாள். (௭௩)

வேறு.

மோகமெனும் பாசத்தால் மிகத்தளைந்து முலைச்சுவட்டு
நாகமதால் வசப்படுத்தி நகக்குறியெனுங் குசமழுத்தி
பாகடைக்க ணோரிசுத்தாண் மறைக்களிற்றை மதமடக்கிப்
போகமெனுங் கவளமவன் யொருளவாவிற் புரிகின்றாள். (௭௪)

ஓமமே மந்திரமே யொவ்வொன்றாக் குறைந்துவரக்,
காமமே நிறைவாகக் கருமமெனுந் துணைபிரிந்து,
பூமலர்வெங் கணைமதனை வென்றபுரி நூன்மார்பன்
வாமமே கலைநிதம்ப வாளரவான் மதிதோற்றான். (எரு)

திவளுமுதன் மனையிலன்றித் தேவரமு தளித்தாலுங்,
கவர்வதென வொருபொழுதுங் கருதாத நெறியாளன்
புவளவிதழ்க் கனிபாலைப் பருகும்விருப் பதுபோல
வுவண்மனையிற் கனிபாலு மருந்துவது பொருந்தினான். (எசு)

எண்ணுவது மதனகலை யெழுதுவது முலைத்தொய்யி
லுண்ணுவது வாயமுத முறங்குவது தனதடமேற்,
பண்ணுசெப மந்திரமும் பாவைசெவி மந்திரமே
துண்ணெனியான் குளிக்குநீர் சந்தமுலைப் பனிநீரே. (எஎ)

கைப்பொருளெ லாங்கொடுத்துக் கல்விகேள் விகண்முதலா
மெய்ப்பொருளைக் கைவிடுத்து வேசைமுலைப் போகமெனும்
பொய்ப்பொருளை கைக்கொண்டான் பொதுமாதர் மயல்பூண்டா
லெப்பொருளுந் தெளிந்தாருந் தெளிவாரோ விருநிலத்தில். (எஅ)

தந்தையுறாஞ் சிவசாமி சங்கிரகத் தனம்போயு
முந்தையார் தேடிவைத்த முதல்போயுந் தான்வேட்ட
சிந்தையார் மனைவிபொருட் சீதனங்கள் போயுமுடை
கந்தையுமாய்ப் போயுமொரு கணிகையார் மயல்போக்கான். (எகூ)

விஞ்சையுறாற் பொருள்கவர்ந்து விரைந்துபகல் வரப்போனான்,
கஞ்சமலர்த் தார்மார்பன் கங்குலினும் வரக்காணு
ளுஞ்சலாா் கனங்குழையா ளுழையரொடு நறவருந்தி
மஞ்சணையும் பஞ்சணைமேன் மயில்போலத் துயில்கூர்ந்தாள். (அ0)

ஆசனங்கள் பயின்மறையோ னருங்கலைகள் விரித்தோதிக்
காரிணங்கு மலர்க்குழலாள் கனதனத்தின் பொருட்டாகப்
பேரிணங்கு மன்னவர்பாற் போந்துகன தனம்வாங்கிப்
பூரிணங்குந் துயிலாளைப் பாராமல் வந்தணைந்தான். (அக)

வேறு.

பொருள்கொடு வரும்வேதன் புகல்கலை மதிசோர
மருள்செயு முகமான மதியொடு குழல்சோர

விருளிடை கலைசோர விரவிடை துயில்வாளை
யருள்பெற விதமாக வடிவரு டுவதானான். ((அஉ))

தண்டைக ளணிகாலைச் சரணென வருடாமுன்
வுண்டுளர் தருகாலை மலரென மலர்கின்றா
யிண்டிறன் மறையோனைத் தெளிகல னழிதேற
லுண்டிடும் வெறியாலே யுரைகுள றுவதானான். ((அ௩))

சுருதியின் மறையோனுஞ் சுரநெறி வருதாகம்
பெரிதென வுரையாமுன் பிணைவிழி மடமாது
சிரகம தறியாதே தேறல்பெய் ததுபாலின்
கரகம தெனவீந்தாள் களகள வெனவுண்டான். ((அ௪))

உண்டபின் மதுவேயோ வுதவினை யெனலோடுங்
கண்டில னென்னவேங்கிக் கைநெறிப் பவள்போன்றாள்
கொண்டவுன் வெறிமேலாக் குலைதலு மவளேதும்
விண்டில னயல்போனாள் வேசைய ருறவாமோ. ((அ௫))

மனநிலை குடிமாறி வுரவர மருளேறிக்
கனவென மொழிசோரக் கலையொடு நிலைசோரத்
தனியொரு துணையாகத் தரைமல ரணையாக
நினைவயர் விலதாலே நிறையறி வினர்போல்வான். ((அ௬))

வேறு.

புணர்ப்புநீர் வெறியிருந்து பொறிமயங்கிக் கிடந்துழல்வா
னுணர்ச்சிதோன் றியபொழுதி லுள்ளமெலா நடுநடுங்கிக்
குணத்தினாற் கல்வியினாற் குலத்தினா லுயர்மறையோன்
கணத்தினாற் புலைபுகுந்த கன்மத்தாற் புலம்புறுவான். ((அ௭))

சீறாரிற் குடிவாழ்வுஞ் சிறியாரைச் சேருதலு
மூறுநீர்க் கிணறுதக மாடுதலு முயர்கேள்வி
யீறிலார் கூட்டரவுந் தாசிவே சையர்நலமு
மாறிடா நிரையமெனு மனுநூலு முணர்ந்துணரேன். ((அ௮))

தூர்த்தைபா லின்பமெலாந் துன்பமெனு மேலோர்கள்
வுரைத்ததியே கேளாமன் மதியழிந்து மதுநுகர்ந்தேன்.

டம். இப்பால் - (அதற்கு) இந்தப்பக்கம். விடலிய - விசாலித்த. சுவேதங்காறும் - சுவேதமலைவரையும். நடவரை - (அந்தப்) பெரிய மலையாகிய சுவேதத்திலிருந்து. நீலங்காறும் - நீலமலைவரையும்.

45. மேல்பால் கடலிடை - மேல் சமுத்திரத்தினிடத்திலுள்ள. கந்தமாதனம் - கந்தமாதனமலை. கேதுமாலம் - கேதுமாலகண்டம். கீழ்பால்வாரி - (அதிலிருந்து) கிழக்குசமுத்திரத்தினிடத்துள்ள. மாலியவான் மட்டும் - மாலியவான்மலைவரையும். பத்திரி - பத்திரிகண்டம். தென்பால் - தென்கடற்பக்கம்.

46. பனிவரை - இமயமலைக்கும். சேது - சேதுவுக்கும். பத்திரி, கேது - பத்திரிகண்டமும், கேதுமாலகண்டமும். ஏனையாறும் - (அவ்விடத்திலுள்ள) மற்றை நதியும், அங்கபத்திரை நதியும். அனைய - அவ்வளவினையுடைய. நாப்பண் - (நதிக்கும் கேதுமாலகண்டத்துக்கும்) நடுவிடம். ஒன்பானாயிரம் - ஒன்பதினாயிரமியோசனை தூரம். மற்று ஏ - அசைகள்.

47. தருமபாவம் - புண்ணியமும் பாவமும். கருமபூமி - பரதகண்டம். இருணிலம் - நரகம். போகம் - (மேலேகூறிய தருமமுதலிய மூவையின்) பலன். சுவர்க்கசேடம் - சுவர்க்கலோகத்தி லநுபவித்து மிஞ்சிய பலன். பொசிப்பது - அநுபவிக்கப்படுவது. போகபூமி - மகாமேருவைச் சூழ்ந்த சாம்பூநத நதியின் பக்கமுள்ளஇடம்.

48. வரைவு - (சித்திர) மெழுதல். சிற்பம் - சிற்பத்தொழில்; ஆலயமண்டப முதலியகட்டுதல். மேனியும் - சரீரமும். குறையாநிற்கும் - (பாதிபாதியாகக்) குறையும்.

50. உச்சி - முடியில். அண்டமூலம் - அண்டத்தினடி. மண்டும் - நெருங்கும். ஆடகர் - ஆடகேசபுவனத்திலுள்ளருத்திரர். அதன்மேலா(காலாக்கினிருத்திரர்) கோயிலுக்குமேலாகவும். மகிதலத்தின் - நிலவுலகத்துக்கு. கீழா - கீழாகவும். மன்றும் - நிலைபெற்றிருக்கும். நடு - பூமியின்மத்தியில். குடதிசையின - மேற்றிசையின். மேலை மூன்றினில் - சுற்றுப்பக்கம் மூன்றிடத்திலும்.

51. அணவும் - பொருந்தும். சாத்தர் - அரிகரபுத்திரர்.

52. புடை - பக்கம். கன்னி - அழிவில்லாத. ககனம் - ஆகாயத்தில்.

53. தாரு - தாருவதேசம். பொன்னித்தலம் - சோழதேசம். கொங்கு - கொங்குநாடு. தமிழ்நாடு - பாண்டிநாடு. தெக்கணபால் - தென்றிசைப்பக்கம்.

54. ஆதிதலம் - பண்டைக்காலத்திலுள்ள தலம். பருப்பதம் - சீபருப்பதம். அபிடேகத்தானம் - உச்சிததானம்.

55. திணை - நிலம். ஐந்து - குறிஞ்சிமுதலியன. கவனம் - காடு. கன்னி - கன்னியாகுமரி. பழனி - மருதநிலம். கேதாரமுதல் - கேதாரமுதலிய இடம். தமிழ்நாடு - பாண்டிநாடு.

56. மூலவீடாய் - ஆதிக்கிருகமாகி. சிற்றிலென்ன - சிறுவீடாக.

57. கவுரி - உமாதேவி. மறக்கும் - விரோதிக்கும். பாலகன் - பகுப்புக்களாகிய. நான்கு - தருமார்த்தகாமமோக்ஷங்கள். சிறக்குமிடம் - வெளிப்படுத்துமிடம்.

58. கண்டு - கூடுதல்(ஆக). பெரும்பற்றப் புலியூர் - சிதம்பரம். சேண் - விண்ணுலகம்.

60. கிரிக் கோதண்டம் - மலைவில்.

63. துறை - இடம். புதுநலம் - புதிதாகிய போகம்.

64. கண்ணியவாறு - (தாங்கள்) கருதியவிதம். மண்ணி - மாசுபோக்கி. உவட்டெடுக்கும் - பெருக்கெடுக்கும். பொகுட்டு - மலை, (தாமரைக்கொட்டை).

65. பிறங்கல் - மலை. மேல் - இடத்தில். ஆச்சிரமமிசை - பன்னசாலையின்மேல்.

## பதினாறாவது:—தேவர்கள் சிவத் துரோகந் தீர்ந்த சருக்கம்.

1. துறை - நீர்த்துறை. விழைவு - விருப்பம்.

2. பக - கிழிபட. சிலை - கல். எண் - எண்ணத்தால். வண்பகல் - வளர்ந்தோங்கிய ஒளி.

3. சுறுபுரி - நாசஞ்செய்கின்ற. ஞானவரை - அறிவினளவையுடைய. ஏனவர்கள் - மற்றவர்கள்.

4. குரவம் - கோட்டம்.

5. பின்னி - (ஒன்றோடொன்று) நெருங்கப்பட்டு. பழுப்பிலை - பழுத்த ஓலையாகிய. நீளவும்-நீளமாகவும், (நெடுங்காலமும்). நெய்யரி - பன்னாடையாகிய. சீரை - மரவுரி. தாளி சீர் - தாளுண்டசலம். தலையினேற்று - சிரசிலே யிளநீராகக்கொண்டு. தவத்தர் யோகியர் - தவத்தராகிய யோகியர். நாளிகேரங்கள் - தென்னை விருக்ஷங்கள். [தவத்தர் தாளினீர் தலையிலேற்றுதலாவது, சாரூபபதவியடைதல்.]

6. கன்னி - இளமை. துகில் - உத்தரீயம்.

7. கதலி - வாழை. அரம்பை - தெய்வப்பெணகள். ஆலவட்டங்கள்- விசிறிகள். சுழற்றல் - சுற்றி விசிறுதல்.

8. துருக்கம்-குங்குமமரம். உரு- நிறம். ஆம - போலும்.

9. (சோலைகள்) துளிக்கும் - துளியைச்செய்யும். தேறல் - தேன். (தேவர்களே உஙகளுக்கு) கொண் - பெருமை. மலி-நிறைநத. தாரை-அபிஷேகசலம் (ஆம்). சன்மலி-நன்மை நிறைந்த.

10. புலன் - அறிவு. புறஞ்சொல - புறஙகூற. அடைந்து-அடக்கி. வாய்புதைத்தல்- (அவ்விலவுமலராகிய) வாயைப் பொத்துதல்.

11. பாவனை - ஒப்பாகிய.

12. அண்டர் குரவன் - வியாழபகவான். வாய்மை - உண்மைச்சொல்.

13. பூவின் - பூமியின். தானம்- இடத்தை.

14. கந்தரவருடம் - மேகவருஷத்தை. புனற்கிறை - வருணன். வாரி இந்திரதநு - (அருவி) நீரிற்றோன்றும் இந்திரவில்லை.

15. வேட்டுருவம் - வேடர் வடிவம். தந்திரர்.........விஞ்சையர், (தேவசாதிப்பகுப்பாராகிய). புத்தேளிர் - தேவர்கள்.

16. மாக்கள் - மிருகங்கள். புயல்கெழு - மேகங்கள் பொருந்திய. புதல் - குத்துச்செடி. தனிதராய்- முழக்கமுடையவராகி. தானவர் - அசுரர்.

17. வானோர் - தேவர்களாகிய. நால்வகைச்சஙகத்தோர்- நான்குவித கூட்டத்தார்; அவர் : மருத்துவரிருவர், வசுக்களெண்மர், உருத்திரர் பதினொருவர், சூரியர் பன்னிருவராவார். நளினம.........பத்திரம்- பத்மாசனம், கோமுகாசனம், சுவத்திகாசனம், வீராசனம், சிங்காசனம், முத்தாசனம், சுகாசனம், மயூராசனம், பத்திராசனம்;இவ்வொன்பதாசனத்தின் விவரத்தை யோகநூலிற்காண்க.

18. உடற்பகை - சரீரத்திற்கு விரோதிகள். ஆறு - காமமுதல் மாச்சரியம் வரை யாகியவை. ஐம்புலன் - மெய், வாய், கண், மூக்கு, செவி. நாற்கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம். கட்டி - ஒடுக்கி. முக்குற்றம் - காமம், வெகுளி, மயக்கம். மாற்றி - போக்கி. ஊறு - தோன்றுகின்ற. கால்வளி - காற்றாகிய வளி; இடை, பிங்கலை. ஒருக்கி- ஒன்றுபடுத்தி. ஓர்வழி - ஒருவழி; சுழுமுனையில். கடாவி-செலுத்தி. மாறு-விரோதம். யோகுநீர் - யோகமாகிய சலம்.

19. இயமம்.........பிரத்தியாகாரம்,—நிட்டையுயரும் - உறுதிமேற்படும். உஞற்றியும் - செய்தும். ஆருதாரத்து,— இயல்-நன்மை. பெறு - பெறுகின்ற. மூலத்து பாந்தள் எழுப்பி -(குதமாகிய) மூலாதாரத்தில் பாம்புவடிவாயுள்ள அக்கினியை யெழச்செய்து. மேல் - குதத்துக்கு மேலாயுள்ள. துய்யம், நாபி, இதயம், அடி-

கா, நெற்றியாகிய சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞைகளில். ஆடல் - நடித்தல்.

20. கறித்து - கடித்து. கல்லி - தோண்டி. சாய - பஞ்சாயகோரைப்புல். அசித்தும் - உண்டும். தாங்கா - தாங்கமுடியாத. பக்கணம் - பக்ஷணம். வசிவு - வளைவு; வருத்தம். தின்றும் - கெடுத்து.

21. சாந்திராயணம் - ஓர் விரதம். திங்கள் உபவசித்து - மாதப்பட்டினியிருந்து. பாந்தியும் - உண்டும். அயனும் - அனைவருடம். காந்தி - ஒளி. பஞ்சக்கனல் - ஐந்து அக்கினி, அவையாவன - நாலுபக்கத்திலும் வளர்க்கப்பட்ட அக்கினிக்குண்டம் நான்கும், சூரியகாந்தியை நோக்கி நிற்றலால் சூரியகிரணம் ஒன்றுமாம். வாரிநீரில் - வாரியாகிய சலத்தில்.

22. வீழ்த்தும் - விழச்செய்தும். செலவென - நோந்மென்று. கலங்குறுந்து - கலக்கமடையாமலும்.

23. ஊன்றி - (நிலத்திலே) பதித்து. நாசிகா - மூக்கின். மூலம் - அடியில். அசுவாய - பொருந்தச்செய்தவாய்.

24. அப்பரிசு - அத்தன்மை

26. மறுகினேம் - சுழன்றேம். விரவினேம் - கலந்தோம்.

27. சிலைசெய்தார் - நிலைகாசசெய்தவர். பரிகிலார் - இரங்கிலார்.

28. வேகம் - விரைவு.

29. அங்கம் - (அவரது) திருமேனி.

30. பவர் - நெருக்கம். துவர் - சிவப்பு.

32. தோன்றாத்துணை - மறைந்து நிற்குந்துணை.

33. மேற்கண் - நெற்றிக்கண்.

34. நரிகூட - நரியுடன் நந்தாத - கெடாத.

35. நல்குதி - கொடுப்பாய். ஓ - அசை. திகழ்வார் - (பத்திமிக்கு) விளங்குவார். அகழ்வாரை - தோண்டுவாரை. (தன்னை வருத்தஞ்செய்வாரை யென்றபடி) அச்சோ - ஐயோ.

36. அறியா - அறியப்படாத. தாயகநீன - தாயாகிய துணை. எல்லம் - எல்லாம். பராம்பராபூர்த்தி - நிறைந்த சிவசொரூபமுடைய கடவுளே.

37. நொந்தேமை - வருந்திய எங்களை.

38. நாகாசுரன் - ஓரசுரன். கொள்ளாது - அடங்காது.

41. காடம் - சுடுகாடு. நளிர் - குளிர்ந்த.

44. ஒன்று - ஏகம். இரண்டு - துவிதம். ஒன்றிரண்டு - அத்துவிதம்.

45. பரிப்பவன் - காப்பவன். திரோபவம் - மறைத்தல். அடைப்பவன் - புகுத்துபவன்.

46. கருவி - காரணம். புரிவோன் - செய்பவன். புவனகோடிகளும் - எல்லா வுலகங்களும்.

47. பூணவும் - பொருந்தவும். புலப்பட - அறிய. சேணோ - ஆகாயமோ. சேண், ஆண், பெண்ணென்பவற்றில், அது - பகுதிப்பொருள் விகுதி.

48. எளியையோ - இலேசானவனோ. ஏகா - ஒப்பற்றவனே.

49. ஒன்று - பொருந்துகின்ற. வெளிநின்றுமை - எதிர்ப்பட்டு நின்ற உம்மை.

51. சந்து - சந்தனமரம். வேலி - காவலாக வுடைய. மந்த மாருதக் கொழுந்து - இளந் தென்றற்காற்று. முந்து - அநாதி. பிரயாகை - திரிவேணிசங்கத்தில்மூழ்கிய). ஆயிரமாகம் - ஆயிரமாசிமாதம். பேறு - பலன்.

53. எனினும் - ஆனாலும். கல் - இரத்நம். எல் - இரவு.

54. அமுது அரங்கவாய் - அமுதமிருக்கும் இடமாகிய வாய். செவ்வரம் - ஒழுங்காகியவரம். வெளியரங்கம்பெற - வெளிப்படையாக. எழுது அரங்கம் - சித்திரசபை.

55. பால் மதி - வெள்ளியசந்திரன். சிந்திப்பாம் - (தங்க ளெண்ணமாம்).

56. சிலம்பு - (திரிகூட) மலையை. உரி - உரிமையாகவுடைய. பொலம்புரி - பொன்னிறஞ்செய்கின்ற.

ம்-கோபம். சம்புவை-நரியை. வலம்புரிபணிலவீதி - வலம்புரிச்சங்கத்தெரு. வலம்புரி - வலஞ்சுற்றிவருதலைச்செய்த. உரி - ஈருகெட்டபெயரெச்சம்.

---

### பதினேழாவது :—வேடன் வலம் வந்த சருக்கம்.

1. கிரிசன் - சிவபிரான்.

2. நாற்பதம். சாலோக, சாமீப, சாருப, சாயுச்சியம்.

3. மெய்வலம் - அங்கப்பிரதக்ஷணம்.

4. தேயம் - தேசம். கண்டம் - பகுக்கப்பட்ட பரதகண்ட முதலிய இடங்கள். தீபம் - சமுத்திரத்தின் மத்தியில் மேடாயுள்ள இடங்கள். சிகரவில்லியார் - மலையை வில்லாகவுடைய சிவபிரான். (சிகரம - ஆகுபெயர்.)

5. கோமாயு - நரி. மான- ஒப்ப. வன - மற்றைய. மோனம் - பேசாநிலை. கொடுத்தவா-கொடுத்தவிதம்.

6. காலத்து - உரிய காலத்தில். ஆம்பிரக்கனி-மாம்பழ ... பந்தாடு - பந்தாக விளையாடுகின்ற. கோலம்- அழகு. தாம்பிரவன்னி - பொருநை. திரைகொழி - (முத்துக்களை) அலைகள் கொழிக்கின்ற. தூலம் -பெரிய. தாம்பிரக்குன்றம் - தாம்பிரம் விளையும் மலை (பொதியம்). வாரிசம்-தாமரை. தமிழ்,—சுருதி- வேதம். மூலத்து ஆம் - (சிருட்டிக்கு) ஆதியில் உண்டாம்.

8. குழுமலால் - கூடலால். முடக்கு-வளைவு. குடக்கு - மேற்கு. நோக்கியமதி - பார்த்தசந்திரன்; மூன்றும்பிறைச் சந்திரன்.

10. தேய்த்த - தேயசசெய்த. நிறம் - (கரு) நிறம். கடா - ஆட்டுக்கடா. மருப்பு - கொம்பு.

11. கவடி - சோகி.; இது, கீழ்ச்சாதியார் ஆபரணமாகத்தரிக்கப்படுவது.

12. மூரி-வலிய.கலை-ஆண்மான். கானம் - வானம்பாடி. சேனம் - பருந்து.

14. தோயும்- (மேலேவந்து)படியும். வாடை - வாசனைக்காற்று. எடுத்து - பற்றி. சுவடுபோய் - அடிபட்ட அடையாளத்தைத்தொடர்ந்துசென்று. மூழ்நரி - ஓர்நரி.

11. சிகைப்பகுகி - குடுமிமயிர். தூபம் - புகை. உயிர்-மூச்சு. துண்டம் - மூக்கு.

15. உதரம் - வயிறு. நடலை - வஞ்சனை. அடல் -விபூதி. முண்டம்- நெற்றி.

16. மாலும் - மேகமும். மலையாசலம். பொதியமலை. கோலும் - வளையும். நீள்வரை - நீண்டமுங்கில். கொல்லி - ஓர்மலை. மயேந்திரம் -ஓர்மலை. மேலும - அப்பாலும்.

18. வேலனை - வெறியாட்டாளனை -கூய்-அழைத்து. தெள்ளிது- தெளிவுடையது. ஐவனம ஆதியா- மலைநெல் முதலாக.

19. மூங்கிதமோரை-மூங்கிலரிசி. மலர்பெய்து -பூக்களைச்சொரிவி. அவி- - சோறு. தூவி - படைத்து.

20. பலிவைத்த - பூசையாகப்படைத்த. சேடம் - மிச்சம். வரவிசேடம-விசேடமாகிய வரங்களும். நிமித்தமு- (விகாரம்) சகுனம். சுரவு......
......தொடுதோல் - தொடுசெருப்பு. இட்டான் - பூட்டினுன்.

21. செம்மலை- வேடர்தலைவனை. நெருங்கிஞர். கைம்மம் - யானைக்கூட்டம்.

22, ஆதி - தலைமையான. முதியவன் - வய...
பருத்த. குரல் -ஒ...

23. பரிசை - கேடகம். வரி-கீற்றுக்களையுடைய. அதள் - தோல். புலிப்போத்து -ஆண்புலி. அரவுரி - பாமபுசசட்டை ... -கடடி. அடல்கூளி - வலியபேய். சுரிகை-வாள். துளக்கி - அசைத்து. இடிம்பன் - இடும்பாசுரன். கரடியுரிக்கஞ்சுகம் - கரடித்தோற்சட்டை.

24. வளைதடி - ஒராயுதம். மருங்கு

சேற - பக்கத்தில் முந்திச்செல்ல. முளை - தண்டாயும். தடியர் - பருத்தவர். மூரிமருப்பு - நெரிந்தகொம்பு. புரலை - கருமான். கொளை - கொலை; இது லகர ளகரவொற்றுமை. கொடுமரம் - வில். திளை திளைத்து - நெருங்கி நெருங்கி. திளைத்துத்திளைத்தென்பது, திளைதிளை தமென மருவிற்று.

25. வாள் - ஒளி. படலம் - கூட்டம். சுடர் - சூரியனை. படர் - விரிந்த. வேள் - மன்மதன். கரி - யானையாகிய இருள்.

26. தானையர் - வஸ்திரமாகவுடையவர். கிளை - கவர். கிளைக்கின்ற. வல்லயம் - ஒருவகையாயுதம், (தளிர்). இளையர்- சிறுவர். புறவுளர்-குறிஞ்சிநிலமாக்கள். வனசரர்- காட்டிற்சஞ்சரிப்போர். பளையர் - கள்விற்போர். சூனர் - ஊன்விற்போர. பறம்பர் - தோல்வினைஞர். கிராதர் - வேடர். பழையர், எதுகை பற்றப்பளையரெனலாயிற்று.

27. குழல்-ஊதுகுழல். தொண்டகத்துடி-தொண்டகமாகிய பறை; குறிஞ்சிநிலப்பறை. துவைத்து - முழங்கி. ஞாளி - நாய். செடிகளை - புதர்களை. வாடை-நாற்றத்தை. தெரித்து-தெளிவித்து. தடம்- (அந்த) வழியை. எடுத்து - தெரிந்து.

28. சிலம்பும் - ஒலிக்கும். பதுக்கையும் - சிறுதூறும். சூரலங்கானமும - பிரபபஙகாடும். சுவடும் -மலையினுச்சியும். வளாகமும் - தினைப்புனமும். நீடினர் - அநேகர். (தாற்பரியம்)

29. மாடு - பக்கம். ஊடுபற்றி - நடுவேயாரம்பித்து. ஓடியெறிவார் - காய்ந்த செடிமரங்களைவெட்டித்தள்ளுவார். கோடுபற்றி - கொம்பைப்பிடித்து. குமுறி - முழக்கஞ்செய்து.

30. வேடுபாய்வர் - வட்டமாகப்பாய்வர். உழுவையை -புலியை. வேழத்தின் கோடு - யானைக்கொம்பு. மேல் - உயர்ந்த. அறை - பாறையில். சூகரமோடு - பன்றிவயிற்றில். மறித்து - தடுத்து.

31. அழுங்கு - ஆமை. கவுதாரி- ஓர்பறவை. புள் - வண்டு. ஒழுங்கு - வரிசை. புல்வாய - கருமான். கலை - ஆண்மான். எறிய - முன்னேறிச்சென்ற. கழுந்து - உலக்கைக்கழுந்து. கைசெயும - கையால்வேலைசெய்யும். சூழல்வாய்- இடத்தில். கைசெயல்- ஒடியெறிதல், காடுகலைத்தல், வலைவீசுதல் முதலியன.

32. நீலம் - நீலநிறம். ஏரற்காலம் - மழைகாலம். கான்அரா - மலைப்பாம்பு. தாலம் - பருமை. ஓலமிடனறது - பெருமுழக்கமிட்டது.

33. மாசுணம் - பாம்பு.

34. கட்டு - சுற்றிய. காரும்எனமுரசலையாக. நேமியா - சக்கரமாக. தொட்ட-தொடுத்த. வாளி-பாணம்.

35. வல்லை - விரைவில். பாந்தளின-பாம்பினின்றும். விட்டபின் - விடுவித்தபின்னர். விடமிட்ட-விடந்தீர்த்த. வரிவேங்கை - புள்ளிகளையுடைய புலி; இது: “ வேஙகைவரிப்புலி நோய்தீர்த்த விடதாரி” என்னு மூதுரைசசெய்யுளை ஞாபகப்படுத்துகிறது.

36. தானை - படை. சமரில்-யுததகளத்தில். தெவ்வர் - பகைவர்.

37 சோனை - விடாதுபெய்யுமழை. சரம் - பாணம். விட்டென - நீங்கினாற்போல. வான் - மேகம். இறைத்தது-நீரைச்சொரிந்தது. வெறித்தது-வறுமையாயின்றது. சாபம்- வில்.

38. சேணில் -தூரத்தில். வீணில் - வீணாக, வேட்டைக்குபயோகமில்லாமல். கறித்து - கடித்து.

39. உழந்து - வருந்தி. கார்முயல் - கரியமுயலை. கூன - வளைந்த. குணில்-குறுந்தடி. மான -வீரத்தையுடைய.

40. கொம்பு - தீக்கடைகோல். பம்பு - நெருங்குகின்ற. சம்பு - நரி. தாயது - தாவிச்சென்றது.

41. தசை - மாமிசம். சம்பு - நாவல். சம்பு - ஓர்புல். சம்பு-சிவபிரான்.

42. ஓட - (நரி) ஓட. ஓடி-(வேடனும்) ஓடி. ஓடம் - தோணி. கூடுதலாய் - சேர்தல்போன்று.

43. வேறு - வேருக. அமைத்த பின் - வைத்தபின்னர். வினைபிரிந்து - வினையை வேருக்கி. தனித்தான் - தனிப்பட்டிருந்த வேடராசன். துனைவில் - விரைவில்.

44. பார்வை - கண்குறல். இகலன் - நரி. பூர்வம் - பண்டைநிலைமை.

45. வரி - கீற்று. பொறி - புள்ளி. மீட்டவன் - விடுவித்தவேடன. கைபபடை - கையாயுதம. தசை - ஊன. பரிய - பருத்த.

46. நிவந்த -உயர்ந்த. நேடியும்- தேடியும். ஓரியும் - நரியும். உவந்த- (தாம்) மகிழ்ந்த. உயிரைமதியாமை- உயிர்க்குவருங்கேட்டைநினையாமை

47. எட்டுவன் - சமீபிப்பன். பொறி - (கண்களில்கோ)பாககினி. இகலன் - நரி. கொதிப்பான் - கோபங்கொள்வான். மிடல் - வெற்றி. (ஆகுபெயர்)

48. திறை- கப்பம். முனைவன்- தலைவனுகிய வேடன். ஓரி - நரி. பெயர்வான் - செல்வான்.

49. வரை - மலையில். பொரு - போதுகின்ற. கடல் - சமுத்திரம் போலும்.

50. இரு - பெரிய. வலம்புரி - நந்தியாவட்டம். நந்தனவனம் - பூந்தோட்டம். வலம்புரி - வலஞ்சுழிகின்ற. தணடலை -சோலை. வலம்புரி- வலம்புரிச்சங்கம். வலம்புரிமறுகு - சஙகவீதி. மறுக -சுழல.

51. முத்துஅலை - முத்துக்களை அலைக்கின்ற. முத்தலைக்கிரி - திரிகூடமலை. உளரும் - சுழலும். தணந்தபோல் - நீங்கியதுபோல. [தணந்தவென்பது, ஈறுகெட்டுநின்றது.]

52. தத்தமது - (நரியும்வேடனும்) தங்கள் தங்களுடைய. இடங்கு விமானம். இணங்கு - பொருந்துகின்ற. கிங்கிரன் - தேவதூதன்.

53. மேல் - அதன்மேல். நிகழ்த்தும் - சொல்லும். உலைவில் - வருத்தமில்லாத.

---

## பதினெட்டாவது:— யானைபுகித்தசருக்கம்.

1. முந்தும் - முற்படும். முதனமூன்று - நித்தியம், நைமித்தியம், காமியம். ஐந்துசுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, இலிங்கசுத்தி. போது - பூ. மற்றவை - பிறபொருள்கள். புந்தி- அறிவு. முக்குறியினில்- (குரு இலிங்கம், சஙகமமாகிய) மூன்றடையாளப் பொருள்களில். புரிவது - செய்வது.

2. வேழம் - யானை.

3. பேடை - பெட்டை (மயில்). அகவும் - ஆடும். பருவம் - காலம். குருகு - நாரைப்பறவை. பெடைகள் - பெட்டைகள். ஒருமை - ஒற்றுமை. சேவல் -ஆண்பறவைகளின். ஊடலுக்கு - ஊடுதலி னிமித்தம். ஊடல்கூர் - (தாங்கள்) ஊடுதல் மிகுகின்ற. குளிரும் - குளிர்காலமும், கூதிர்க்காலமும். பருமை - பருத்த. கூரலின் - சிறகுகளிடத்து. (இணைந்து) இடைவிடாது - நீங்காது. பனியும் - (முன்) பனிக்காலமும்.

4. யாக்கு - அழகிய. கயம் - தடாகம். தாலாட்ட - ஓராட்ட. தாஙகு- தஙகுகின்ற. வெயயில்வாள்-வெயிலாகிய வாளாயுதம். விதிர்த்து - அசைத்து.

5. தெறுதல் - வருத்துதல். வேட்டு - விரும்பி. ஊர் உலாவு - பரிவேடத்துள் சஞ்சரிக்கின்ற. விளர்க்

6. புலவு - புலால் நாற்றம். நீர் - (கடற்) சலம். சுலவியும்-(தம்மை) சூழ்ந்திருந்தும். வீழ் - விழுவது. துளியாமை - மழைபெய்யாமை. பொரிந்தது - வெந்தது. வள்ளியோர் - கொடையாளிகள். கயவர்-உலோபர்.

7. பணம் - பாம்பின்படம். பாந்தள் - பாம்பு. கரிந்த -கருகிய. கருப்பை-காரெலி. கானெரி-காட்டுத்தீ.

8. மத்தியான - (தன்) னுளகப்பட்ட, அத்தி, தோல், தூங்கல் ஆம் - இப்பெயர்களையுடையதாகிய. அசலம் - மலைபோன்றயானை. அத்தி - எலும்பு. தோல்,— தூங்கல் - சோம்பல்.

9. பன்னம் - இலை. இரை -உணவு. பன்னக ஆதிகள் - பாம்புமுதலியவைகள். பவனஅசனம் - காற்றாகியசோறு. பழகி - (உண்டு) அப்பியாசித்து. வான் - ஆகாயத்தில். அலை-அலைகின்ற. கானலை-பேய்த்தேரை. தன்னம் - அற்பம்; சிறுசெக்து. சுழன்றது - சுற்றித்திரிந்தது.

10. கனல்வது - சுடுவது. தொடர்தரத்தர - தொடர்ந்து செல்லச்செல்ல. தொலைதரும் - இன்மையாம். கானல்— உடலும் - விரோதிக்கும்.

11. உலக்கும் - வாடும். முன்னூழிநாள் - பண்டையுகாந்தகாலம். புரந்த-சேமித்துவைத்த.

12. பற்பம் - தாமரை. கற்பகஅடவி - கற்பகச்சோலை.

13. கானவாரணம் -காட்டுக்கோழி. பேடைசேர் - பெட்டையுடன் கூடுகின்ற. பாதுக்கை - சிறுதூறு. கமம் - நிறைவு. கூன -வளைந்த. வாரணம் - சங்கு. மோணம் - சாத்துவிககுணம். ஆர் அணங்கார் -அரியதெய்வப்பெண்கள். பயில் -தங்குகின்ற.

14. மடுத்தடம்-ஆழமாகிய தடாகம். பொதும்பர் - சோலை. தொகுத்த - சேர்க்கப்பட்ட. சூக்குமம்-சூக்குமதேகம். தூலம் -தூலதேகம். ஆவி-உயிர். அயர்வுயிர்த்தது - சிரமசாந்திசெய்தது.

15. பசிக்கு - பசியால். பாணனார்-பாணபத்திரர். பாணியை - கங்கையை. சேரன் -சேரமான் பெருமானுயனார். பொழில் - சோலை

16. மறுகரி - விரோதிக்கின்றயானை. கூழை - (ஆகுபெயர்) அக்குலையின் நடுவிலுள்ள பழங்களை. முகிகி - விழுங்கி. பேழை - பெட்டி. தாழை - தென்னை. முப்புடை-மூனறுபுடைப்புடைய. நறுங்கனி - நல்லபழம்; தேங்காய. தாக்கி - மிகுத்துணடு.

17. அகம் - தேகத்தில். மால் மதம் - பெரியமதம். உடட்டுற-பெருக்கெடுத்தோட. (மேற்கூறியவைகளை) நுகர்ந்த - உண்ட. தாள் - முயற்சியுடைய. அசலம் - மலைபோன்றயானை. (அந்த யானைக்கு) போகமே-இன்பத்தையே. மாகநதி -ஆகாயசங்கை.

18. தூமம் - புகை. கொழித்து-ஒதுக்கி. தழைசெவிமா - விரிந்தகாதையுடைய யானை. தாபம் - தாகம். படிந்த - மூழ்கிய பவத்துயர்- பிறவித்துன்பம். பறிபடும்-அற்றுப்போகும். படி - தன்மை.

19. மொண்டு- முகந்து. மெய்ப்புறம் - தேகத்தினிடம். வைப்பு - இடம். வளையமிட்டு - வட்டமிட்டு. மதமா-யானை. கோள்-வலிய அரா - கரும்பாம்பு. உமிழ்வது - கக்குவது.

20. இருமை -பெருமை. நாகம் - மலை. வயிரவாள் - வச்சிராயுதம். எடுப்ப - எடுத்தோச்ச. ஒரு - ஒப்பற்ற. மைநாகம் - மைநாகமலை. படிந்து - மூழ்கி. அயர்வுயிர்த்து - சிரமபரிசாரஞ்செய்து. பருமை - பருத்த. நாகம் - யானை. பனைக்கை - பனைபோலுந்துதிக்கை. படர் - (தன்னிடத்து) வருகின்ற. கோள் - கிரகங்களிலொன்றாகிய. கருமை - கறுத்த. நாகம் - (இராகுவாகிய) பாம்பு. இருமதி - பெரிய சந்திரன். ஒருமதி -ஒப்பற்ற அறிவு.

21. நத்தம் - (விகாரம்) ஆக்கத்தை. ஓர்-உணாகின்ற. இருபிறை மருப்பு - இரண்டுபிறைச்சந்திரன்போன்ற கொம்புகள். நால்வாய்-தொங்கிய வாய். சித்தம்-மனம் மைந்து - வலிமை முத்தவாரி-முத்துக்களையுடைய நீரை. நீர்-தன்மை. சத்தம்-எழு. நீர்த்தாரை- மழைத்தாரையை.

22. கறையடி - உரல்போன்ற கால்கள். கவுள் - கன்னம். மதக்கலுழி - மதமாகிய காட்டாறு. சிந்துரம - பொட்டு. சிந்துரம் - யானை. உடல்வழி - சரீரத்தினிடத்தில்.

23. மூரி - வலிமை. முது-பெரிய. வாரிநீர் - வாரியாகிய நீர். (இருபெயரொட்டு) வரையின்-திரிகூடமலையிலுள்ள இமைப்ப-பிரகாசிப்பன. நமிநந்தியடிகள்-அறுபத்துமூன்றுநாயன்மாரிலொருவர். நிரை - வரிசை.

24. தூங்கல் - மெலிவுள்ளது. துறையில் - அருவித்துறையில். ஒருகல் - மலை. மதர்த்து - கருவங்கொண்டு. தேம் - தேன். கலாரம்-(விகாரமொழி.) செங்குவளை. தடம் -(திருப்புலீசுரத்துப் தெப்பக்)குளம். வேட்கோவர் - குயவராகிய திருநீலகண்ட நாயனார்.

25. அளிய - அன்புடைய. தண்டலை - சோலையில். ஆடி-விளையாடி, மூழ்கி. பரிந்து-(விகாரம்) முறித்து.

26. துறும்-நெருங்கும். பலாபலனும் - பலனும்பலனின்மையும். பலாதி-பழமுதலியபொருள்கள். நதித்துறைவாய் - சித்திராநதித்துறையின் பக்கத்தில். குழகர் - பேரழகுடைய திரிகூடநாதர். குழுமி - கூடி.

27. திமிலம் - பெருமுழக்கம். உமிழும் - (வாயினூற்) சொரியும். திண்ணன் - கண்ணப்பநாயனார். ஆய் - ஆக. அவன் - அந்நாயனார். சிகையுகுக்கும் - குடுமியினின் றுதிர்க்கும். அவிகள் - உணவுகள். (ஆய் இரண்டும் - ஆகஎன்பதின் திரிபுகள்.)

28. சுகிர்தம் - தவம். (தாற்பரியம்) பருமை - பருத்த. அற்புதம் - ஆச்சரியப்பொருள்கள்.

29. அருச்சனை - அர்ச்சித்தல். அருகில் - பக்கத்தில். நிவேதனம் - நைவேத்தியம். இது - இந்நிகழ்ச்சி.

30. மஞ்சனம் - ஸ்நானநீர். ஒருமை - மனவொருப்பாடு.

31. கவளம் - திரளையாகியஉணவுடைய. பவளம் - பவளத்தினலாகிய. கால் - (மரக்)காலால். திவளமெலிய. காய் - சுடுகின்ற. துவளாய, சலனப்பட.

32. அநெறி - அந்தமார்க்கம், வினைதொலைந்தவழி. மெல் - மெல்லிய. நெறி -ஒழுக்கம். தந்தாவளம் - யானை. தம் - தன்னுடைய. தாவளம் - இருப்பிடம். (தன்னென்பது தம்மெனத் திரிந்தது.)

33. தரிகூட - அரிகூட - விஷ்ணுவினுடன். விரிகூட - விசாலமாக.

34. நன்புலத்து - நல்லஇடத்தில். பொசித்து - அநுபவித்து. உலப்ப - கெட. ஒழிந்தநாள் - மரணகாலத்தில். எதிர் - நேரே. எற்றூர் - எதிர்த்தார். புன்புலத்தின் - அற்ப அறிவினையுடைய. விலங்கு - மிருகமாகிய யானை.

35. கடுவன் - ஆண்குரங்கு. பானுவை - சூரியனை. தனிதாவு -தனியாகக் குதிக்கும். நேசனை - அன்புடைய குறும்பலா வீசரை.

36. அற்பு எறும்-அன்பு உயரும். நற்பேறு - நல்லபலனை. பெறுவமென்னும் - அடைவமென்றுகேட்கும். படர்க்கு-ஆதர்க்கு. கழல்கண்டோ - திருவடியைத தரிசித்தோ. முன் - முற்காலத்தில். முசுகுந்தன் - திருவாரூரிலிருந்த முசுகுந்தச் சக்கரவர்த்தி; இவன் குரங்காயிருந்து ஒருவனதநின் வில்வத்தழைகளை யுதிர்த்துக்கொண்டிருக்க, அத் தழைகள் கீழே யிருந்த சிவலிங்கத்தின் திருமேனியைப் பொதிந்து பூசையானதால், சக்கரவர்த்தியான கதை திருவாரூர்ப் புராணத்துட் காண்க.

37. எங்குளார் - எந்த இடத்திலுள்ளார(ரும்). அங்கசாதனம் - சொரூபசாதனம். வங்கம் - தோணி; கப்பல். புட்பகத்தேர் - புட்பகவிமானம்.

38. வேதி - ஒன்றை மற்றொன்றாக வேறுபடுத்துங் குளிகை.

---

முதலாவது தாணைவபவகாண்டம் முற்றிற்று.

---

# அரும்பதவுரை.

## இரண்டாவது:— சிவரகசியகாண்டம்.

### காப்பு.

1. கரத்து - துதிக்கையிலிருந்து வரும். மாருதம்-காற்று. உயிர் (பிராணே) வாயுவின். பிறக்கம - விளக்கம். கரத்து-(மற்றொரு)கையிலுள்ள.மருப்பு - (கயாமுகாசுரன்பொருட்டு முறிக்கப்பட்ட) கொம்பு. துரிசு - குற்றம். மோதகக்கை - மோதகமென்னும் பலகாரம் வைத்திருக்கும் கரம்.

### உமைதிருவவதாரச்சருக்கம்.

1. சேடம் - எஞ்சியவற்றை. போகபூமி-சாம்பூநதநதியைச் சூழ்ந்த நிலம். வரம்பு - எல்லையாயுள்ளது. ஆணி - உரையாணிபோல்வது. அத்தாணி - அரசிருக்கைமண்டபம்.

2. தார் - மாலையிடத்து. உதிக்கும் - தோன்றும். மணி - இரத்நம். உதித்தும்-தோன்றப்படும். பூத்தும் - உண்டாகப்படும். தரிக்கும் - அணியப்படும். அவட்கு = அப்பூமிதேவிக்கு. கலையாய - வஸ்திரமாகி. வாரிதிக்கு - கடலுக்கு. நீர் உதிக்கும் - ஜலந்தோன்றும். நாலுதிக்கும்-நான்கு திசையிலும். வரைகடவா - (தான்தன)வெல்லையைக்கடந்துசெல்லப்படாத. மானவேலி - பெரியவேலி. பனிக்குன்றம = இமயமலையானது.

3. கமலப்பொருட்டு- தாமரைக்கொட்டை. பொதுளும் = நெருங்கும். வளர் - கண்வளர், நித்திரைசெய்கின்ற துகினம் - பனியாகிய. தோயம் - நீர். மன்னல் - நிலைபெறல். வடிவமூன்றும - (இந்த) சொரூபமூன்றையும். பனிவரை - இமயமலையானது. முத்தேவியர்-இலக்குமி, பார்வதி, சரசுவதியாகிய மூவர். உறழும் - போலும்.

4. அறை - பாறையில். மிறை - பயமாக. வருத்தும் - வருத்தப்படுத்தும். வாளரி - ஒளிபொருந்திய சிங்கம். பிறை - பிறைச்சந்திரனாகிய. கிளைப்பெருந் துண்டத்து. - வளைந்த பெரிய மூக்கினையுடைய. புயல்-மேகங்கள் தங்கிய. வரையை இமயமலையை. சிம்புள் - எண்காற்பறவை. சீயம் - சிங்கம்: பிறையாகிய மூக்கினையுடைய சிம்புள்ளைக்கூட்டுக.

5. யாவர் - எவருடைய. அரம்பு அயர் -பாணமுஞ் சோர்வடையப்படும்.கணணினா-கண்களையுடையராய். நண்ணினர் இவரை - பொருந்தினவராகிய இவ்வரையரமகளிரை. பணிவது - வணங்கப்படுவது. சிறுகுடிசசிறார்பால் - சிறிய குடிசையில் வசிக்கும் வேடப்பிள்ளைகளிடத்து: கா-கற்பகத்தின். வரமபையில்-அளவில்லாத. கனியளித்து - பழங்களைக்கொடுத்து. ககனம் = ஆகாயத்தில்: தா = தாவிச்செலவும். அரமபையின் கனி - வாழைப்பழங்களை. நனி மிகவும். மா கொள் கயிலம் = பெருமையைக் கொள்கின்ற மலை. வரமபையென்றதில் = ஊர்வசியை: அம்பு மெனனுமுபமைசொக்கது.

6. சமைய - பொருந்த. மந்தரம், மத்திமம், தாரம்,— (இம்மூன்றுசுரங்களுடன்.) வண்டுஇசைக்கும-வண்டுகள் இசைபாடும். அமையம- சமைய

அசுணமா- அசுணபபறவை: சையினேசைகேட்டு) அலமரும்-சுற்றித்திரியும். அடவி - சோலைசூழ்ந்த: யும் = உச்சியில். அந்தரததவர்- தேவர்கள். உறை - வசிக்கும்: குலவரை-நல்ல மலைகளை. தெரிப்போர்= தெளிந்தெடுத்துச்சொல்வோர்.

7. குருளார்-தெய்வமாயுள்ளவர்: யாருளார் - எவருள்ளா(ரோ). அவர்= அவர்கள்.

8. கலைகள் - மானகள. காவு:— திமிர்தது = திமிர்கொண்டு. உஞ்ழ =

இடத்தில். படும் - கூடியிருக்கும். பணி - பாம்பு. சிகரம் - பின்பனிக் காலத்தின். ஞாட்பினுல் - வலிமையால்; அல்லது போரால்.

9. அகல்இடம் (இமயமலையின்) விரிந்த இடம். விசும்புதொட்டு - ஆகாயத்தைப் பரிசித்து. அழன்று - சுடுதலால். மதிக்கலை - சந்திரனிடத்துள்ள மான். முடங்குபான்மையும் - வளைந்தொடுங்குந் தன்மையும்.

10. வடதிசை - (மேருமலைக்கு) வடக்கின்கணுள்ளதிக்கு-குடம்உறு-கும்பராசியைப் பொருந்திய. மிடல்-வலி. வடவனலின் - வடவாமுகாக்கினியால்.

11. வெற்பு அகம் - (இமய)மலையினிடம். எறி - வீசுகின்ற. வேய்ந்தன - அணிந்தன. பகம் - பெண்குறி. நாணில் - கயிற்றில். பொற்பு-அழகு. அகம் - இடம். நித்திலக்கோவை - முத்துமாலை. அணிந்தன வீங்கிய வல்லிகளெனக்கூட்டுக.

12. அமையன-மூங்கில்போன்ற.

13. உதரம் - வயிறு. மலை-அணிகின்ற. மேனைகாவலன் - மேனையென்பவளுக்கு நாயகன். அமலைபுரி - முழக்கஞ்செய்கின்ற. கோட்டு-சிகரத்தையுடைய. மைநநாகன் - மைநநாகனெனனுமலை. தந்து - பெற்று. (அதன்பின்) அமலை - உமாதேவி.

14. கண்ணன் - விஷ்ணு. அறுகு - அறுகம்புல். அண்ணல் -தலைவனுடைய. மெய்க்கண்-உண்மையினிடத்து. முயல்-முயன்று செய்கின்ற. எக்கண்ணும் - எந்த இடத்தும்.

15. சுகிர்தம் - தருமம். பொன் அவாம் - இலக்குமி விரும்பும். இன்ன - இத்தன்மையுடைய.

16. இழை - ஆபரணம். மேயினன் - பொருந்தினன்.

17. உவாமதி - பூரணசந்திரன். (மகிழ்ந்து) கண்ணுறீஇ - கண்களாலுற்றுநோக்கி.

18. உகளம் - இரண்டு. வீங்கினள - (பால்சுரந்து) பருக்கப்பட்டன. ஏங்கின - (தேவியாரைப்பிரிந்ததனுல்) வருந்தின.

19. மோப்ப - மோந்துபார்க்க. ஒடி - படரப்பட்டு. கனகவள்ளம் - பொற்கிண்ணம்போன்ற கொங்கை. பச்சைவல்லி - பச்சைக்கொடிபோன்ற பார்வதியின். பவளவள்ளம் -பவளக்கிண்ணம்போன்றவாய்.

20. புவனகோடியை - மிக்கவுலகங்களை. போக்குவரவு - மரணம், சனனம். பவனம் - தேவலோகம். பணித்தது - செய்ததாகிய. சுவனம் - தங்கம்.

21. அரிக்கிண்கிணி- பருக்கைக் கற்களையுடைய சதங்கை. அலம்புகின்றது - ஒலிக்கின்றது. ஐ-சாரியை. அடி - பாதங்கள். கலம் - (அவ்)வாபரணங்கள். புலம்புறலோ - அழுதலோ.

22. இறை - சிவபிரான். இரண்டுபடி - இருநாழிநெல். (படி ஆகுபெயர்) சகம் - உலகத்தை. முறை -வரிசையாக.

24. துற்றிய - நெருங்கிய. துதையும் - நெருங்கும். முற்றிலும் - முழுவதும். எற்றிலும் - எத்தன்மையுடையதிலும். அமைவது - பொருந்துவதாகிய. இயைபு - சம்பந்தம். முன்றில்வாய் - முற்றத்தின்கண்.

25. பாவை - மரப்பாவை. கழங்கு - கழற்சிக்காய். பயிற்றுதல் - பழக்கிவிளையாடுதல்.

26. பேதைஆர் - பேதைத்தன்மைநிறைந்த. பருவம் - (எழு)வயது. கோதை - மாலை. ஆர்வத்தால் - ஆசையால். மேதைஆர் -பேரறிவுநிறைந்த. மேனை - (தாயாகிய) மேனை. தாதை - மகரந்தத்தை.

27. உறையுள் - இருப்பிடம். வழங்கினன்-சொன்னுன். குழகன்-பேரழகுடையவன். கிழவி - உரியவளாகிய பார்வதி.

28. வாலை - இளமைப்பருவமுடையவள். இறும்பூது - மகிழ்ச்சி. மை - தனித்திருத்தல்.

29. சஙகநீர் - வலம்புரிச் சங்கத்திலுள்ள சலம். பதுமை -இலக்குமி.

கவுரி - கவுரநிறமுள்ளவள்; பசலைநிறமுள்ளவள்; (உமாதேவி). சிந்தை வயிரம - மனவயிராக்கியம். வரைபெண் - மலைபோலக் கடினமாகிய மாது, (மலையிற்பிறந்தபெண்).

30. கூலம் - புனற்கரை. வனத்திடை - சலதினடுவில். நிலை - நிலைத்த. நிட்டை - யோகம்.

31. புகட்டி - பதித்து. மேற்கண் - மேலிமையை. முகிழ்த்து - குவித்து, மூடி. [கண்-ஆகுபெயர்.]

32. வற்ப-வற்றுகபெசான்ன. மோனை - முற்காலம ஆர்வம் - அன்பு. வானை - வானில். (உருபுமயக்கம்)

33. பரந்து - விரிந்து. எறி - வளர்ந்து

34. காண்பான் - காணும்பொருட்டு. ஆதி - முதலிய.

35. அந்தணமுதியோர் - பிராமணப்பெரியவர். பணி - வணங்கப்படும்.

37. ஊழி - யுகாந்தகாலத்தையும். நீத்த - கடந்த.

38. தேமப - வாட. வண்ணம்- அழகு. நோற்றல் - தவஞ்செய்தல். கடிஞை - பிக்ஷாபாத்திரம. கடுநகர்ந்தார்க்கோ - விடமுண்டவர்பொருட்டோ.

39. மொழிதலாற்றூர் - (ஒன்றும்) பேசார். மயிலமான - மலைமான் போன்ற பார்வதி. வீறுல் - கருவத்தால். (அதையடக்க)அடல்-வலிமை. பலிகொண்டார்- பிக்ஷபாத்திரத்தைக்கையிலெடுத்தார். (பலி ஆகுபெயர்)

40. பொன்மிலைதரு - பொன்னைலங்கரிக்கும். வல்லீர் - வல்லவரே. இகழ்வதோ -இகழ்த(வா)மோ.

41. மைப்படி - (விகாரம்) மை தோய்ந்த. வருமோ - (உங்கள்தவத்துக்கு) வருவாரோ. ஒப்பிலாது - (எங்கள் தவத்தை) ஒப்புக்கொள்ளாமல். ஒழிந்தாரேனும - நீங்கிஞராயினும். ஒழிகலம் - (தவத்தை) விடமாட்டோம்.

42. போந்தவாறு - வந்தவிதம். வழங்கினீர் - பேசினீர்.

43. மறைவடிவு - மறையவருருவம, (வேதம்சாரூபம்). சொலலும - வார்த்தையும். மறைமொழி - மறைத்தவார்த்தை, (வேதவாக்கியம). மாழ்கி - மயங்கி. வெட்கி-நாணி. கோட்டி - வளைத்து.

44. கரந்து - மறைத்து.

45. வேண்டிற்றோ - வேண்டியதோ.

46. மறையின்முன்னே - வேதங்களின் முன்னுகிய பிரணவப்பொருளே.

47. காராய் - கரியநிறமாகி. ஒழுகும் - மிகும். அந்தரத்தாய - முடிவாயுள்ளவனே. பரமேட்டி - மிக மேலானவனே.

48. நீலம் - நீலம்போன்ற கண். முத்து - முத்துப்போன்ற கண்ணீர்த்துளி. உகுத்தாள - சொரிந்தாள். அலமருங்கால் -சுழலும்போது. மன்று - (சித்திர) சபை.

49. பனகம் - பாம்பு. (இடைக்குறை) படர் - விரிந்த. தினகரோதய - சூரியோதய. அனவரதம் -எப்பொழுதும். கனம் - மேன்மை.

50. நகிலவரை - கொங்கையாகிய மலை. நோன்பு - தவம். நாள்நாளும், ம்-தினந்தோறும். நவின்தாள் - மொழிந்தாள். சேண் - உயர்ச்சி.

51. ஆற்றும் - அணியும். (தாற்பரியம்.) ஆற்றுவார் - சகிப்பார். கார்-கருநிறம். ஆற்றும் - செய்யும்.

52. கொந்து-கொத்தாகிய. கோதையாள் - கூந்தலையுடையாளாகிய மேனை. பயந்த - பெற்ற. வருந்தல்- வருந்தாதே. விந்துநாதாந்தம் - விந்து நாதமென்னுஞ் சிவசத்திகளின் முடிவு.

---

## இரண்டாவது:— திருமணச் சருக்கம்.

1. வரைச்சாபத்தார் - மலைவில்லையுடையவர். சாபத்தார் சபித்தலையுடையார். வரித்து - வரவழைத்து. உறை - கொள்ளுகின்ற. பகறுதிர் -

சொல்லினவராய். வருதிர் - வாருங்கள்.

2. இமவான் - இமயவரசன். பக்கல்-பக்கம். பாங்கு -அழகிய.

3. கொண்டனீர் - கொண்டாற்போன்றவரே. கழிப்பி - கழித்து, கடந்து.

4. தனையன்-புத்திரனாகிய. முந்தையர் - பழமையுள்ளவர். கொந்தை- பூங்கொத்தை. அழிப்பாராகிய கொன்றைவேய்ந்தாரெனக்கூட்டுக.

5. மேனையார் - மேனாதேவியார். மகட்கொடுத்தார் - மகளைக்கொடுத்தவராகிய தக்கனார். தானை - ஆயுதம். அரிந்து - நறுக்கி. சம்பந்தம் - கல்யாணம். மோனர் - ஞானிகளாகிய சத்தருஷிகள். மோனையாய - ஆதியாயுள்ளவளே. முத்தங்கோடற்கு - முத்தமிடுதற்கு.

6. மனை - மனைவி. தகவு - (சிவபெருமான்) தகுதி. வேட்பதானால்- மணஞ்செய்வதென்றால்.

7. பூளை - பூளைப்பூ. ஆர் - ஆத்திப்பூ. கரந்தை - கரந்தைமலர். ஓரை - இலக்கினம். நயந்தனர் - விரும்பினவராகி.

8. செம்பொற்பொருப்பு - மகாமேருமலைபோன்றசிவபிரான். மணக்கும் - விவாகஞ்செய்யும்.

9. பண்ணவர் - முனிவர். மனனஞ்செய்தான் - நினைத்தார்.

10. வேட்கும் - விவாகஞ்செய்யும். மங்கலம் - சுபமுகூர்த்தம். வகைபெறும் - பிரிவுபடும். வேய்ந்த மணனாரெனக் கூட்டுக.

11. பாவகன் -அக்கினி. நிருதேசன் - நிருதி. பவனாதிபன் - வாயு. கரணம் - பஞ்சாங்கத்திலொன்று.

12. அண்டமூலம் - அண்டத்தினடியிலிருக்கிற. அவர்போல்வார் பதின்மர் - அநந்தக்காலாக்கினி யுருத்திரரைப்போன்ற பத்து உருத்திரர். நாற்பூத கணத்திரள் - (நான்குவாயில்களை காக்கும்) நால்வகைப் பூதகூட்டமாகிய திரள். ஆடகர் - ஆடகேச புவனத்திலுள்ள ருத்திரர். குறட்படை - பூதசேனை. கூர்மாண்டர் - ஒருவகையுருத்திரர். இருள்நிலம் - (பெரும்புறக்கடலைச்சுற்றியிருக்கும்) இருட்பூமியை. வளர்க்கும் - விருத்திசெய்யும். அட்டகர் - புத்தி தத்துவத்தின்மேலிருப்பவர். கணபணத்து - கூட்டமாகிய படத்தையுடைய.

13. கோளகை - வட்டமாகிய. பணிகொள்வார் - ஏவல்கொள்வாராகிய. குரகத மாசாத்தர் - குதிரையூரும்பெரியஐயனார் கூட்டங்கள். பேர் - பெரிய. அனிகத்திரள் - சேனைக்கூட்டத்தை யுடைய. உருத்திரகணம் -உருத்திரகூட்டத்தில். படைவீரர் - சேனைததலைவர்.

14. நூறுகோடியர்-(மேலேசொல்லிய சேனைத்தலைவர்) சதவகுப்புள்ளவர். பதினொரு கோடியர் - பதினொரு வகுப்புடைய ருத்திரர். நுதற்கண்ணா நூற்றுவர் - நெற்றிக்கண்ணுடையவராகிய நூறு ருத்திரர். ஆறுகோடியினிரட்டியர் - பன்னிரண்டு பகுப்புடையராகிய. ஆதவர் - சூரியர். அவர்மேலும் - அநதச் சூரியர் மேலும். வீறு - கருவங்கொள்ளும். கோடியினிரட்டியர் - இரண்டுபகுப்பாராகிய. மருத்துவர் - தேவவைத்தியர். வசுக்களாம் நாலிருகோடியர்- வசுக்களாகிய எட்டு வகுப்பார். கோடிய-பகுப்புள்ள. பெருந்தீர்த்தம்—,

15. மூலநான்முகன் - பழையபிரமதேவன். அடங்கற்கு - (கருவ)மடங்க. முரி - வளைந்த. கங்காளர் - முழுவெலும்பணிந்தவர். சூலபாணியர் - சூலத்தைக் கையிற்றரித்தவர். கேத்திரபாலர் -வயிரவராகிய. சுவாவினர் - நாய் வாகன முடையவரும். நிருவாணக்கோலமேயவர் - வஸ்திரமில்லாதவரும். கஞ்சுகம்-அங்கி, சட்டையுடையவருமாகிய. எண்மர் -எட்டுப்பேர்.

16. கண்ணனுக்கு - கிஷ்ணனுக்கு. அருள்செய்தோன் - திருவடிதீக்ஷைசெய்த உபமன்னிய முனிவர். சரதம் - மெய். மா - பெருமை.

17. சித்தமாதவர் - பூருவத்திலு

ள்ளபெரிய தவசிகள். தந்திரர்...... வித்தியாதரர்- தேவசாதிப்பகுப்பார். சாலகடங்கடர், ங்கிசரர்-ப்ராகஷ்தர், (இருபெயரொட்டு.) வேதாளர் -பைசாசவகுப்பார். சித்தர்-அட்டமாசித்தி பெற்றவர். விண்ணவா - அந்தரவாசிகள். மாகசாரியர் - ஆகாயமார்க்கமடப்பவர். தைத்தியர் - அசுரர். கடவுளர் - தேவர். யோகர் - யோகஞ் செய்யு முனிவர். சததநாரியர் - சத்தகன்னிகைகள். சதசும் - எழு முகில்வேந்தர் - மேகங்களினதிதேவதைகள்.

18. அனகம்-பாவமின்மை. புலிப்பாதன் - வியாக்கிரபாதர்.

19. மதி - அறிவு. விதி - ஊழ்.

20. சதுட்டயம் - நான்கு. தத்துவம்—, பதம் - பதவி. அததுவா- வழி. ஊர்தி - வாகனம். உகைத்தனர் - செலுத்தினவராகி. விசும்பு ஆறு - ஆகாயவழியாக.

21. பரந்த - விரிந்த. (பரந்தவென்பதில் பெயரெச்ச அகர ஈறுகெட்டது) ஆகாயகவனர் - ஆகாயமார்க்கஞ் செல்பவர். கோத்து - மூடி. உகவாரி - யுகாந்தகால வெள்ளம்.

22. ஒத்து -ஒன்றுசேர்ந்து. ஒருமுகங்கொடு - ஒருவழிக்கொண்டு. போதரும் - வந்தும். அத்துணைக்கு- அவ்வளவுக்கு. தத்தி - தாவி. பூண்டது - பொருந்தியதாகிய. பாரிடத்தலைவன -பூதநாதனுகியசிவபிரான்.

23. எயில் -(திரிபுரமாகிய) கோட்டையை. சிதைத்த - அழித்த. பரம்பரன் - மேலானசிவபிரான.

24. உவரி -(பாற்) கட...

திரள் - திரண்ட. பூதர் - பூதத்தலைவர்.

25. தருக -அழைத்துவருக. வேத்திரம் - பிரம்பு. படை - ஆயுதம். ஓச்சி - செலுத்தி. மரபினுல் - கிரமப்படி. வாக்கு - வார்த்தை.

26. அம்புராசிகள் - சமுத்திரங்கள். பம்ப - நெருங்க. பரந்த -வியாபித்தன. (பரந்த என்பதில் முற்றிறுதி கெட்டது.)

27. வயிணவி - சத்தமாதர்களிலொருத்தி. காடுகாள் - ஐயனுர்தாய். பிரமாணி - சத்தமாதர்களிலொருத்தி. - குமரி - துர்க்கை. வீரி - காளி. மந்தாகினி - கங்கை. யோகினி, கொற்றவை -காளியேவற்பெண்கள்.

28. ஞாயில் - மதிலுறுப்பு. செய்குனறம் - செய்யப்பட்டமலை. சூளிகை-நிலாமுற்றம். தெற்றி-திண்ணை. சித்திரகூடம் -சித்திரமெழுதியகூடம். காவணம் - பந்தல். பூவணம் - மலர்களாற் சூழப்பட்ட அழகிய. அகரம- பிராமணரிருப்பிடம்.

29. உபரிகை - மேல்வீடு. வேதிகை. திண்ணை. சாளரம் - சன்னல். மாடை - பொன்னுலும். மாமதிமணியினுல்-பெரிய சந்திரகாந்தக் கற்களினுலுமாகிய. அரமியம் -நிலாமுற்றம். ஆடை-சேலை, படங்கு - மேற்கட்டி. ஓடை- நெற்றிப்பட்டம். மா - கரிய. யாளிகள் - சிங்கங்கள். மீளிகள் - வீரர்கள் - உருக்கள் - வடிவங்கள்.

30. இரசதம் - வெள்ளி. பூகதம் கமுகு. (பூகதமெண்பதில், தகரம் பிரதத்யேசமாகவந்தது) பழுக்காய்- பழுததகாய. புழத்தாறு - பழக்கொத்து. நித்திலம் - முத்தால்.

31. புறம - இடம், வேட்டு-விருமபி. அவண் - அவ்விடம்.

32. மா - பெரிய. புவனம் திரள்- உலககோடிகள். வகுத்தன - வகுக்கப்பட்டன. உருக்கள் (சித்திர) வடிவங்கள். உதித்தன -தோன்றப்பட்டன. மானும் - போலும். வான்கம்மியன்- தேவதச்சன். அருத்தவீதி - பொன்மயமானதெரு. அயன்கொடி- அன்னப்பறவை.

33. வல்லை - சீக்கிரம். நாற்றுவார் - தொங்க விடுவார். ஏல்லை - சூரியமண்டலத்தை. மொய்த்து - வளைந்து. நிரப்புவார் - நிரைப்பார். அணி - வரிசை.

34. தேன்-, குறிஞ்சி - குறிஞ்சிநிலம். சாந்து-சந்தனச்சேறு. முல்லை- முல்லைநிலம். மாதர் விளையாட்டால்- பெண்கள், (முல்லைக் கருப்பொருளா

யெகுரவைக்கூத்து) விளையாட்டினுல். மாமணித்திரள் - மாணிக்கக்கற்குவியல். பரல் -பருக்கைக்கல். படு- உண்டாகின்ற. பாலை - பாலை நிலம். பன்னீர், —(பலநீர்). நிரவி - கலந்து. நெய்தல் - நெய்தனிலம்.

35. அடை - இலை. கா- சோலை. நிரைத்து - வரிசைபடுத்தப்பட்டு. இருண்டதால் - இருள்மூட்டதால. கோமகன்- (தங்கட்குத்) தலைவனுன மன்மதனுடைய. சிலை -(அவனுடைய) வில். நாண் - கயிறு. கணை- பாணம். வேழம் - யானை. செவ்வி- சமயம். ஒருங்கு - எல்லாம். யானைக்கு, இருள் படுதலையுவமையாக்குக.

36. சுணணம் - பொற்பொடி. விடுபூ - தனிப்பூ. நிரைதது - வரிசையாக்கி. நறுக்கி - அழுதது. ஒப்பிடு -ஒன்றோடொன் றுவமைகாணப்படு. சரம் -மாலை (ஆகிய). குறித்த- குறிக்கப்பட்ட. குபபை - குவியல். உடைத்து - உடையது.

37. இமம்-பனி. அணி - அலங்காரம். தமனியப்பணி கொடு - பொன்னுபரணஙகளால். மணவணி- மணக்கோலம். அணிந்தமை - அலங்கரித்திருத்தல். காண்கெண - காண்பாயென்று.

38. ஆம்பல் - யானை. போர்வை- தோல். உட்சாத்தும் - உள்ளே யணியும். கலிகொள்-முழக்கங்கொண்ட. பணத்து - படத்தால். கச்சும்-அரைப்பட்டிகையும். ஒலியல் - வஸ்திரம். ஒளிறு - விளங்குகின்ற. காஞ்சனப் பட்டிகை - பொற்கச்சு. மலிந்து - நிறைந்து.

39. மோது - பொரு. வளை - வளைவாகிய. போதில் - பூவால். பொங்கிய - மிகுந்த. வாசிகை - மாலை. கரோடிகை - முடிமாலை. பணமுடி- படங்களை முடியிலுடைய.

40. தூ - பரிசுத்தம். மருப்பு - (விஷ்ணுவாகிய பன்றிக்) கொம்பு. மீன வோசனம் - (விஷ்ணுவாகிய) மீன்கண். சன்னவீரம்- தோள்வளை. காசு-இரத்நம். மீ-மேலாகிய. என்பு- எலும்பு. ஆரம் - மாலை. (விஷ்ணுவாகிய பன்றி, மீன்களின கொம்புங கண்ணுமாபரணமாகிய கதை கந்தபுராணத்துட்காண்க.)

41. கண் - கண்ணுகிய. ஒளிர்தரும் - பிரகாசிக்கின்ற. குறி-அடையாளம். கவின் - அழகிய. நுதற்குறி - நெற்றியிலணியும் பொட்டு. வள் நன்மேல் குழை - வளந்தங்கிய நல்ல மேன்மைபெற்ற காது. மணி - அழகிய. வளை-தோடு - சங்கக்குழை.

42. மணிப்பணி - இரத்நமுடையபாம்பாகிய. அஙகதம்-வாகுவலயம். பொன்அணிப்பணி - பொனனுற்செய்த ஆபரணஙகளையுடைய. (அணிப்பணி இருபெயரொட்டு) அகலமும்-மார்பையும். அகலம் - விசாலம். காண்குற - காணுதற்கு. தணிப்பு அணி தகைமையால் - (அணகண்கள்) குறைதல் பொருந்திய தன்மையால், சுருங்கியதன்மையால். பணிப்பணி-செய்துசெய்து. பார்த்த - நோக்கிய. பார்வையான் - கண்களையுடையபிரமன். (பணிப்பணி - இடைக்குறைகள்.)

43. பூண் - ஆபரணம். கண்ணுறீஇ - பார்த்து. எழீஇ - எழுந்து. பெற ஒணு - அடையக்கூடாத. தவம் - (ஆகுபெயர்) தவப்பயன்.

44. தருணம்-சமயம். அடல் ஏற்று-வலியஇடபவாகனமாகிய.நம்பிரான் - நம்முடைய திருநந்திதேவர். புறத்து - முதுகில். இவர்ந்தனர் - எழுந்தருளினர்.

45. நீலலோகிதர் -பிரமாவினெற்றியிற் றேன்றிய உருத்திரர். ஆடகர்-ஒருவகை உருத்திரர். அட்டகர்-, யுத்தி தத்துவத்தின்மே லிருப்பவர். நிமலர் - மலமில்லாதவராகிய. நூற்றுவர்- சத உருத்திரர்; இவர்: சிவபிரானிடத்திற் றேன்றியவர். மேலை- பழைய. அண்டத்துச்சியர் - அண்டமுடியிலிருக்கிற உருத்திரர். அண்டமூலம் - அண்டத்தின்கீழிருப்பவராகிய. விமலருத்திரர் - மலநீங்கிய உருத்திரர்.

46. கணநாதர் - பேய்க்கூட்டத் தலைவர். ஐந்து வாத்தியம் - தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு என்னும் பஞ்சவாத்தியங்கள். பேரிப்பரிறைய. (தாற்பரியம்) தமை - தம்மை. தெளிந்தவர் - அறிந்தவர், ஆத்மலக்ஷணமறிந்தவர்.

47. மோதகம் - ஒருபலகாரம். பணைக்கோடு - பருத்தகொம்பு; கயமுகாசுரனுக்காக ஒடித்த தன்கொம்பு. பாசாங்குசம் - கயிறு, தோட்டி. மூடிகம் - பெருச்சாளி வாகனம். மணத்து - விவாகத்தில். அங்குரம் என - முளைபோல. வேதபாரகர் - வேதபாராயணஞ் செய்யும் பிராமணர்.

48. பாவகன் - அக்கினி. ஊதை - வாயு. ஆலவட்டங்கொடு - விசிறியால். சுழற்ற - விசிற. பல்கொடை - பலவிதமாகக்கொடுக்கும். திரவியம் - பொருள்கள். அளகேசன் - குபேரன்.

49. நிருதி தென்மேற் றிசை காவலன். பாதுகை - பாதரக்ஷை. படிவர் - முனிவர்.

50. இமசலம் - பனிநீரை. கால் - காம்பு.

51. நுதல்விழி மணவாளனெனக்கூட்டுக. வளம் - சம்பத்து.

52. நிட்களம் - களங்கமில்லாமை. நிராமயன் - நோயில்லாதவன். மாயைத்திமிரம் - மாயையாகிய இருள். பணிமாற - முழங்க.

53. திளைத்து - நெருங்கி, அல்லது அழுந்தி.

55. மருகனுக்கு - மருமகனுக்கு. செம்மலை - (மருமகனாகிய அச) சிவபிரானை.

56. பாசனம் - சுற்றம். வலஞ்செய - வலஞ்சுற்றிவர. வாசம் - வசித்தற்கிடமாகிய புவனம்.

57. விண் - விண்ணுலகத்தவர். மிடற்றினார் - (நீல) கண்டத்தையுடைய சிவபிரான். கார் - மேகம். தோகை - மயில்.

58. கார்த்த - கரிய. பூங்குழல் - (அன்மொழித் தொகை) பார்வதி. கட்டழகு - பேரழகு. வார்த்தபேரெழில் - மிகுதியாகிய அழகு. பறிப்ரிது - மீட்டலரிது.

59. வார் - நீணட. உண்டு - உள்ளது.

60. வன்னி - அக்கினி. மாருதம் - காற்று. உரு - திருமேனி. மேலவள் - மேலாகிய உமாதேவி. ஒருகண் - ஒப்பற்ற (அக்கினிக்)கண்.

61. சங்கு - வளையல். ஆரா - உண்ணக்கூடாத. நுங்குவாரென - உண்பார்போல்.

62. காய்தரும் - சுடுகின்ற. மோயதரும் - கெடும், வருந்தும். சாயதரும் - சோரும். மோய்தல், கெடுதலென்பது "முந்தை வினையெல்லா மோயவுரைப்பன்" என்னுந் திருவாசகப் பாசுரத்தாலறிக.

63. சுழி - நீர்ச்சுழி (போல). கழிவிலாது - கெடாது. மோனம் - மௌனம்.

64. போய் - (புறம்)போந்து. அ - அந்த. வேயும் - மூடப்படும். வெந்தனம் - சாம்பராதல்.

65. ஆரம் - சந்தனம். ஆதவம் - வெப்பம். சேர - ஒருமிக்க.

66. நுதலை - (எம்முடைய) நெற்றியை. நுடங்கிய - முடங்கிய, வளைந்த. மதலை - கொன்றை. முதலை - முதற்பொருளாகிய சிவபிரானை. கலுழனை - கருடனுக்கு. மோடனம் - அவமானம். விதலை - நடுக்கத்தையுடைய. பாந்தள் - பாம்பு.

67. வஞ்சி - வஞ்சிக்கொடிபோல்பவள். நேடி - தேடி. துஞ்சல் போக்கி - நித்திரை விட்டு.

69. அஞ்சல் - அஞ்சற்க. கமலம் (கையாகிய) தாமரை, அபயாஸ்தம். அருட்கஞ்சம் - கருணைசெய்யும் (கையாகிய) தாமரை, வரதக்கை. காட்சியை - தோற்றத்தை. ஊஞ்சலாட - ஊசல்போற் போக்கு வரவு செய்ய. பூசல் - சண்டை.

70. அகில் - அகிற்புகை. உண் - ஊட்டப்பட்ட. நீர்முகில் - நீருண்ட மேகம். உண் - போன்ற. நிகிலம் - (உலகம்) எல்லாம். நாதர்க்கு - (பொ

துவாயிருக்கும்) தலைவருக்கு.

71. பரவும் - விரிந்த. சுரதம் = அன்பு. ஆர்தல் = உண்ணுதல்.

72. கீழ்ப்பட = தாழ்மை அடைய, (கீழிடத்தாக). எணமர் = திக்குப்பாலகர். புகர்-சுக்கிரன். கோள் இடம்கொள்ளுகின்றதானம், (கிரகங்களிடம்). வீணை-பயனற்றமையை(யாழ்). பொலிந்தது = விளங்கியது.

73. விந்தை - ஆச்சரியம். பவனம் - தெய்வலோகம். வெறுக்கை - வெறுப்பு, (பொன்). அலர் - பழி, (தாமரைமலர்). சலம் = சலனம், (நீர் வடிவம்). நநதிநாயகன் = சிவபிரான். விளர்த்தது - (மெலிவால்) வெளுத்தது, (வெண்ணிறமுற்றது).

76. தொடி - தோள்வளை. இமசலம் - பனிநீராலாகிய. சேறு - சேற்றில். துடியடி - உடுக்குப்போன்றபாதம். களிறு-ஆண்யானை. (கால் பெயர்க்கமாட்டாமல்) பிளிறும்-முழங்கும்.

77. பொருத்திடு- ஊட்டுகின்ற. நியதி - ஊழ். ஞாயில்- மதில். சிருக்கடை-தலைவாயில். கீழ்மை- சிறமை. அமைத்து-தராதரந்தெரிந்து. இடும் - உள்ளே செலுத்தும்.

78. பதம்பெயர்த்திலர் = அடியெடுத்து வைத்திலர்.

79. நீராஞ்சனம் = ஆலத்தி. அமைப்ப - உண்டாக்க.

80. தெய்வதப்பிணுக்கள் - தெய்வப்பெண்கள். கனுல = நெருங்க.

81. முருக்க - வாசனையை. ஒருகை - ஒப்பற்ற துதிக்கை. கயகருணன- (யானையாகிய) கயகருணன். தருகையால்- கொடுத்தலால். பாதுகை- பாதரகைஷ.

82. என்றுமுடைமை - நித்தியத்தன்மை சுவத்திகம்-மங்கலவாழ்த்து. நடைபடம்-பாவாடை. பற்றிசென்றூரெனக் கூட்டுக.

83. மருகு - மருகன். வாசம் -வசித்தல். பெற்றீள் - அடைந்தாளாகிய மேனை. விளக்கி - கழுவி.

84. வேதி - திண்ணை.

85. கூர்மாண்டன் -.ஒருவகையுருத்திரர். ஒருங்கு - (அவர்) கூட. ஆடகேசன் = பொன்னிறஉருத்திரர். உருத்திரர் = (மற்றை) உருத்திரர். கம்பலம் - மேற்கட்டியுடைய. இருக்கை - இருப்பிடங்களை. அருள்செயதார் = இருக்குங் குறிப்புணர்த்தினர்.

87. உரகேசன் = ஆதிசேடன். விதிர்த்தனள் - அசைத்தனள்.

88. வெரீஇ - பயந்து. இருவோர் - பிரமவிஷ்ணுக்கள்.

89. கவனம - வேகம். பவனம்- தெயவலோகத்தை.

90. கும்பசம்பவம். கும்பத்திற் பிறததல்.

91. எதுபணி - யாதுவேலை. தீபம் - தீவு. எடுத்து - வகைபிரித்து.

92. மாககலம்- கப்பல்.(வழக்கு) நாவலநதீபம் - சம்புத்தீவு. தீவிசை = தீவிற்பொருந்திய. நங்குரக்கல்—,

93. நாவாய் - மரக்கலம். புறம்- இடம்.

94. மனைவாழ்வு - இல்லறவொழுக்கை திராவிடமுனிவ - தமிழ்முனிவனே.

95. மெலிவு - (வடதிசை) வருத்தம். தென்மலைக்கு - பொதியமலையிடத்து. துருவன் - துருவசக்கரம். ஏற - (திருவுளத்துக்குப்) பொருந்தாத. வேட்டு -விரும்பி. அருளால்- (சிவபிரான்) ஆஞ்ஞையால்.

96. காண - தரிசிக்க. எனும் = என்றுசொல்லப்படும். அசலம்-மலை. ஒருகாட்சி - ஒப்பற்ற திருமணக்காட்சி. போநதேன் - வந்தேன்.

97. பனகநாண் - பாம்பாகியகயிறு. (பனகம் இடைக்குறை) காமகோட்டி - உமாதேவி. சன் - பிறந்த. அகவரை = இடத்தையுடையமலை, இமயமலை. அ-அந்த. நகவரை - நகமாகிய மலைக்கு. தெக்கணபால் = தெற்குப்பக்கத்தில். முதல் உள-முதலாயுள்ள தலஙகள்.

98. மின்பாவும் - பிரகாசம் பரப்பும்.

99. பொதிகை = பொதியமாகிய.

வடமலை - வடதிசையிலுள்ள மலையாகிய. மின் -மின்னலே. மலைக்கும்- பொருதும். விபுலம் - இமயமலை. நியமம் - பணமுவந்திருத்தல்

101. மகபவொலிவால் - யாகத்தின் விளக்கத்தால். வேள்வி வேந்து - இந்திரன. வடுகச்செமமல் - வயிரவர்.

102. முயஙகும் - தழுவும். துயல்வரு - அசைகின்ற. கோடு - கொம்பு. உழக்கும் - கலக்கும்.

103. கழஙகு - கழற்சிக்காய். இந்து - சந்திரனே. ஆள் -அடிமைகொள்கின்ற. சந்து - சந்தனத்தை. ஆள்- ஆள்கின்ற, தோயகின்ற. தடிப்ப - பருக்க.

104. நிலை - நிலைக்கின்ற. கடமுனிவ - குடத்திற்றோன்றியமுனிவனே.

105. அணியாய - அழகாகி. ஊழிஆழி - உகாந்தவெள்ளத்தை தாஙகு - (உள்ளேஅடக்கொட்டாமல்) பாதுகாக்கின்ற. எயில் - கோட்டை. மோசனம் - நீக்கம்.

107. அதநலை - அவ்விடத்தில். அநநீர் - அச சிந்திர கஙகை.

109. நின்ற - தஙகிய.

111. முநது - முற்காலத்தில். சநதமலை - சந்தனசலமென்னும பொதியமலை. அம் அலை - நீரும, அலையுமுடைய.

112. பொன்னிந - காவிரியாறு. ஒழுகுந்துறை - நிகழும்ம். பெணடனைமயார் - பெண்ணின் தன்மையுடையார். உரித்தோ - நியாயமோ. (தாற்பரியம்) கெழு-பொருந்திய தகை - தகுதியையுடைய. குறித்து - வரையறுத்து.

113. உம்பர் - மேலாகிய. கோவணத்தால் - கோவணத்தின்பொருட்டு. பெருமான் - பெரியமகானுகிய. அமர்நீதி - அமர்நீதிநாயனுர். துலை- தராசு. (இக்கதையைப்பெரியபுராணத்துட் காண்க.)

114. கோண் அற - சாய்தலில்லாமல். இரு - பெரிய. ஒதியை - (அவ்மொழிச் சோலை) கூந்தலையுடைய பார்வதியை. அநியர் - மலையரசர். பொற்பினை - அழகாயுள்ளவளை ஒப்பனை - அலஙகாரம்.

115. பேரெழிலுக்கு - பேரழகாயுள்ளவளுக்கு. இஙமேல் - இப்மையில். பேதைமை - அறியாமையாகிய. அளவுக்களவாம் - (அவரவர்க்கு தக்கக) அளவுக்களவாகிநிற்கும்.

116. காலத்தின் - (உரிய) காலத்தின். முன்னெண்ணிய - முதலிலெண்ணப்பட்ட. பூசைக்கடன் - பூசைமுறைப்படி. சமைந்தாள் - அமைந்தாள்.

117. மணிக்கலை - இரத்நமிழைத்த பரிவட்டம். அணி - அலஙகாரம். செஙகோ -சிவந்தகையால். அணிக்கு - ஆபரணஙகளுக்கு. அணி - அழகு.

118. தாரகணம் - நக்ஷத்திரக்கூட்டம். தலைபபணி - தலையாபரணமாகிய. உத்தி - திருவுழுப்பு, இதைக (ற) காலத்து சூட்டியெனபர். நிருதநிறுள் - அணிந்தாள்.

119. (குழல்விண்டுவி - கூந்தலாகிய மேகத்தினிடத்தில். நுணநூரி - நுட்பமாகிய நீர்த்திவலை. முத்தணி தொஙகல் - முதறுக்கோவைசெய்தமாலை. அசைத்து -கட்டி. பட்டம - நெற்றிப்பட்டம. வீக்கி - கட்டி. ஒருமைப்பிறை-ஒருபிறைசந்திரன். இரு - பெரிய. மான - ஒப்ப. இருமை - பெருமையுடைய.

120. குமிழ் - குமிழமலர்போன்றநாசியில். முத்தம் - (மூக்கணியாகிய) முத்தை. கொவ்வை - கொவ்வைபபழம்போலும் இதழ்கள். முகிழ்க்கும் - மூடிக்கொண்டிருக்கின்ற. முத்தின் - (பற்களாகிய) முத்துக்களைப்போல். அமர - தஙக. தவ - தவஞ்செய்தற்காக. ஊசியில் நிற்கும் - ஊசிமுனையிலேநிற்கும. ஆரம் - முத்து. பொற்குழையில் - அழகியகாதில். குழை - (மகரக) குழை. காலநீலம் - அன்றலர்ந்த நீலோற்பல நிறத்தை. உமிழ் - கக்குகின்ற. கட

விற்புடை - கடலின்பக்கத்து. பாய் - தாவுகின்ற. சுறவு - சுறாமீன். (காளநீலமென்றும்பாடம்.)

121. வயிரப்பணி - வயிரங்களாற்செய்த வேலை. வயக்குகின்றாள் - விளங்க அணிகின்றாள். கவற்றும் - கவலையடையச்செய்யும். எயிலை - திரிபுரத்தை. (அவரது) வாளி - விஷ்ணுவாகிய பாணம். தனை - (கண்ணாகிய) தன்னை.

122. வரும் - வருகின்ற. நாண் அணி - கயிற்றோடு கூடிய ஆபரணங்கள். மல்கு - நிறைந்த. வலம்புரிக்கு - வலம்புரிச்சங்குபோன்ற கழுத்தில். திருமங்கலநாண் - திருமங்கலயத்தை. தாங்க - (ஆதனமாகச) சுமக்க. மதாணி - பதக்கம். கலமான - ஆபரணமான. கடகம் - கங்கணம். சரிசங்கு - (இருபெயரொட்டு) சரியாகியவளையல். பெய்தாள் - இட்டாள், அணிந்தாள்.

123. மதர் - களிப்பு. விழிப்பொருகாரை - கண்ணாகிய மோதுகின்ற மேகத்தை. உததிக்கு - (அக்கண்ணாகிய) கடலின்கண். ஒன்று - பொருந்திய. விது - சந்திரனை. வைத்தன - வைத்தாற்போலும். வெள்ளிவளைக்கு - வெண்ணிற வளையலுக்கு. முகிழ்த்த - குவிந்த. கஞ்சம் - (கையாகிய) தாமரையை. கதிர்வைத்து - சூரியனைவைத்து. விரித்தன - மலர்த்தினாற்போல. (உததிக்கு - உருபுமயக்கம்.)

124. எழு - எழுகின்ற. முத்தலம் அவை - திரிலோகங்களாகிய அவைகளை. ஈன்று - (உமாதேவி) பெற்றும். முற்றுவது - முதிர்வது. முற்றா - கெடாத. செழு - வளமும். முத்தம் - பிரியமும் உடைய. முலை - கொங்கையே. துணைமுக்கணர் - நாயகராகியசிவபிரான். செவ்வி - (உன்) சமயத்தை. அடைய - (காத்திருந்து) பெற. கெழுமு - நிறைகின்ற. இளந்து - சொல்லி. பைம்பூண் - பசிய ஆபரணங்கள். முழுமுத்தம் இடற்கு - பூர்ணமாகிய முத்தங் கொள்ளற்கு. இணை - ஒப்பாக. (முலை - அண்மைவிளி. கெழுமுத்தவம் - முலைத்துணை யென்பவற்றில், சந்தநோக்கித்தகரங்கள் இரட்டித்தன. ஈன்றும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது.)

125. முருகும் - அகிற்சந்தனமும், குங்குமம் —, மான்மதம் - கஸ்தூரியும். மொண்டு - முகந்து. (முலைகளில்) தொயில் - கோலம். தீட்டி - எழுதி. பருமம் - பதினெண்கோவைமணி. மேகலை - எழுகோவைமணி. தந்து - இட்டு, அணிந்து. பனி - குளிர்ந்த. கலாபம் - பதினாறுகோவைமணி. அருமென்கலை - அரிய மிருதுவாகியபுடைவை. (தொயில்இடைக்குறை.)

126. எது - யாது. எங்குமா - வருந்துமாறு. புலம்பு - ஒலிக்கின்ற. பாதசாலம் - பாதசரம். கீதம்பொலி - இசை விளங்குகின்ற. கிண்கிணி - சதங்கை. கிளர்த்தி - பிரகாசிக்கச்செய்து.

127. கண்ணெச்சில் - திட்டிதோஷம். திருப்பதம் - திருவடி. திருப்பதம் - சிறந்தபதவி. செல்வி - இலக்குமி.

128. ஆற்றால் - முறையால்.

129. எல் - பிரகாசம். கதியும் - மோக்ஷமும். கரதலத்து - கைகளினால். இயற்கை - தன்மை. காட்டி - (அவ்விருவர் கைகளுக்கும்) காண்பி

130. அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு. உறுத்து - ஊட்டுகின்ற. திலத்தமை - திலோத்தமை.

131. யோகினி - காளி. நடைப்பாவாடை - வழியில் விரிக்குஞ் சேலை. சுண்ணம் - பொற்பொடி.

132. ஒல்கி - அசைந்து.

133. குலத்திரள் - (மலையாகிய) குலக்கூட்டம். தொய்யும் - வளையும். மதி - அறிவு. விதி - ஊழ்.

134. பெற்றார் - அடைந்தவர்.

136. அந்நிலை - அப்பொழுது. கொழுந்து - பிள்ளை. கன்னி - இள

மை. பாணி - கை. அமைத்து -வைத்து.

137. பணிலநாதம் - சங்கினொலி. ஆசி - ஆசீர்வாதம். குரவை - குலவை.

138. பவுரி - கூத்தின்விகற்பம், பலவகைக் கூத்து.

139. உழுவன் - (பிரமனாகிய) உழுதொழிலுடையவன். சடங்கு - கிரியை. செய் - வயல். திரவியம் -(ஓமப்) பொருள்களாகிய சமித்து முதலியவை. வித்தி - விதைத்து. காமரு - அழகு. தேனு -காமதேனு. மகம் - (விவாகமாகிய) யாகத்தின்.

140. குணில் - குறுந்தடியால். இயம்ப - ஒலிப்ப. குளிற - முழங்க. சுருதி -வேதவிதிப்படி. இணைஇலி- ஒப்பில்லாதவனாகிய.

141. வேந்தன் - அரசனாகிய ஆதிசேடன். ஆயிரப்பெருந்தீபம் - ஆயிரப்பெருந்தூரியென்னு மொரு மங்கலவிளக்கு. குலம் - நன்மை. வேள்வி - (விவாக) யாகச்சடங்கு.

142. செப்பொடு - செப்பினும். (உருபுமயக்கம்) திருப்புயம் - (சிவபிரானுடைய) சிறந்ததோள்களை. கொப்பு ஒடும் - கொப்புடன். (கொப்பு - காதணியினொன்று.) குலத்தொடு - குலமாகிய மலைகளினும். பணைப்பு - பருத்தல்.

144. அருத்தி - ஆசை. திருத்தி - செவ்வைசெய்து. பாசனம் - உண்கலத்தில்.

145. சுகந்தம் - (ஆகுபெயர்) மலர்மாலை. கெழு -பொருந்திய. இயற்றினன் - அமைத்துவைத்தவனாய். நிமலம் - பரிசுத்தமாகிய. பாசனசேடம் - பாத்திரசேடம். (சேடம் - மிச்சமாயிருப்பவை.) தேசன் - ஒளிவடிவாகிய சிவபிரான்.

146. உணவை - உண்டிப்பொருள்களை. திமிலம் - பெருமுழக்கம்.

147. சொல் அறநின்றார் - பேச்சில்லாமலிருந்தவர், யோகிகள். அறல் - கருமணல்.

148. மலையாட்டி - மலையையாளும் அரசி, மேனையாகியமாமி. சேர்படன் - சந்திரன். ஆர் - ஆத்தி.

149. போந்தார் - (உருத்திராதிய ரவரவரிடத்துக்குப்) போனார்.

151. மவுனநாள் - யோகஞ்செய்கின்றகாலம். பவனம் - தேவலோகம்.

152. சூர் - சூரன். அலக்கண்துயர்-அலக்கணாகிய துன்பம். முறையிட்டார்க்கு - தங்கள் குறை கூறிய அத்

153. இராசியம் - மறைவு. உய்-அ

154. அறுமீன் - (கார்த்திகைமுதலிய) ஆறு நக்ஷத்திரங்கள். தமரநீர் - முழக்கமுள்ள கடல்சூழ்ந்த.

155. படிவம் - உருவம்.

156. எழு - (நாரதர்யாகத்தில்) எழுந்த. தகர்மேல் - ஆட்டின்மேல். நவவீரர் - ஒன்பது (தம்பிமாராகிய) வீரர். மேடமேன் - மேடராசியினிடத்து. ஞாயிறு என்ன - சூரியனைப்போல. வெந்நிட -புறங்காட்ட. கதி நடாத்தி - வேகமாகச்செலுத்தி. விதி - பிரமனை.

157. மிறைபுரி - பயப்படுத்துகின்ற. சூர் - சூரன். தீ-செல்வனும் சேவல் - அக்கினியாகிய கோழிக்கொடி.

158. தானை --ஆயுதம். வேல் -- சத்திவேல். கிருத்திமம் - பூதம். தானை - சேனை. மருத்துவர் - அசுவினி தேவதைகளாகிய தேவ வைத்தியர். மருத்துவன - வைத்தியன்.

159. சுவற்றி - வற்றச்செய்து. குன்றமெறிந்து - கிரவுஞ்சகிரிமேல் வேலைப்பிரயோகித்து. சூதம்- (மாமரமாகிய) சூரபன்மனுடனை.

160. மரகதகலாபம் - மரகதத்தம்போலும் தோகையும். துங்கமணிஅணி - உயர்ந்த மணிபோலும் அழகிய. விழி - கண்களையுமுடைய. மயூரக்குரகதம் - மயிலாகியகுதிரை: உகைத்து - நடாத்தி. வெண்பால் - வெள்ளிய பால் நிறமுள்ள. (அக்கினியாகிய) குக்குடத்துவசம் - கோழிக்

கொடி. [அக்கினி வெண்ணிறமுள்ளதென்றது, தருக்கநூலார் கூறு நுட்பமுறைப்படி.]

161. புரந்தரன்மகள் - தெய்வயானை. புள்ளிமான்மகள் - வள்ளிநாயகி. தணியல - திருத்தணிகை.

162 பொலிவு - விளக்கம். தாபதர் - (நைமிசாரணிய) முனிவர்.

---

**மூன்றாவது:— திருமால் சிவபிரானை சருக்கம்.**

2. கதி - புகலிடம் (ஆகப்). புகல் - புகுகின்ற.

3. கோட்டம் - கோணல். போதாய் - (தென்றிசைக்குச்)செல்வாய்.

4. விரிகூட - (தொகை வகையோடு) விரியுஞ்சேர. புரிகூட - முறுக்குதல்சேர. அரிகூட - விஷ்ணுவினுடன.

5. பரதன் - பரதனென்னும் அரசன். கருமகண்டம - (நவகண்டத்துளொன்றாகிய) கருமபூமி. குமரிகண்டம் - குமரியெனபவளா லாளப்பட்ட குமரிகண்டமாகிய பூமி. விசையத்தண்டம் -வெற்றியையுடைய யோகதண்டம். விளக்கா - தீபமாக. கிரௌஞ்சவரை - கிரவுஞ்சமலையின். இருட்படலம் - இருட் கூட்டத்தை.

6. வரைக்கு - (அம்) மலைக்கு. அமைந்து - இட்டு. மைந்தன் - குமாரக்கடவுள். தன் - தன்னுடைய. தன் என்பது - சிவபிரானை.

7. மேருவுடன் - மேருமலையினும். புணர்ப்பு - சூழ்ச்சி. விந்தம் - விந்தமலை. மடுத்து - தடுத்து, (நேரே செல்லவொட்டாமல்) தடைசெய்து. துன்றுதோங்கி - நெருங்கிவருதற்கிடமில்லாமல் வளர்ந்து. நேரியர் - மேலோர். பூரியர் - கீழோர். தேரும் - தெளியும். நெறியும் - மார்க்கத்தையும். தீர்த்து - நீக்கி. சீரியரல்லார் - கீழோர். இறுமாந்து -கரு [illegible]ர் கொண்டது. நேரியர்க்கும் பூரியர்க்கும் மூன்று, இரண்டு, ஒன்று வழியென்பது - மேலோரும் மேலோரும் எதிர்ப்படில் இருவரும் விலகிச்செல்லுதலாலும், மேலோரும் கீழோரும் எதிர்ப்படில் மேலோர் மாத்திரம் விலகிச்செல்லுதலாலும், கீழோருங் கீழோரும் எதிர்ப்படில்இருவரும் விலகிச் செல்லாமையாலும், முறையே காண்க. (நெறிதீர்த்தல் - இரண்டு பக்கமும விலகுதற் கிடமிலலாது பருத்து நிற்றல்.)

8. கர - கள்ளத்தையுடைய. விந்தவரை - விந்தமலை. குடுமி - உச்சியை. பற்றி - பிடித்து. கரவிந்தர்- தகுதியாகிய சந்திரனையணிந்த சிவபிரான். வரவு - வருதல். (கர - கரவு என்பதின் ஈறுகெட்டபெயர்.)

9. செம்புவரை - தாமிரபருணி நதியையுடைய பொதியமலை. வெம்பு - சுடுகின்ற. வரை - மூங்கில்களையுடைய. குடுமி - உச்சி. படிந்து - (பாதலத்து) அழுந்தி. அதிசம்பு -முதலாகிய சிவபெருமானுடைய அரைநாண்துகில் - அரையிற் கட்டும் கயிறு, வஸ்திரம். சாதி- உயர்ந்த. சலம் - பெருங்கோபத்தால்.

10. உருத்திராவணம் - கேடு. குரு - குருவாகிய. திராவிடமுனி- தமிழ்முனிவரை. இராவணம் - இராத்திரி நிறம் (போல). இருண்ட-இருளடைந்த. வில்வலன்—, இதை - இல்வலனெனவுங்கொள்ளலாம். இல்வலனென்றே ஸமஸ்கிருத கந்தபுராணங் கூறுகின்றது.

11. சாலை - (பன்ன) சாலையுள்ளே. மறு முனி - குற்றங் கடிந்த. தண்டுவைத்து - அரிசியால். கருனை - பொறிக்கறி. மறிசெய்து - ஆடுசெய்து. ஆக்கி - சமைத்து. கூவ - (வாதாவியென்று) அழைக்க. கறு முனி-கோபிக்கின்ற அகத்தியரிடத்தில். கறி -பொறிக்கறியாகிய வில்வலன்.

13. அகங்கை - உள்ளங்கை. தைவரல் - தடவல். சமித்தான்-சீரணித்தான். முடித்துவீட்டி - கொன்று அழித்து. கோதமி - ஓர்நதி.

